# நற்றிணையில் பூக்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**அழ.அமுதா**
பதிவு எண் : 1666

**நெறியாளர்**

**முனைவர் இரா.கீதா**

**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது.
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

நவம்பர் - 2020

**முனைவர் இரா. கீதா,**

உதவிப் பேராசிரியர்,

இராமசாமி தமிழ்க்கல்லூரி,

காரைக்குடி – 630003.

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**"நற்றிணையில் பூக்கள்"** என்னும் தலைப்பில் திருமதி **அழ.அமுதா** அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் பட்ட (தமிழ்) ஆய்வு மேற்கொண்ட காலத்தில் பணிக்கப்பெற்றது. இவ் ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப் பெறவில்லை என்று சான்றளிக்கிறேன்.

நெறியாளர்

(முனைவர் இரா. கீதா)

**அழ. அமுதா (பதிவு எண் : 1666)**
முனைவா் பட்ட ஆய்வாளா்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630003.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**“நற்றிணையில் பூக்கள்”** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவா் பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ் ஆய்வேடு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர்

(அழ. அமுதா)

உறுதிக் கையொப்பம்

**முனைவா் இரா. கீதா,**
உதவிப் பேராசிரியா்,
இராமசாமி தமிழ்க்கல்லூரி,
காரைக்குடி – 630003.

# நன்றியுரை

**"நற்றிணையில் பூக்கள்"** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள முதற்காரணமாய் அமைந்த கடவுளுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த **இராமசாமி தமிழ்க்கல்லூரி நிறுவனர் குடும்பத்தினர்களுக்கும், பத்மபூஷன்** டாக்டர் **அழகப்ப செட்டியார்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த வணக்கம்.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய நம் பல்கலைக்கழகத் **துணைவேந்தர், பதிவாளர், ஆய்வு முதன்மையர்** அவர்களுக்கும், **தமிழ்த்துறைத் தலைவர்** அவர்களுக்கும் என் உளம்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

எனது ஆய்விற்கு நெறியாளராக இருந்து, ஆய்வுத் தொடக்கம் முதல் இறுதி வரை நல்லதொரு ஊக்கத்தினையும், செம்மையானக் கருத்துக்களையும் அளித்து, ஆய்விற்கான உதவிகளை இன்முகத்தோடு நல்கிய நெறியாளர் முனைவர் **இரா. கீதா,** உதவிப் பேராசிரியர், அவர்களுக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் என் உளம்கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என்னை ஆய்வுலகில் நன்முறைப்படுத்தியும், ஆய்வு குறித்து அணுகியபோதெல்லாம் அறிவுரைகள் வழங்கியும், என்னை ஊக்கப்படுத்தியும் ஆய்வினைச் செம்மையாகச் முடிக்க செய்த பேராசிரியர் மற்றும் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **மு. பாண்டி** அவர்களுக்கும் என் பணிவான நன்றியை உளமார உரித்தாக்குகிறேன்.

என்னை உயர்கல்வி படிக்க ஊக்கப்படுத்தி, வழிகாட்டியாக இருந்த கடிகை **இரா. இரவிச்சந்திரன்** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான பல்வேறு அறிவுரைகளைக் கூறிய **அழகப்பா பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், இராமசாமி தமிழ்க்கல்லூரி முதல்வர்** மற்றும் **பேராசிரியர்கள்** அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக்கு நன்முறையில் உறுதுணைபுரிந்த **திரு சு.பிரபாகரன்** முனைவர் பட்ட ஆய்வாளர் அவர்களுக்கும், **இராமசாமி தமிழ்க்கல்லூரி ஆய்வு மாணாக்கர்கள், அழகப்பா பல்கலைக்கழக ஆய்வு மாணாக்கர்கள்**, இளநிலை உதவியாளர் திருமதி. **ச. அமரஜோதி,** அலுவலக உதவியாளர் **ஆறுமுகம்** அவர்களுக்கும், ரூசா ஆய்வுத்திட்டச் செயலக உதவியாளர் **ச. ஜெயந்தி** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குரிய நூல்கள் வழங்கிய **இராமசாமி தமிழ்க்கல்லூரிக்கும்,** நூலகர் **நாச்சியப்பன்** அவர்களுக்கும், அகவை முதிர்ந்த தமிழறிஞர் **சா.க. முருகேசன்** (புத்தகத்தாத்தா) மதுரை அவர்களுக்கும், **அழகப்பா பல்கலைக்கழக பொது நூலகத்திற்கும்** எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்ட ஆய்வில் உறுதுணையாக இருந்த எனது **பெற்றோர்** மற்றும் **எனது குடும்பத்தார்க்கும்,** என் அன்பு மகன் **கா.பிரதீப்குமார்**, என் அன்பு மகள் **கா. அஸ்விதா** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டை செம்மையுற வடிவமைத்து கட்டமைப்பு செய்த **தோழா அச்சகத்திற்கும்** என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நன்றியுடன்

**அழ.அமுதா**

## சுருக்கக் குறியீடு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அகநா.கட.வாழ்த்து | - | அகநானூற்று கடவுள் வாழ்த்து |
| உ.ஆ | - | உரை ஆசிரியர்கள் |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| கலித் | - | கலித்தொகை |
| கார்நாற் | - | கார் நாற்பது |
| குறுந் | - | குறுந்தொகை |
| குறிஞ் | - | குறிஞ்சிப்பாட்டு |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சீவக | - | சீவக சிந்தாமணி |
| சூடா.நிக | - | சூடாமணி நிகண்டு |
| சூடா.மர.பெயர் | - | சூடாமணி மரபுப்பெயர் |
| திணை.நூற் | - | திணைமாலை நூற்றைம்பது |
| தொல்.எழு | - | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல்.பொரு | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொல்.புற | - | தொல்காப்பியம் புறத்திணையியல் |
| தொல்.மரபு | - | தொல்காப்பியம் மரபியல் |
| தொல்.சொல் | - | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| நற் | - | நற்றிணை |
| நாலடி | - | நாலடியார் |

| | | |
|---|---|---|
| நான்மணி | - | நான்மணிக்கடிகை |
| நெடுநெல் | - | நெடுநெல்வாடை |
| ப | - | பக்கம் |
| ப.ஆ | - | பதிப்பு ஆசிரியர்கள் |
| பக் | - | பக்கங்கள் |
| பரி | - | பரிபாடல் |
| பதிற்று | - | பதிற்றுப்பத்து |
| பட்டின | - | பட்டினப்பாலை |
| பா | - | பாடல் |
| பிங்.நிக | - | பிங்கல நிகண்டு |
| புறநா | - | புறநானூறு |
| பெரும்பாண் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பெரி. திருமொழி | - | பெரியாழ்வார் திருமொழி |
| பொரு.ஆற் | - | பொருநராற்றுப்படை |
| மதுரைக் | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு | - | மலைபடுகடாம் |
| முல்லை | - | முல்லைப்பாட்டு |
| முருகு | - | திருமுருகாற்றுப்படை |
| மேலது | - | மேலே குறிப்பிட்டுள்ள நூல் |
| p | - | page |
| pp. | - | pages |
| Edi | - | Edition |

# பொருளடக்கம்

## முன்னுரை

சங்ககால மக்களின் வாழ்வியலை விளக்கிக் கூறும் வகையில் அமைந்த இலக்கியங்களில் நற்றிணை தனித்துவமானது. இயற்கையோடு இயைந்த வாழ்க்கைச் சூழலில் காடு, மலை, வயல், கடல் சூழ்ந்த நிலப்பகுதிகள் ஆகியன தமிழரின் வாழ்விடமாகவும் பண்பாட்டின் உறைவிடமாகவும் அமைந்துள்ளன. இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர்களின் அகப்புறம் வாழ்வியல் குறித்துப் பாடியப் புலவர்கள், அவற்றை இயற்கைப் புனைவு, உவமை, உருவகம், உள்ளுறை, இறைச்சி, திணை, துறை, குறிப்புப் பொருளாகத் தம் பாடல்களில் படைத்துள்ளனர். இவற்றுள் நற்றிணையில் பூக்களின் வகைகளும், அதன் இயல்புகளும் பயன்களும், அகப்புற வாழ்வின் மேன்மையை உணர்த்தும் வகையில் சுட்டப் பெற்றுள்ளமையை இவ்வாய்வு நுட்பமாகவும், செறிவாகவும் கண்டறிந்துள்ளது.

### ஆய்வுத் தலைப்பு

**‘நற்றிணையில் பூக்கள்’** என்பது இவ் ஆய்வின் தலைப்பாகும். மக்களுக்கும், பூக்களுக்குமான தொடர்பு பிறப்பு, இறப்பு, இன்பியல், துன்பியல், உயர்வு, தாழ்வு முதலிய மனித வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் முக்கியப் பங்கு வகிக்கின்றது. பண்டையத் தமிழரின் பண்பாட்டுக் கூறுகளுள் ஒன்றான பூக்களின் பண்பாட்டை நற்றிணைப் பாடல்களின் வழிக் கண்டு வெளிப்படுத்தும் நோக்கில் இந்த ஆய்வுத் தலைப்பு அமைந்துள்ளது.

### ஆய்வு நோக்கம்

பழந்தமிழரின் இயற்கையோடு இயைந்த வாழ்வில் நிலம், உணவு, உடை, ஒப்பனை, மருத்துவம் போன்றவை பண்பாட்டில் உள்ளத்துணர்வுகளை வெளிக்கொணரும் கருவிகளாகத் திகழ்கின்றன. பூக்களின் பயன்பாடுகளை, பண்பாட்டுக் கூறுகளை எட்டுத்தொகை அக நூலான நல்ல என்ற அடையோடு வெளிப்படும் நற்றிணையின் பாடல்களின் வழி வெளிக்கொணர்வது இவ்ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களில் 'பூக்கள்' பல்வேறு சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன. எட்டுத்தொகை அக நூலான நற்றிணையில் அமைந்துள்ள நானூறு பாடல்கள் ஆய்வு எல்லையாக அமைந்துள்ளன.

## சான்றாதாரங்கள்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

நற்றிணையில் நூற்றி எழுபத்தைந்து புலவர்கள் பாடிய நானூற்றி ஒரு பாடல்களில் நானூறு பாடல்கள் முதன்மைச் சான்றாதாரங்களாக அமையப் பெற்றுள்ளன.

### துணைமைச் சான்றாதாரங்கள்

சங்க இலக்கியம் குறித்ததிறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள், இணையதளச் செய்திகள் மற்றும் இவ் ஆய்விற்குத் துணை நிற்க வல்ல பூக்கள் சார்ந்த நூல்களும் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வுக் கருதுகோள்

சங்க அகப்பாடல்களின் கருத்துக்கள் முதல், கரு, உரி என்னும் முப்பொருள்களின் அடிப்படையில் அமையப்பெற்றவை. இவற்றுள் கருப்பொருள்கள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வனவாகும். அக் கருப்பொருட்களுள் பூக்களும் ஒன்றாகத் திகழ்கின்றன. அந்த வகையில் பூக்களை அடிப்படையாகக் கொண்டு இயற்கையின் பின்னணியில் பாடல்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்கள் ஒவ்வொன்றும் அக்காலச் சமுதாயத்திற்கு மட்டுமின்றி இக்கால மக்களுக்கும் தேவையான வாழ்வியல் நுட்பங்களைப் பல்வேறு வழிகளில் வெளிப்படுத்துகின்றன. அவற்றுள் நற்றிணையில் அமைந்துள்ள பூக்கள், வகைகளின் அடிப்படையிலும், அவற்றின் இயல்புகளும், பயன்களும் அக்காலமக்களின் அகப்புற வாழ்வியல் நுட்பங்களை வெளிப்படுத்தும் முறையிலும் தனித்துவம் பெற்றுள்ளன. சங்ககால மக்களின் வாழ்வியல் நுட்பங்கள் நற்றிணைப் பூக்களின் வழியேயும் தனித்து வெளிப்படக்கூடும் என்பது ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

நற்றிணையிலுள்ள நானூறு பாடல்களில் அமைந்துள்ள பூக்களின் இயல்புகளை விளக்கும் முகமாக விளக்கவியல் அணுகுமுறையும், அக மாந்தர்களின் வழி வெளிப்படுத்தும் பூக்களைத் திணை நில அடிப்படையிலும், புலவர்கள் அடிப்படையிலும் பகுத்தும், தொகுத்தும் காணும் முகமாகப் பகுப்பாய்வு அணுகுமுறையும், நற்றிணையில் காணலாகும் பூக்களைக் கொண்டு சங்ககால மக்களின் அக வாழ்வுக் கட்டமைப்பு, அதன் சிறப்புகளை வெளிக்கொணரும் முகமாக சமூகவியல் அணுகுமுறையும் ஆய்வு அணுகுமுறைகளாக அமைந்துள்ளன.

## ஆய்வுச் சிக்கல்

பண்டையத் தமிழரின் வாழ்வியல் முறை அகம், புறம் எனத் திணைகள் அடிப்படையில் அமையப்பெற்றதாகும். அக இலக்கியங்களில் சுட்டப் பெற்ற பல பூக்கள் அப்படியே உள்ளன. அவற்றுள் சிலப் பூக்கள் மாற்றம் பெற்றுள்ளன. ஒருசில பூக்களுக்கு அக்கால, தற்கால ஆங்கிலம் மற்றும் அறிவியல் தாவரப் பெயர்கள் பல்வேறு தரவுகளின் வழித் தேடுவது என்பது இந்த ஆய்வின் சிக்கலாகும்.

## ஆய்வுப் பயன்

மனித இனம் தோன்றி காடுகளில் வேட்டை இனக் குழுச் சமூகமாக உருவாகி, வேளாண்மை, பிற தொழில்கள், நாகரிகம், தகவல் தொழில்நுட்பம், செயற்கை, நுண்ணறிவியல் எனப் பலநிலைகளைக் கண்டுள்ளது. தொடக்கம் முதல் இன்று வரைப் பூக்கள் பலவகையில் பயன்பட்டு வருகின்றன. இன்பியல், துன்பியல் என இரு நிலைகளிலும் பூக்களின் பங்கு தவிர்க்க இயலாதது. தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்கள் உலகச் செம்மொழி எனும் தகுதியைப் பெறத் துணைநின்றவை. இவற்றில் பூக்களின் தன்மைகளை நற்றிணை வழிக் கண்டு அவை தற்காலச் சூழலில் அமைந்த மரபு நீட்சியையும், பயன்பாடுகளையும், வழக்கிலிருப்பதையும், மாற்றத்திற்குள்ளாகி இருப்பதையும் வெளிக் கொணர்ந்திருப்பதாகும்.

## முன்னாய்வுகள்

'சங்க அக இலக்கியங்களில் அழகியல்' அக்டோபர் 2018 ஆம் ஆண்டு மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப் பெற்ற

செ. ஜெயலெட்சுமி அவர்களின் முனைவர் பட்ட ஆய்வேடும், 'சங்க இலக்கிய மலர்கள் காட்டும் தமிழர் பண்பாடு' செப்டம்பர் 2018 ஆம் ஆண்டு புதுவை பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப் பெற்ற மு. பிரபு அவர்களின் முனைவர் பட்ட ஆய்வேடும், தமிழண்ணல் அவர்களின் 'நற்றிணை மலர்கள்', இரா. பூபதி அவர்களின் 'மலர்களும் மருத்துவ பயன்களும்', ஹச். இராமசாமி அவர்களின் 'சங்க இலக்கியத்தில் மலர்கள்', இரா. இராமகிருட்டிணன் அவர்களின் 'கபிலரின் குறிஞ்சிப் பாட்டில் 99 பூக்கள்' போன்ற நூல்களும் முன்னாய்வுகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும்**

ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக பின் வரும் நான்கு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வுநோக்கம், ஆய்வுஎல்லை, ஆய்வுச் சான்றாதாரங்கள், கருதுகோள், அணுகுமுறை, ஆய்வுச் சிக்கல், ஆய்வுப் பயன், முன்னாய்வுகள், இயல்பகுப்பு ஆகிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**இயல் விளக்கங்கள்**

**இயல் 1 நற்றிணை ஓர் அறிமுகம்**

**இயல் 2 பூக்களின் வகைகள்**

**இயல் 3 நற்றிணையில் பூக்களின் இயல்பும் பயன்களும்**

**இயல் 4 அகவாழ்வில் பூக்கள்**

**'நற்றிணை ஓர் அறிமுகம்'** என்னும் முதல் இயலில் நற்றிணை பற்றிய விளக்கம், அதன் தனிச்சிறப்புகள், பூக்கள் குறித்த பாடல்கள், பூக்களின் வழி கூறப்படும் செய்திகள், திணை, கூற்று அடிப்படையில் பெண்பாற், ஆண்பாற் புலவர்கள் பற்றிய கருத்துக்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**'பூக்களின் வகைகள்'** என்னும் இரண்டாம் இயலில் நற்றிணையில் இடம்பெற்றுள்ள பூக்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என ஆய்வு நோக்கில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. நால்வகைப் பூக்களும் திணை அடிப்படையில் பகுத்தும், தொகுத்தும் கொடுக்கப்பட்டுள்ளன.

**‘நற்றிணையில் பூக்களின் இயல்பும் பயன்களும்’** என்னும் மூன்றாம் இயலில் பூவின் இயல்புகள், தன்மை, மணம், வண்ணம், சுவை, மருத்துவ பயன்பாடு, வழிபாடு, பண்பாடு போன்றவற்றில் அவற்றின் பங்களிப்பும் இடம் பெற்றுள்ளன.

**‘அகவாழ்வில் பூக்கள்’** என்னும் நான்காம் இயலில் பூக்கள் அகம், புறம் என இரு நிலைகளில் இடம்பெற்றிருப்பினும், இவற்றில் களவு, கற்பு என்னும் இரு கூறுகள் அக மாந்தர்களின் கூற்றுக்களைக் கொண்டவைகளாக அமைந்துள்ளன. அக இலக்கியங்கள் காட்டும் தலைமக்கள் பற்றிய செய்திகள், மனித உணர்வுகள் எவ்வாறு சித்திரிக்கப்பட்டுள்ளன? என்பது பற்றியும் இவ்வியலில் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டமுடிவுகள் அந்தந்த இயலின் முடிவில் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இதனை அடிப்படையாகக் கொண்டு நிறைவுரை அமைந்துள்ளது. ஒவ்வொரு இயலுக்குப் பின்னரும் சான்றெண் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. ஆய்விற்குத் துணைபுரிந்த நூல்களின் பட்டியல் அகரவரிசையில் துணைநூற்பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன. பூக்களின் ஆங்கிலம் மற்றும் தாவரவியல் பெயர்களின் பட்டியல் அகர வசரிசைப்படி பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன.

# இயல் - 1

## நற்றிணை அறிமுகம்

**முன்னுரை**

எட்டுத்தொகை தொகை நூல்களுள் முதல் நூல் நற்றிணை ஆகும். நல்ல திணை என்னும் இதன் பொருள் நல்லொழுக்கம் எனப்படும். நானூறு பாடல்களைக் கொண்டமையால் நற்றிணை நானூறு என வழங்கப்படுகிறது.

> **"நற்றிணை நல்ல குறுந்தொகைஐங் குறுநூறு**
> **ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்**
> **கற்றறிந்தோர் ஏத்தும் கலியொடு அகம்புறமென**
> **றித்திறந்த எட்டுத் தொகை"**[1]

என்ற பழம்பாடலில் நற்றிணை முதலாவதாக வைத்து எண்ணப்பட்டுள்ளது. இதன் பெருமையைச் சுட்டிக் காட்டும் நன்னூல் என்பதன் தன்மையால் இந்நூல் பெயர் பெற்றிருக்கிறது. திணை என்னும் சொல் "நிலம், குலம், சாதி, ஒழுக்கம்"[2] எனப் பல பொருள்படும் என்பர். தமிழ் அகராதி"நிலம், குலம், இடம், வீடு, ஒழுக்கம், உயர்திணை, அ∴றிணை என்னும் பகுப்பு, தமிழ் நூல்களில் வரும் அகத்திணை, புறத்திணை ஒழுக்கம்"[3] என குறிப்பிடுகிறது. நர்மதா தமிழ் அகராதி "குலம், வீடு, பிரதேசம், ஒழுக்கம்"[4] எனக் கூறியுள்ளது. ஒழுக்கம் என்ற சொல் பொருத்தமானதாகும். சிறந்த ஒழுக்கத்தை எடுத்தியம்பும் நானூறு பாக்களைக் கொண்டது நற்றிணை.

திருவாரூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள பின்னத்தூரில் வாழ்ந்தவர் அப்பாசாமி ஐயர். அவர்தம் கிழத்தியார் சீதாலட்சுமி அம்மாள். இவர்கள் குடி விளக்கப் பிறந்த மைந்தர் நாராயணசாமி ஐயர். இவர் பிறந்த நன்னாள் 10.09.1862 ஆகும். நற்றிணையை ஆய்ந்து வெளியிட விரும்பினார் நாராயணசாமி ஐயர். அவர்தம் ஆசிரியர் நாராயணசாமிப் பிள்ளையின் மைந்தர் சோமசுந்தரம் பிள்ளை பொருள் தட்டுப்பாடு நேராவண்ணம் உதவியதுடன் ஏடுகள் தருவித்தும் ஆராயும்படி செய்தார். மறைமலையடிகளார் உதவியால், சென்னை அரசினர் ஓலைச் சுவடி நூல் நிலையத்தில் இருந்த நற்றிணைக் கடிதச் சுவடி ஒன்றைப் பெற்று ஆராய்ந்தார். அதன் பின்னர் சாமிநாதையர் சுவடிகள்

2,மதுரைதமிழ்ச் சங்கச் சுவடி 1, தி.த. கனகசுந்தரம் பிள்ளை சுவடிகள் 2 என 5 சுவடிகள் கிடைத்தன. இவற்றை ஆராய்ந்து உரை கண்டார். ஆயினும் இச்சுவடியில் 234-ஆவது பாடலும் 385 ஆம் பாடலின் பிற்பகுதியும் கிடைக்கவில்லை. "நற்றிணை உரையே முதலுரை என்னும் முதன்மை வாய்ந்த உரையாக வாய்ந்தது. பின்னத்தூரார் பெறலரும் புலமைத் திறத்தைக் காட்டுவதாகும்"[5] என்பர்.எட்டுத்தொகையுள் முதலாவதாகிய நற்றிணை பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயரால் ஆய்ந்து வெளியிடப்பெற்றது. நூல் அச்சிட்டு முன்னுரையும் முடித்து, பாடினோர் பாடப்பெற்றோர் வரலாறுகளையும் எழுதிவந்தார். பாடப்பொற்றோர் வரலாற்றுள் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வரலாற்றின் ஒரு பகுதி எழுதிய அளவில் இயற்கை எய்தினார். நற்றிணைப் பாடல்கள் அகவல் பாக்களால் ஆனவை. ஒன்பதடி சிறுமையும், பன்னிரண்டடி பேரெல்லையும் கொண்டவை. இவற்றுள் 110, 379 அகிய இரண்டு பாடல்கள் பன்னிரண்டு அடிகளுக்கு மேலுள்ளன. கடவுள் வாழ்த்து திருமாலைப் பற்றியது. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது. உலகத்தையே இறைமை வடிவாகக் கொண்டது. அகப்பாடல் காதல் கற்பு ஆகிய குடும்ப வாழ்வு பற்றியது. இவை "இயற்கை அழகின் பெட்டகமாகத் திகழ்கிறது"[6] என்று நா.உசாதேவி குறிப்பிடுகிறார். சங்க கால மக்கள் இயற்கையோடு இரண்டறக் கலந்து வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

இந்நூல் நூற்று எழுபத்தைந்து புலவர்களால் பாடப்பட்டது. பழங்காலத் தமிழரின் ஒழுக்கலாற்றை, வாழ்வியலை விளக்குகிறது. இயற்கைப் பின்னணியில் காதல் நிகழ்வுகளை எடுத்தியம்புகிறது. ஓரறிவு உயிரான தாவரங்கள் நற்றிணையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. பழந்தமிழர் இயற்கையோடு இணைந்த வாழ்வை வாழ்ந்தனர் என அறிய முடிகிறது. அவர்களின் தாவரவியல் அறிவும், தாவரத்தில் பூக்கும் பூக்களோடு கொண்ட உறவும், பூக்களின் பயன்பாடும்,வகைப்பாடும், பூக்களின் வளர்ச்சியில் கொண்ட ஈடுபாடும் தற்போதுள்ள நிலையில் புதுமையை ஏற்படுத்தியுள்ளது.காதல், வீரம் ஆகிய இரண்டையும் வாழ்வின் முக்கிய நிலைகளாக அமைத்துக் கொண்டனர். இயற்கை எவ்வாறு தட்ப வெப்ப நிலைகளுக்கு ஏற்ப மாற்றி அமைக்கின்றதோ, அதனைப் போலவே மனித உணர்வுகளும் மாறுபடுகிறன. வாழ்வு நிலைகளும் மாறுகின்றன. அகம், புறம் என வாழ்க்கையை இரண்டாகப் பகுத்தனர். நிலத்தை

நானிலமாகப் பிரித்து அந்நிலத்துள் முறைமை திரிந்த நிலத்தைப் ‘பாலை’ எனப் பெயர் கொண்டு ஐந்திணை வகுத்தனர். “ஐந்திணைப் பெயர்களை விளக்கும் போது இளம்பூரணர் முல்லை, குறிஞ்சி என்பன இடுகுறியோ எனின் ஏகதேசக் காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி எனக் கொள்ளப்படும் என்பார் (அருணாசலம் பிள்ளை. மு,அகத்திணையியல் - உரைவளம் - ஆய்வுரை, (ப-69) காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும் மைவரை உலகிற்கு குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகானும் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறச்தமையாலும் அப்பெயர்கள் பெற்றன என்பது இளம்பூரணரின் விளக்கம்”[7] எனப் பழந்தழிழர் வாழிடத்தை மலர்க்குறியீட்டால் பெயரிடுவது அவர்தம் இயற்கையோடு இயைந்த வாழ்விற்குச் சான்றளிக்கிறது.அகத்திணை என்பவை கைக்கிளை முதல் பெருந்திணை வரை ஏழுவகைப்படும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவை அகம் ஐந்திணைகளாகும். புறத்திணை ஏழு எனத் தொல்காப்பியர் குறிப்பிடுவார். பின்னர் வந்த புறப்பொருள் வெண்பாமாலை பன்னிரண்டு என வகைப்படுத்தியுள்ளது. இவற்றுள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை எனும் எண்வகைத் திணையும் பூக்களின் பெயர்களால் அமையப்பெற்றவைகளாகும்.

இந்த இயைபைப் பின்னணியாக்கி குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் பாடல்கள் பாடப்பட்டன. ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு உரிப்பொருள் வகுக்கப்பட்டன. அகப்பாடலுக்குரிய திணை மரபாக முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் அமையும்.

> **“முதற்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே**
> **நுவலுங் காலை முறைசிறந் தனவே**
> **பாடலுட் பயின்றவை நாடுங் காலை”[8]**

என்று தொல்காப்பியர் கூறுகிறார். நிலம், பொழுதுகள் முதற்பொருள் என்றும், மரம், செடி, கொடி, பூக்களைக் கருப்பொருள் என்றும், மாந்தரின் உணர்வுகளான புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் ஆகியன உரிப்பொருள் என்றும் பழந்தழிழர் வகுத்துள்ளனர். முதல்பொருள் என்பது பூமியையும், இப்பூமி இயங்குவதால் ஏற்படும் கால நேரங்களான பொழுதுகளையும் குறிப்பதாகும்.

**“முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**

**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே”[9]**

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். ஓரிடத்தின் நிலச் சூழலுக்கும், காலச் சூழலுக்கும் ஏற்ப மாந்தரின் உணர்ச்சி வேறுபடும். மாந்தரின் வாழ்வு நெறிக்கும் வாழ்ந்த நிலத்திற்கும் உள்ள உறவினை உணர்த்தும் உரி என்று மது.ச.விமலானந்தம் குறிப்பிடுகிறார். இயற்கையோடு இரண்டறக் கலந்துணர்ந்த அனுபவமும், அந்த அனுபவத்தின் விளைவாக கவிஞர்கள் கூறும் பொருண்மையும் நற்றிணையில் காணப்படுகிறன. மேலும் இயற்கையிலுள்ள அமைதியும், எழிலும், இன்பமும், ஏற்றமும், ஈர்ப்பும் நற்றிணையில் புனைந்துரைக்கப்பட்டுள்ளன. இயற்கையிலுள்ள உயிரினங்களிடம் மனிதப் பண்புகளையும், மனித வாழ்வையும் உணர்வையும் இணைக்கும் சிறப்பைப் பெற்றுள்ளது. ‘‘நிலத்தில் நிலைத்து நிற்கும் தலையாய பண்பைக் கொண்ட உயிர்களான மரம், செடி, கொடிகளை நிலையியல் உயிர்கள் என்பர். நீலகேசியின் உரையாசிரியர் சமய திவாகரர் (நீலகேசி மொக்கலவாத சருக்கம்) இப்பொருள் அடிப்படையில் இவை பற்றி பேசும் துறையை (Botony) நிலையியல் உயிரியல் துறை எனலாம்’’[10] எனச் செவ்வியல் நூல்களில் தமிழ்ச் சமுதாயம் என்னும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இயற்கைச் சித்திரிப்பில் உவமை, உருகாட்சி, உள்ளுறை, இறைச்சி போன்ற கவிதை உத்திகளின் செயல்பாடுகளில் நிலையியல் உயிர்கள் இடம் பெறுகின்றன. நிலையியல் உயிரியல் துறையின் உட்பகுப்புகளான வகைப்பாட்டில் (Texonomy), மரபியல் (Geneties), வெளியமைப்பியல் (External Morphology), உள்ளமைப்பியல் (Anatomy), செயலியல் (Physiology), சூழ்நிலையியல் (Ecology), கூர்தலறக் கோட்பாடு (Evaluation Theory) ஆகியவற்றின் அடிப்படையில் தாவரங்கள் பற்றிய செய்திகளை அறிய இயலும். உயிர்நூலார் சுட்டும் வகைப்பாட்டியல் கருத்துக்கள் காலத்தால் பிந்தியவை என நா. உசாதேவி பக்-127 கூறப்பட்டுள்ளது. ‘‘உலகில் காணப்படும் புல் பூண்டு தொடங்கி மனிதன் வரை உயிர்களைப் பற்றி ஆராயும் இயல் உயிரியல் எனப்படும். இவ்வுலகில் 84 லட்சம் உயிரின வகைகள் இருந்ததாகக் கூறப்படுகிறது. தாவரவியல் என்பது புல், பூண்டு, புதர், செடி, கொடி, மலர்

ஆகியவற்றைக் குறிக்கின்றன''[11] என்று பூ.மு. அன்புசிவா கூறியுள்ளார். புல்லோடு வரும் கிளவிப்பெயர்களாகத் தொல்காப்பியர் சுட்டும் பெயர்ச் சொற்கள் யாவும் ஒரு வித்திலை நிலையியல் உயிர்களுக்கு உயிர் உறுப்புகளைச் சுட்டுவனவாகவே இருக்கின்றன.

**"தோடே மடலே ஓலை என்றா**

**ஏடே இதழா பாளை என்றா**

**ஈர்க்கே குலையெனந் நேர்ந்தபின் பிறவும்**

**புல்லொடு வரும் எனச் சொல்லினார் புலவர்"**[12]

என்பது நூற்பா. மரங்களைப் பற்றிய உறுப்புகளைக் குறிப்பிடும் சொற்களாக இலை, தளிர்,முறி, கோடு, சினை, குழை, பூ, அரும்பூ, நனை போன்றவற்றைக் குறிப்பிடுகிறார்.

**அகம்**

அகம் என்பது மனத்தால் சுவைத்து மகிழ்ச்சியடைவதும், சொற்களால் வெளிப்படுத்த முடியாது உள்ளத்தால் அடையும் இன்பமே அகம் எனப்படுகிறது. இதனை,''இருப்பிடம்,பூமி, மனை, வீடு, உள்மனம், உள்ளம்,அகப்பொருள்''[13] எனத் தழிழ் அகராதி கூறுகிறது. இதனை ''மனம், தொழில் நடந்திடும் இடத்தைக் குறிக்கும் சொல், நிலப்பகுதி என்றும் ஆங்கிலத்தில் heart: the place where the specified work is done a suffix used to denote the region''[14]எனக் நர்மதாவின் தழிழ் அகராதியில் கூறப்பட்டுள்ளது.அகப்பொருள் என்பது ''உட்பொருள், சிற்றின்பம், அகவொழுக்கமாகிய பொருள், வீட்டில் உள்ள பொருள்''[15] என்று அகராதி குறிப்பிடுகிறது.

**அகத்திணை**

அகத்திணை உள்ளத்திலே நிகழும் ஒழுக்கம். அவை குறிஞ்சி, பாலை, முல்லை,பாலை,மருதம், நெய்தல், கைக்கிளை, பெருந்திணை என்பவையாகும். இவற்றுள் முதலில் உள்ள ஐந்து திணைகளும் ஐவகை நிலங்களையும் சுட்டுவதாகும். கைக்கிளை, பெருந்திணைக்குத் தனி நிலம் இல்லை என்பதும், இவை ஐவகை நிலங்களுக்கும் பொதுவானவை என்பதும் குறிப்பிடத்தக்கது. நல்ல ஒழுக்கமாகிய அகத்திணையைப் பற்றிக் கூறும் நூல் நற்றிணை.

அகத்திணை ஏழு திணைகளாக அமைந்திருப்பது போலவே புறத்திணையும் ஏழு திணையாக அமையப் பெற்றுள்ளன. ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு நிலையிலும் பூக்களின் பெயர்களைக் கொண்டு புறத்திணை வகைப்பாடு அமைக்கப் பெற்றிருப்பதும் குறிப்பித்தக்கவையாகும். இதனை "அகவெழுக்கம், உள்ளொழுக்கம், கணவன் மனைவியரிடையே உள்ளத்தே நிகழும் இன்ப வொழுக்கம், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப்படும் ஐந்திணை ஒழுக்கம்"[16] எனத் தழிழ் அகராதி சுட்டுகிறது.

**உரிப்பொருள் திணை அடிப்படையில்**

1. குறிஞ்சித் திணையில் 130 பாடல்கள் - புணர்தலும் புணர்தல் நிமித்தமும்.
2. பாலைத் திணையில் 107 பாடல்கள்- பிரிதலும் பிரிதல் நிமித்தமும்.
3. நெய்தல் திணையில் 101 பாடல்கள் - இரங்கலும் இரங்கல் நிமித்தமும்.
4. மருதத் திணையில் 33 பாடல்கள் - ஊடலும் ஊடல் நிமித்தமும்.
5. முல்லைத் திணையில் 26 பாடல்கள் - இருத்தலும் இருத்தல் நிமித்தமும்.

இவ்வாறு திணைகளின் வழியாகப் பண்பாட்டையும், ஒழுக்கத்தையும் உணர்த்தியுள்ளனர்.

**கூற்று அடிப்படையில்**

1. தோழி கூற்று210
2. தலைவி கூற்று 84
3. தலைவன்கூற்று 79
4. நற்றாய் கூற்று 11
5. பரத்தை கூற்று 10
6. கண்டோர் கூற்று 2
7. பாங்கன் கூற்று 1
8. தேர்ப்பாகன் கூற்று 1

என நற்றிணையில் கூற்று அடிப்படையில் 398 பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. கூற்று அமையாத 234, 385 ஆவது பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை. பொது நிலையில் அக இலக்கியங்களில் தோழி கூற்று

மிகுதியாக உள்ளன. பரத்தை கூற்று மிகக் குறைவாகக் காணப்படுகிறன. பொது நிலையில் களவு சிறந்த ஒழுக்கமாக சங்க காலத்தில் அமைந்திருந்தது என்பதை நற்றிணைப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

| **வ.எண்** | **இடம்** | **நிலம்** | **தெய்வம்** |
|---|---|---|---|
| 1. | காடும் காடு சார்ந்த இடமும் | முல்லை | மாயோன் |
| 2. | மலையும் மலை சார்ந்த இடமும் | குறிஞ்சி | சேயோன் |
| 3. | வயலும் வயல் சார்ந்த இடமும் | மருதம் | வேந்தன் |
| 4. | கடலும் கடல் சார்ந்த இடமும் | நெய்தல் | வருணன் |
| 5. | மணலும் மணல் சார்ந்த இடமும் | பாலை | கொற்றவை |

எந்தக் காலத்தில் எந்தப் பூக்கள் பூக்கிறன என்பதை அறிந்து கொள்ள அதன் காலத்தை அடிப்படையாக கொண்டே அறிய முடிகிறது.

| **வ.எண்** | **பெரும்பொழுது** | **வ.எண்** | **சிறுபொழுது** |
|---|---|---|---|
| 1. | கார் காலம் | 1. | மாலை |
| 2. | கூதிர் காலம் | 2. | யாமம் |
| 3. | முன்பனிக் காலம் | 3. | வைகறை |
| 4. | பின்பனிக் காலம் | 4. | காலை |
| 5. | இளவேனிற் காலம் | 5. | நண்பகல் |
| 6. | முதுவேனிற் காலம் | | |

கூதிர்-குளிர் இது கூதல் என வழங்குகிறது. இவை யாவும் ஆவணி முதல் இரண்டிரண்டு மாதங்களாகும். வைகறை என்பது கோழி கூவும் நேரமாகும். பெரும் பொழுது – பருவம் எனவும், சிறுபொழுது – பொழுது எனவும் வழங்கப்படும்.

**திணை அடிப்படையில் பூக்கள்**

1. குறிஞ்சித் திணைப் பூக்கள் : வேங்கை, குறிஞ்சி, காந்தள்.
2. பாலைத் திணைப் பூக்கள் : குராம்பூ, மராம்பூ. பாலை
3. நெய்தல் திணைப் பூக்கள் : நெய்தல்பூ, தாழம்பூ, முண்டகப்பூ.

4. மருதத் திணைப் பூக்கள் : தாமரை, கழுநீர், குவளை.

5. முல்லைத் திணைப்பூக்கள் : குல்லை, முல்லை, தோன்றி, பிடவம்.

**திணை மயக்கம் அடிப்படையில் பூக்கள்**

மக்களின் வாழ்வியலை ஐந்திணையாக வகுத்து, அவற்றை நிலம், காலம், கருப்பொருளோடு பொருத்திக் கூறியுள்ளது. நம் முன்னோர் நிலவியற்கை, காலவியற்கை, பொருளிற்கை, அவற்றிற்கேற்ற உணர்வியற்கைகளை நன்கறிதிருந்தனர். இதனைத் தொல்காப்பியர்,

> **"திணைமயக் குறுதலுற் கடி நிலை யிலவே,**
> **நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப**
> **புலனன் குணர்ந்த புலமை யோரே"** **(தொல்.அகத்-960)**

என்பதைத் தொல்காப்பியம் சுட்டுகிறது. திணை - ஒழுக்கம். அதாவது, புணர்தல் முதலிய உரிப்பொருள்கள். மயங்குதல் - அதற்குரிய இடமாறி நிற்றல். அதாவது, மயங்குதல் என்பது நிலத்தை விலக்கவே, நில மொழிந்த காலமும் கருப்பொருளும் அவற்றிற் கோதிய ஒழுக்கத்தைவிட்டு வேறொழுக்கத்தோடு மயங்குதல் உண்டென்பதாகும். ஒவ்வொரு ஒழுக்கத்திற்கும் இன்ன நிலம், இன்ன பெரும்பொழுது சிறுபொழுது, இன்னின்ன கருப்பொருள்கள் என வரையறை செய்யப்பட்டுள்ளன. இன்னின்ன நிலத்திற்கு இன்னின்ன பூவும் புள்ளும் உரியவென வரையறை செய்யப்பட்டாலும், அவை அந்த நிலத்தேயன்றி வேறு நிலத்திலும் இருத்தல் உண்டு என்பதை,

> **"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
> **அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்**
> **வந்த நிலத்தின் பயத்த வாகும்"** **(தொல்.அகத்-967)**

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. ஒரு நிலத்துக்குரிய பூவும் புள்ளும் வேறு நிலம் பொழுதொடு சேர்த்துப் கூறப்படுகிறது. அந்நிலத்தக்குரிய கருப்பொருளாகக் கொள்ளப்படும் எனக் கருப்பொருள் மயக்கச் சூத்திரம் சுட்டுகிறது.

> **"தாமரைத் தண்டா தூதி மீமிசைச்**
>
> **சாந்தின் தொடுத்த தீந்தேன்"** **(நற்-1)**

என நற்றிணைப் பாடல் எடுத்தியம்புகிறது. தாமரை கார்காலத்தில் மருத நிலத்தில் பூக்கும் பூவாகும். எனினும் திணை மயக்கத்தில் குறிஞ்சித் திணையில் பூத்திருப்பது இங்குப் புலப்படுகிறது.

**"கண்போல் நெய்தல் போர்விற் பூக்குந்" (நற்-8)**

என்கிறது நற்றிணை குறிஞ்சித் திணைப் பாடல். நெய்தல் பூ நெய்தல் திணைப் பூவாகும்."**நெய்தல் உண்கண்" (நற்-113)** என்ற நெய்தல் நிலப்பூவானது பாலைத் திணையில் மயங்கி பூத்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஆய்விற்குரிய நற்றிணையில் குவளைப்பூ மருதத் திணைப்பூ குறிஞ்சித்திணையில் (6, 34, 77, 85, 160, 204, 301) பாடல்களிலும், பாலைத் திணையில் (37, 105, 166, 262, 308) போன்ற பாடல்களிலும், முல்லைத் திணையில் (161) பாடலிலும் சுட்டப்பெற்றுள்ளது. வேங்கைப்பூ குறிஞ்சித் திணைப் பூ மற்ற திணையான பாலைத் திணையில் (28, 157, 202, 384), முல்லைத் திணையில் (161), மருதத் திணையில் (216) காணப்படுகிறது. காந்தள் குறிஞ்சித் திணைப்பூ பாலைத் திணையில் (14), முல்லைத் திணையில் (69, 99, 161), நெய்தல் திணையில் (294) புன்னைப்பூ நெய்தல் திணைப்பூவாகும். அவை பாலைத் திணையில் (76) காணப்படுகிறது. இவ்வாறு ஒரு திணையில் காணப்படும் பூ மற்ற திணையில் பூத்திருப்பது திணை மயக்கம் எனச் சுட்டப்பெறுகிறது.

**பூக்களின் பருவங்கள்**

பூ என்பதற்கு அகராதி "பூ தோன்றுதல்-மொட்டு விரிதல்-மலர்தல், இதழ் அடுக்குகளின் நடுவே மகரந்தத்தூளைக் கொண்டிருக்கும் வெண்மையான இனப்பெருக்கத்திற்கான தாவரத்தின் ஒரு பகுதி"[17] என்று கூறுகிறது. மலர்ந்த பூக்கள் தான் மலர்கள். தொல்காப்பியத்தில் பூ என்ற சொல் ஏழு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. "பூ என் ஒரு பெயர்" (தொல்,எழு:269), "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல்,பொரு:21), "மாபெரும் தானையர் மலைந்த பூவும்" (தொல்,புற:5), "வண்டே இழையே வள்ளி பூவே" (தொல்,கள:4), "அடிசிலும் பூவம் தொடுத்தற் கண்ணும்" (தொல்,கற்பு:5), "சினையே, குழையே, பூவே, அரும்பே" (தொல்,மர:89), "பூப்பின் புறப்பாடு" (தொல்,கற்பு:46) என்பதாகும்.மலர் என்ற சொல் "மலர் தலை உலகத்து"[18] என இடத்தில் மட்டும் காணப்படுகிறது. அகப்பாடல்கள் முதல், கரு, உரி என்னும் முப்பொருள் பாகுபாட்டால் அமையப்பெற்றவை. இவற்றுள் மையமாகத் திகழ்பவை

உரிப்பொருள். இவை காலமும், இடமும் பூக்கும் பூக்களும் என முதலும் கருவும் இணைந்தே உள்ளன. காலத்தையும் இடத்தையும் அடியொற்றிப் பிறக்கும் பூக்களைக் குறியீடாகக் கொண்டு அந்நிலத்தில், அக்காலத்தில் நிகழ்கின்ற நிகழ்வுகளை மையப்படுத்தி அமைதலாகும். அவ்வாறு சூடுதல், சூட்டுதல், சூடுதலைத் தவிர்த்தல் எனப் பூக்களை மையமாகக் கொண்டும் அக்கால வாழ்வியல் முறை பண்பாட்டின் உறைவிடமாகத் திகழ்கிறது. அகம், புறம் செயல்களினூடாகக் குறியீட்டு மொழியினைப் பெறும் பூக்கள் திணைப் பண்பாட்டின் அடையாளமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பூக்களின் பருவங்கள் என்பது, பூவின் வளர்ச்சி நிலைகளைக் குறிக்கும். பூக்களின் வளர்ச்சி நிலைகளாக **நனை, அரும்பு, முகை, போது, மலர், அலர், வீ** என்னும் ஏழு நிலைகளைக் கொண்டதாகும். இதனை,**“பேதை, பொதும்பை, மங்கை,மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்”**[19] எனப் பெண்களின் ஏழு வகைப் பருவங்களோடு கோவை இளஞ்சேரன் தொடர்புபடுதியுள்ளனர். பூக்கள் பூக்கும் பருவங்களான **கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்** என்னும் ஆறுபருவங்களாகும். மரம், செடி, கொடி ஆகியவற்றில் பூக்கும் பூக்கள் ஆறுபருவங்களிலும் பூப்பதாகும். பூக்களின் உறுப்புக்கள் ஏழு நிலையாக எடுத்துரைக்கிறது.**‘காம்பு, புல்லி, அல்லி, சூலகம், மகரம், தாது, தேன்’** எனஇலக்கியம் ஒரு பூக்காடு (பக்-131) கூறியுள்ளார். பூவிதழ் ஏழு வகையாக கூறப்படுகிறது. அவை **இதழ், அதழ், கோடு,ஏடு,மடல், தளம், பாளை** என்பதாகும். பூங்கொத்து ஏழு வகையாக உள்ளது. அவை,**கொத்து, தொத்து, துணர், இணர், மஞ்சரி, தொடச்சி, குலை** என்பவை. பூக்களின் குணம் பத்து வகையாகக் கூறப்படுகிறது. அவை“**மணம், மென்மை, வண்ணம், தூய்மை, தன்மை, சுவை, ஒளி, எழில், கவர்ச்சி, மங்கலத் தன்மை**”எனக் கோவை இளஞ்சேரன் குறிப்பிடுகிறார். பூக்களின் குடும்ப வகை நான்கு. அவை, கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்பதாகும்.

**நனைப் பருவம்**

நனைப் பருவத்தைப் பூக்களின் கருப்பருவம்-குழந்தைப் பருவம் என்று கூறுவர். இப்பருவத்தில் புறத்தே நீர்ப்பிடிப்புள்ள ஈர நனைப்புத் தோன்றும், அகத்தே தேன் நனைப்புத் தோன்றும். தேன் நனைப்புத் தோன்றுவதை,

**"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ"** **(நற்-56)**

**"மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்"** **(நற்-9)**

**"நனையினால் தோன்றும் நறா"** **(நான்மணி-50)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. அகநனைப்பு, புறநனைப்பு காரணமாக இப்பருவத்திற்கு 'நனை' என்னும் பெயர் அமைந்தது. நனை என்பதற்குத் தோன்றுதல்-உண்டாதல்-தோற்றம் எனப் பொருள்படும். "நனை மகிழ்" (சிறுபாண்-67) இதற்கு நச்சினார்க்கினியர் 'தோன்றிய மனமகிழ்ச்சி'எனப் பொருள் குறித்துள்ளார். எனவே நனை என்பதற்குத் தோன்றுதல்-தோற்றம் என்பது பொருள். நனைப் பருவம் என்பது பூவுக்கான கரு தோன்றும் பருவமாகும். "நனை என்பது தோன்றல் அல்லது பிறப்புப் பருவமாகும்"[20] என இரா. இராமகிருட்டிணன் குறிப்பிடுகிறார்.

**அரும்புப் பருவம்**

அரும்புப் பருவம் இரண்டாவது பருவமாகும். நனைப்பருவத்தின் - தோற்றப் பருவத்தின் அடுத்த வளர்ச்சி நிலையாகும். கரு உருக் கொள்ளும் காலம் என்று கூறலாம். பூவாகப் பூப்பதற்கு அடிப்படை வடிவம் தோன்றும் நிலையாகும். அரும்புதல் பருவமே அரும்புப் பருவமாகும். இவற்றை,

**"சினையே குழையே பூவே அரும்பே"[21]**

எனத் தொல்காப்பியம் சுட்டுகிறது. அரும்புகள் முகமலர்ந்த கரிய காம்பையுடைய வேங்கை மரத்தின் பொன்போன்ற நறிய மலர் என்பதையும், பருத்த களிற்று யானையின் மருப்புப் போன்று அரும்புகள் முதிர்ந்து இருப்பதையும்,

**"பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை"** **(நற்-87)**

**"தாழை**
**பெருங்களிற்று மருப்பின் அன்ன வரும்பு"** **(நற்-19)**

**"அரும்புவாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கைப்**
**பொன்மருள் நறுவீ"** **(நற்-319)**

என்ற நற்றிணை அடிகள் எடுத்துக்கூறுகிறன.

**முகைப் பருவம்**

முகை மூன்றாவது வளர்ச்சிப் பருவமாகும். அரும்பின் அடிப்பக்கம் சற்றுப் பருத்து முகைத்துக் காணப்படுவதால் இப்பருவத்திற்கு முகைப் பருவம் என இலக்கியத்தில் ‘குளவிமுகை’ என்றும், ‘கொழுமுகை’ என்றும் குறிப்பிடுகின்றது. அரும்பு உள் இடைவெளி பெற்றுக் குவிந்திருப்பதால் ‘குவிமுகை’ என்றும், அரும்பு இதழ்கள் நெகிழ்ச்சி அடைந்து கொழுத்திருப்பதால் ‘கொழுமுகை’ என்றும் அடைமொழியுடன் குறிக்கப்படுகிறது. அரும்பு உள் இடைவெளி பெற்றுக் குவிந்து முனை கூர்மையாக இருப்பதால் ‘கூர்முகை’ என்றும் குறிப்பிடப்படுகிறது. இதனை,

**“நுண்முகை யவழிந்த புறவில்” (நற்-59)**

**“முல்லை முகைவாய் திறப்பப் பல்வயின்” (நற்-69)**

**“கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை” (நற் 86)**

**“குயில்வாய் அன்ன கூர்முகை அதிரல்”**[22]

என்ற அடிகள் மூலம் உணரலாம். பல்வகைப் பூக்களுக்கும் உரிய பல்வகை முகைகளும், அவற்றின் வடிவங்களுக்கு ஏற்பச் சிறிது வேறுபட்ட உருவ அமைப்புகளை உடையவையாகும். அவற்றுள் முகையின் பெயர்களும் அமைந்துள்ளன.

**“முகை நனை கலிகை போகில்**
**முகுளமே மொக்குள் மொட்டு” (சூடா நிக-48)**

எனக் குறிப்பிடுகிறது சூடாமணி நிகண்டு. அரும்பின் இதழ்கள் சற்றுத் தழைத்துக் கலித்தால், அது கலிகை. நீர்க்குமிழி போல் அலைக் கோளவடிவமுடையது மொக்குள். அடிப் பருத்து உயர்ந்து மேற்பகுதி மொட்டையாகத் தோன்றுவது முகுளம். இதழ்கள் நெகிழ்ந்து இன்பத்தின் களமாக உள்ளதால் போகில். இவ்வாறு பல நிலைகளில் விளங்கும் முகைப்பருவம், மணத்திற்குரிய பருவமாகும். முகைப்பருவத்திலே மணம் உண்டாகத் தொடங்குகின்றது. இதனால் இளங்காளையரும் கன்னியரும் ‘முகை

பருவத்தர்’ எனப்பட்டனர். அகம் (132), ஐங் (246) போன்ற அடிகளும் சுட்டுகின்றன.

### போதுப் பருவம்

போது பூவின் நான்காவது வளர் பருவமாகும். முகைக்கு அடுத்த நிலை போதுப் பருவமாகும். முகைக்கும் மலருக்கும் இடைப்பட்ட நிலையாகும். இந்நிலையில் இதழ்கள் நெகிழ்ந்து இடைவெளி கொண்டு, முனையில் வாய் திறக்கும் நிலையாகும். முகை வாய்விட்டு உடையும் பொழுதினுக்குப் போது என்று இவற்றை,

**“ஏதி லாளனும் என்ப போதவிழ்” (நற்-74)**

**“அணிமிகு கொழுமுகை உடையும் பொழுது” (ஐங்-343)**

**“போதுபொதி உடைந்த ஒண்செங் காந்தள்” (நற்-176)**

எனும் நற்றிணை அடிகள் மூலம் உணரலாம். முகைக்கு முகிழ் என்னும் பெயரும் உண்டு. பொழுதுக்குப் போது என்னும் பெயர் உண்டு. முகை உடையும் பொழுது-போது எனப்பட்டது. ‘‘போது அவிழ் புதுமலர்’’ (மதுரைக்-564) ‘‘முகிழ்விரி, நாட்போது’’ (சிறுபாண்-183) எனக் குறிப்பிடுகிறது.

### மலர்ப் பருவம்

பூவின் ஐந்தாவது பருவம் ‘மலர்’ ஆகும். ‘மல்’ என்ற வேர்ச்சொல்லில் (தொல்,சொல்-303) இருந்து மலர் என்ற சொல் தோன்றியதாகக் கூறப்படுகிறது. இந்த வளர் பருவத்தில் பூ மகரந்தச் சேர்க்கைக்குத் தயாராகிறது. இதனால் ‘‘வளத்தைக் குறிக்கும் ‘மல்’ என்ற வேர்ச்சொல்லின் அடிப்படையில் ‘மலர்’ என்ற சொல் கொடுக்கப்பட்டிருக்கலாம்’’[23] எனக் கருதுகிறார் கு.வி. கிருஷ்ணமூர்த்திபோது அவிழும் பருவம் என்பதை,

**“போதவிழ்**

**புன்னை ஓங்கிய கானல்” (நற்-327)**

**“அரும்பவிழ்அலரிச் சுரும்புண் பல்போது” (நற்-214)**

**“போது அவிழ் புதுமலர்” (மதுரைக்-564)**

**“போது அவிழ் தளவம்” (ஐங்-412)**

**“புதன்மிசை முல்லை**

**தளவமொடு போதவிழ”** **(ஐங்-24)**

இவ்வடிகள் சுட்டுகின்றன. மலர்ப்பருவம் பூ மலர்தலைக் குறிக்கும். இதற்கு அலர்தல், அவிழ்தல், விள்ளல், நெகிழ்தல் என்னும் வேறு பெயரும் உண்டு. இதனை சூடாமணி நிகண்டு,

**“அலர்தலே யவழிதல் விள்ளல்**

**மலர்தலா நெகிழ்தலும்பேர்”** **(சூடா நிக-50)**

என்கின்றது. இப்பருவத்தில் “இதழ்கள் கட்டுவிட்டு வாய் அவிழும்-இதழ்கள் தனித்தனியே விலகி நிமிர்ந்து நிற்கும்-வண்ணங்கள் பளபளப்பாகத் தோன்றும்-மையப் பொருட்டுக் காட்சியளிக்கும்-மணங்கமழும்-தேன் துளிக்கும். இந்நிலையே மலர்ப் பருவமாகும் இதுவே மங்கலப் பொருளாகும்”[24] என வெற்றிச்செல்வன் கூறியுள்ளார்.

**அலர் பருவம்**

பூவின் ஆறாவது வளர் பருவம் ‘அலர்’ ஆகும். இந்நிலையில் மகரந்தங்கள் வெளியேற்றப்பட்டு வேறு பூவின் மகரந்தங்கள் மகரந்தச் சேர்க்கை மூலம் சூலகத்தை அடைந்து அதனைக் கருவுறச் செய்யும் நிகழ்வுகள் நடைபெறுவதாகும். மலர் நிலைக்கு அடுத்த நிலை விரிநிலை. மலர்ப் பருவத்தில் கட்டவிழ்ந்து விலகித் தனித்தனியே நின்ற இதழ்கள், இப்பருவத்தில் நன்கு விரிந்து, சற்று கீழ் நோக்கி வளைந்து பரவும் இந்நிலைக்கு விரிபருவமாகும். இவ்விதழ்கள் நன்கு விரிதலும் பரவலும் ‘அலர்தல்’ என்று சொல்லப்படும். இப்பருவம் பற்றிநற்றிணை,

**“சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கை”** **(நற்-168)**

**“விரிபூங் காணல் ஒருசிறை நின்றோய்”** **(நற்-155)**

என்றும், சூடாமணி நிகண்டு,

**“இலகிய விரிமலர்ப்பேர்**

**இகமலர் வெதிர் தொடர்ப்பூ”** **(சூடா நிக-50)**

என்றும் குறிப்பிடுகின்றன.

மலரினின்று விரிந்து வேறுபடுவதால் இதற்கு ‘இகமலா்’ என்றும், இதழ்கள் நடுங்கிச் சிலிர்த்தலால், ‘வெதிா்’ என்றும், இதழ்கள் ஒன்றோடொன்று தொடா்புற்றவை போலக் காணப்படுவதால் ‘தொடா்ப்பூ’ என்றும் கூறப்படுகின்றன.

**வீ பருவம்.**

பூவின் ஏழாவது பருவம் ‘வீ’ ஆகும்.‘வீ’ என்றால் நீங்குதல், விழுதல், ஒழிதல், விடுதல் எனப் பொருள்படும். “பொதுவாக பூவின் இதழ்கள் வீழ்ந்தாலும், கருவுற்ற சூலகம் புதிய வீரியத்தோடு வளர ஆரம்பிக்கும் நிலையை ‘வீ’ உணா்த்துகிறது”[25] என இரா. இராமகிருட்டிணன் குறிப்பிடுகிறாா். நிறைமலராக விளங்கிய விரிமலா், காம்பின் பிடிப்பிலிருந்து விழும் நிலையில்-நீங்கும், விடுபடும் நிலையில் ஒட்டிக் கொண்டிருக்கும். இதனை,

**“வேங்கை வீபுகு” (நற்-13)**

**“வீதா வேங்கை மலைகிழ வோற்கே” (நற்-51)**

**“………….புன்னை**

**வீமலா் உதிா்ந்த தேனாறு புலவின்” (நற்-76)**

**“கழன்று உகுவீ” (புறநா.-307)**

என்று குறிப்பிடுகிறது. விரிமலா், காம்பினின்று கழன்று கீழே விழும் நிலையில் உள்ளமை உணா்த்துப்படுகின்றது.

**“பொரிகால்**

**பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் சுழன்ற**

**ஆலி யொப்பின் தும்புடைத் திரள் வீ” (அகநா.-95)**

பொரிந்த அடியினையும் கொட்டைகளையுடைய அரையினையுமுடைய இருப்பையினது குவிந்த குலையினின்றும் கழன்ற, பனிக்கட்டி போன்ற உள்துளையினையுடைய திரண்ட பூக்கள் என்று கூறப்படுகிறது. குலையினின்று சுழன்ற இப்பூக்கள், வீ பருவப் பூக்களாகும். காம்பினின்றும்-குலையினின்றும் கழன்ற பூக்கள், கீழே விழுந்துவிடாமல் உள்துளையுடன் ஒட்டிக்கொண்டிருக்கும்

நிலையே வீ பருவமாகும். அந்நிலையிலும் பூக்கள் நல்ல மணத்துடனும், ஒளியுடனும், வண்ணத்துடனும், எழிலுடனும் காட்சி தந்து புது மலராகக் காணப்படுவதை,

**"கருங்கால் வேங்கை மாதகட்டு ஒள்வீ'** **(ஐங்-219)**

**"பொன்மலர் புதுவீ"** **(ஐங்-208)**

**"முல்லை மென்பதப் புதுவீ** **(அகநா.-164)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. வீ பருவமே மலரின் முதுமைப் பருவமாகும்.

**பூவின் வழக்கு நிலைகள்**

மலரின் சிறப்பையும், பெருமையையும் அதனிடம் உள்ள மணம் எவ்வாறு காட்டுகிறதோ? அவ்வாறே மனிதர்களிடமுள்ள சிறப்பை மணம் என்ற சொல் திருமணம் என்ற அடிப்படையாக எடுத்துக்காட்டுகிறது.

தாவர இனம் ஒவ்வொன்றிற்கும் சூல் உண்டாகி இன விருத்தியாவது 'பூ'வில் தான். பூவே தாயாக இருந்து கருவுற்று விதையை உற்பத்தி செய்கிறது. அவ்வாறே பெண்ணும் கருவுற்றுக் குலவிருத்தி செய்வதற்கு வேண்டிய பக்குவம் அடையும் நிலையைப் 'பூப்பெய்தல்' நிலை என்பர்.

தாவரத்தின் இன்றியமையாத உறுப்பு பூ, பூவில் தான் தாவரத்தின் மூலமாகிய வித்து உண்டாகின்றது. மலர் சூலுற்று வித்துக்களைக் தராவிட்டால் தாவர இனமே இல்லை. எனவே தாவர இனப்பெருக்கம் பூவில் அமைந்துள்ளது.

அவ்வாறே மனித இனத்தின் பெருக்கம் பெண்ணிடம் அமைந்துள்ளது. அதனால் பெண்ணைப் 'பூவை' என்றும் 'பூவையர்' என்றும் பூவென்னும் பெயர் கொண்டே வழங்கினர். 'பூவை' என்பது பூப்போன்றவள் என்றும் 'பூவையர்' என்பது பூவின் தன்மையை உடையவள் என்றும் பொருளுடையது.

மலரின் புறவிதழ்கள் உதிர, அகவிதழ்கள் நன்கு விரிந்து பரவுவது 'அலர்தல்' என்றும் 'அலர்' என்றும் சொல்லப்படும். அலர் விரிவதையும் பரவுவதையும் கொண்டே அகத்துறையில் களவுக்காதல் வெளிப்பட்டுப் பரவுதலை 'அலர்' என்று கூறப்படுகிறது.

பூவில் உள்ள மகரந்தத்திற்குத் 'தாது' என்னும் பெயர் உண்டு. தாது என்னும் சொல், மானிட இயலில் குல மூலத்திற்குப் பெயராக அமைந்துள்ளது.

இவ்வாறு பல்வேறு நிலையிலும் பூக்கள் வாழ்க்கையோடு இணைந்து காணப்படுகிறது. இவ்வாய்வு நற்றிணையில் பூக்கள் பற்றிய ஆய்வாகையால் நற்றிணை பற்றி முன் பகுதியில் தேவையான விளக்கங்கள் புரிதலுடன் ஆய்வில் செல்லத் துணை புரியும் நோக்குடன் பின்வரும் விளக்கங்கள் கொடுக்கப் பெற்றறுள்ளன.

**நற்றிணையில் திணை அடிப்படையில் பாடல்கள்**

| வ.எண் | திணை | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | 1, 5, 6, 8, 13, 17, 22, 23, 25, 32, 34, 36, 39, 44, 47, 51, 53, 55, 57, 61, 64, 65, 68, 75, 77, 82, 83, 85, 88, 93, 95, 98, 102, 104, 108, 112, 114, 116, 119, 122, 125, 128, 129, 133, 140, 144, 146, 147, 151, 154, 156, 158, 160, 165, 168, 173, 176, 182, 185, 188, 190, 194, 201, 204, 206, 209, 213, 217, 220, 222, 225, 228, 232, 233, 236, 244, 247, 251, 253, 255, 257, 259, 261, 265, 268, 273, 283, 285, 288, 292, 294, 297, 301, 303, 304, 306, 307, 309, 322, 324, 326, 328, 332, 334, 336, 339, 341, 344, 347, 351 ,353, 355, 356, 357, 359, 365, 368, 373, 376, 377, 379, 383, 386, 393, 396, 399. | 128 |
| 2. | முல்லை | 21, 42, 59, 69, 87, 89, 97, 99, 175, 121, 139, 142, 163, 169, 181, 221, 238, 242, 248, 266, 289, 316, 321, 361, 364, 367, 371, 374, 387, 394. | 30 |
| 3. | மருதம் | 20, 30, 40, 50, 60, 70, 80, 90, 100, 120, 130, 150, 170, 180, 200, 210, 216,250, 260, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380,390,400. | 32 |
| 4. | நெய்தல் | 4, 11, 15, 19, 27, 31, 35, 38, 45, 49, 54, 58, 63, 67, 72, 74, 78, 87, 91, 94, 96, 101, 106, 111, 117, 123, 124, 127, 130, 131, 132, 135, 138, 145, 1459, 152, 155, 159, 162, 167, 172, 175, 178, 183, 187, 191, 195, 196, 199, 203, 207, 211, 215, 218, 219, 223, 227, 231, 235, 239, 245, 249, 303, 307, 311, 315, 319, 323, 327, 331, 335, 338, 342, 345, 348, 349, 355, 358, 363, 368, 372, 375, 378, 382, 385, 388, 392, 395, 398. | 89 |
| 5. | பாலை | 2, 3, 7, 9, 10, 12, 14, 16, 18, 24, 26, 28, 29, 33, 37, 41,43, 46, 48, 52, 56, 62, 66, 71, 73, 76, 79, 84, 86, 92, 103, 105, 107, 109, 110, 113, 118, | 105 |

| | | 126 137, 141, 143, 148, 153, 157, 162,164, 166, 171, 174, 177, 179, 184, 186, 189, 193, 197, 198, 202, 205, 208, 212, 214, 224, 226, 229, 237, 240, 241, 243, 246, 252, 256, 262, 264, 269, 271, 274, 276, 277, 279, 281, 284, 286, 293, 296, 298, 302, 305, 308, 312, 314, 318, 324, 325, 329, 333, 337, 343, 346, 352, 362, 366, 384, 387, 391, 397. | |
|---|---|---|---|

**நற்றிணை பாடிய புலவர்கள்**

| வ.எண் | திணை | புலவர்கள் பெயர் | பாடல் எண்கள் |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | கபிலர் | 1,13, 32, 65, 77, 217, 222, 225, 253, 309, 336, 353, 359, 368, 373, 376. |
| | | பெருங்குன்றூர் கிழார் | 5, 112, 119, 347 |
| | | பரணர் | 6, 201, 247, 265, 356. |
| | | …… | 8 |
| | | நொச்சி நியமங்கிழார் | 17 |
| | | ….. | 22 |
| | | குணக்காயணார் | 23 |
| | | பேரிசாத்தனார் | 25, 104. |
| | | பிரமசாரி | 34 |
| | | சீத்தலைச் சாத்தனார் | 36, 339 |
| | | மருதன் இளநாகனார் | 39, 194, 326, 341 |
| | | பெருங்கௌசிகனார் | 44 |
| | | நல்வெள்ளியார் | 47 |
| | | பேராலவாயர் | 51 |
| | | நல்வேட்டனார் | 53 |

| | | | |
|---|---|---|---|
| | | பெருவழுதி | 55 |
| | | பொதும்பில் கிழார் | 57 |
| | | சிறுமோலிகணார் | 61 |
| | | உலோச்சனார் | 64 |
| | | பிரான் சாத்தனார் | 68 |
| | | மாமூலனார் | 75 |
| | | அம்மள்ளனார் | 82 |
| | | பெருந்தேவனார் | 83 |
| | | நல்விளக்கனார் | 85 |
| | | நல்லந்துவனார் | 88 |
| | | மலையனார் | 93 |
| | | கோட்டம் பலவனார் | 95 |
| | | உக்கிரப்பெருவழுதி | 98 |
| | | செம்பியனார் | 102 |
| | | ….. | 108 |
| | | தொல்கபிலர் | 114, 276, 328, 390 |
| | | கந்தரத்தனார் | 116, 146 |
| | | செங்கண்ணனார் | 122 |
| | | ….. | 125 |
| | | நற்சேந்தனார் | 128 |
| | | ஔவையார் | 129 |
| | | நற்றமனார் | 133 |
| | | …… | 134 |
| | | நற்றங்கொற்றனார் | 136 |
| | | பூதங்கண்ணனார் | 140 |

| | | | |
|---|---|---|---|
| | | கச்சிப்போட்டுப்பெருந்தச்சனார் | 144, 213 |
| | | கொள்ளம்பக்கனார் | 147 |
| | | இளநாகனார் | 151 |
| | | நல்லாவூர் கிழார் | 154 |
| | | கண்ணங் கொற்றனார் | 156 |
| | | வெள்ளைக்குடி நாகனார் | 158 |
| | | …… | 160 |
| | | …… | 165 |
| | | …… | 168 |
| | | …… | 173 |
| | | …… | 176 |
| | | …… | 182 |
| | | …… | 185 |
| | | …… | 188 |
| | | …… | 190 |
| | | ……. | 192 |
| | | மள்ளனார் | 204 |
| | | ஐயூர் முடவனார் | 206, 334 |
| | | நொச்சி நியமங்கிழார் | 209 |
| | | குண்டுகட்பாலியாதனார் | 220 |
| | | முடத்திருமாறனார் | 228 |
| | | முதுவெங் கண்ணனார் | 233 |
| | | நம்பி குட்டுவனார் | 236 |
| | | கூற்றங் குமரனார் | 244 |

| | | | |
|---|---|---|---|
| | | மதுரை பெருமருதிளநாகனார் | 251 |
| | | ஆலம்பேரி சாத்தனார் | 255 |
| | | வண்ணக்கன் சோருமருங்குமரனார் | 257 |
| | | கொற்றங் கொற்றனார் | 259 |
| | | சேந்தன் பூதனார் | 261 |
| | | வெறிபாடிய காமக்கண்ணியார் | 268 |
| | | மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன்கூத்தனார் | 273 |
| | | நல்லூர்ச் சிறு மேதாவியார் | 282 |
| | | மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் | 285 |
| | | குளம்பனார் | 288 |
| | | நல்வேட்டனார் | 292 |
| | | புதுக்கயத்துவண்ணக்கன் கம்பூர்கிழான் | 294 |
| | | மதுரை அளக்கர்ஞாழார்மகனார் மள்ளனார் | 297 |
| | | பாண்டியன் மாறன்வழுதி | 301 |
| | | மாறோக்கத்து நப்பசலையார் | 304 |
| | | உரோடகத்துக் கந்தரத்தனார் | 306 |
| | | தங்கால் பொற்கொல்லன்வெண்ணாகனார் | 313 |
| | | மதுரைப் பூவண்ட நாகன்வேட்டனார் | 317 |
| | | மதுரைப் பாலாசிரியன் சேந்தன் கொற்றனார் | 322 |
| | | கயமனார் | 324 |
| | | குன்றூர்கிழார் மகன் கண்ணத்தனார் | 332 |
| | | மதுரை அறுவைவாணிகன் | 344 |
| | | மதுரை கண்ணத்தனார் | 351 |

| | | | |
|---|---|---|---|
| | | ….. | 355 |
| | | குறமகள் குறியெயினி | 357 |
| | | கிள்ளிமங்கலம் கிழார் மகனார் சேரகோவனார் | 365 |
| | | மடல் பாடிய மாதங்கீரனார் | 377 |
| | | குடவாயிற் கீரத்தனார் | 379 |
| | | கோளியூர் கிழார் மகனார் செழியனார் | 383 |
| | | தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் | 386 |
| | | காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் | 389 |
| | | கோவூர் கிழார் | 393 |
| | | …. | 396 |
| 2. | பாலை | பெரும்பதுமனார் | 2 |
| | | இளங்கீரனார் | 3, 62, 113 |
| | | நல்வெள்ளியார் | 7 |
| | | பாலை பாடிய பெருங்கடுங்கோ | 9, 48, 118, 224, 256, 318, 337, 384, 391 |
| | | …… | 10 |
| | | கயமனார் | 12, 198, 279, 293, 305 |
| | | மாமூலனார் | 14 |
| | | சிறைக்குடி ஆந்தையார் | 16 |
| | | பொய்கையார் | 18 |
| | | …… | 24 |
| | | சாத்தந்தையார் | 26 |
| | | முது கூற்றனார் | 28 |
| | | பூதனார் | 29 |

| | | | |
|---|---|---|---|
| | | இளவேட்டனார் | 33,157 |
| | | பேரி சாத்தனார் | 37 |
| | | இளந்தேவனார் | 41 |
| | | ஏயினந்தையார் | 43 |
| | | ….. | 46 |
| | | பாலத்தனார் | 52 |
| | | பெருவழுதி | 56 |
| | | இனிசந்த நாகனார் | 66 |
| | | வண்ணப்புறக் கந்தரத்தனார் | 71 |
| | | மூலங்கீரனார் | 73 |
| | | அம்மூவனார் | 76, 397 |
| | | கண்ணகனார் | 79 |
| | | …. | 84 |
| | | நக்கீரர் | 86, 197 |
| | | ….. | 92 |
| | | மருதன் இளநாகனார் | 103, 205, 302, 362 |
| | | முடத்திருமாறன் | 105 |
| | | ……. | 107 |
| | | மீளிப் பெரும்பதுமனார் | 109 |
| | | போதனார் | 110 |
| | | ….. | 126 |
| | | பெருங்கண்ணனார் | 137 |
| | | சல்லியங்குமரனார் | 141 |
| | | கண்ணகாரன் கொற்றவை | 143 |
| | | கள்ளம்பாளனார் | 148 |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | தனிமகனார் | 153 |
|  |  | ….. | 162 |
|  |  | ….. | 164 |
|  |  | …… | 166 |
|  |  | ….. | 171 |
|  |  | ….. | 174 |
|  |  | …… | 177 |
|  |  | …… | 179 |
|  |  | ….. | 184 |
|  |  | …. | 186 |
|  |  | ….. | 189 |
|  |  | …. | 193 |
|  |  | நொச்சிநியமங்கிழார் | 208 |
|  |  | குடவாயிற்கீரத்தனார் | 212 |
|  |  | கருவூர்க் கோசனார் | 214 |
|  |  | கனி புன்குன்றனார் | 226 |
|  |  | ….. | 229 |
|  |  | காரிக் கண்ணனார் | 237 |
|  |  | நப்பாலத்தனார் | 240 |
|  |  | மதுரைப் பெருமருதனார் | 241 |
|  |  | காமக்கணிப் பசலையார் | 243 |
|  |  | காப்பியஞ் சேந்தனார் | 246 |
|  |  | அம்மெய்யன் நாகனார் | 252 |

| | | | |
|---|---|---|---|
| | | பெருந்தலைச் சாத்தனார் | 262 |
| | | ஆவூர்த் காவிதிகன்சாதேவனார் | 264 |
| | | எயினந்தை மகன் இளங்கீரனார் | 269, 308, 346 |
| | | ….. | 271 |
| | | காவன் முல்லைப்பூதனார் | 274 |
| | | தும்பி சேர் கீரனார் | 277 |
| | | குழார்க் கீரன் எயிற்றியார் | 281, 312 |
| | | தேய்புரிப் பழங்கயிற்றினார் | 284 |
| | | துறைக்குறுமாவிற் பானங் கொற்றனார் | 286 |
| | | குதிரைத் தறியனார் | 296 |
| | | விற்றூற்று வண்ணக்கன்தந்தனார் | 298 |
| | | முப்போர் நாகனார் | 314 |
| | | மதுரைக் காருலவியங் கூத்தனார் | 325 |
| | | மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் | 329 |
| | | கள்ளிக்குடிப் பூதம் புல்லனார் | 333 |
| | | கருவூர்க் கதம்பிள்ளைச் சாத்தனார் | 343 |
| | | மதுரைப் பள்ளிமருதங்கிழார்மகனார் சொகுந்தனார் | 352 |
| | | மதுரை ஈழத்துப் பூதன்தேவனார் | 366 |
| | | பொதும்பில் கிழார் மகனார் | 387 |
| 3. | நெய்தல் | அம்மூவனார் | 4, 35, 138, 275, 307, 315, 327, 331, 395. |
| | | உலோச்சனார் | 11, 38, 63, 74, 131, 149, 191, 203, 223, 249, 254, 278, 287, 311, 354, 363, 372, 398. |
| | | அறிதுவுடை நம்பி | 15 |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | நக்கண்ணையார் | 19, 87 |
|  |  | குடவாயிற் கீரத்தனார் | 27 |
|  |  | நக்கீரனார் | 31 |
|  |  | ….. | 45 |
|  |  | நெய்தல் நத்தனார் | 49,130 |
|  |  | சேந்தங் கண்ணனார் | 54 |
|  |  | முதுகூற்றனார் | 58 |
|  |  | பேரி சாத்தனார் | 67, 199 |
|  |  | இளம்போதியார் | 72 |
|  |  | கீரங்கீரனார் | 78 |
|  |  | பிசிராந்தையார் | 91 |
|  |  | இளந்திரையனார் | 94 |
|  |  | கோக்குள முற்றனார் | 96 |
|  |  | வெள்ளியந்தின்னார் | 101 |
|  |  | தொண்டைமான் இளந்திரையன் | 106 |
|  |  | ….. | 111 |
|  |  | குன்றியனார் | 117, 239 |
|  |  | காஞ்சிப் புலவனார் | 123 |
|  |  | மோசி கண்ணத்தனார் | 124 |
|  |  | சீத்தலைச் சாத்தனார் | 127 |
|  |  | ….. | 132 |
|  |  | குதப்பிள்ளையார் | 135 |
|  |  | நும்பி குட்டுவன் | 145 |
|  |  | ஆலம் பேரிசாத்தனார் | 152 |

| | | | |
|---|---|---|---|
| | | பராயனார் | 155 |
| | | கண்ணம் புல்லனார் | 159 |
| | | …. | 163 |
| | | ….. | 167 |
| | | ….. | 172 |
| | | ….. | 175, 178, 183, 195,207, 235 |
| | | ஔவையார் | 187, 295 |
| | | வெள்ளைக்குடி நாகனார் | 196 |
| | | கோட்டியூர் நல்லந்தையார் | 211 |
| | | மதுரை கள்ளம் போதனார் | 215 |
| | | கிடங்கில் காவிதிக்கீரங்கண்ணனார் | 218 |
| | | தாயங்கண்ணனார் | 219 |
| | | தேவனார் | 227 |
| | | இளநாகனார் | 231 |
| | | ஆல்லங்கீரனார் | 245 |
| | | நக்கீரர் | 258, 358 |
| | | இளவெயினனார் | 263 |
| | | கபிலர் | 267, 291 |
| | | பரணர் | 270 |
| | | முக்கல்ஆசான் நல்வெள்ளையார் | 272 |
| | | மதுரை மருதன் இளநாகனார் | 283, 392 |
| | | வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் | 299, 323, 378. |
| | | மதுரைஆருலவியநாட்டு ஆலம்பேரி சாத்தனார் | 303, 338 |

| | | | |
|---|---|---|---|
| | | வினைத் தொழிற் சோகீரனார் | 319 |
| | | வெள்ளிவீதியார் | 335, 348 |
| | | மோசிகீரனார் | 342 |
| | | நம்பி குட்டுவனார் | 345 |
| | | மிளைகிழான் நல்வேட்டனார் | 349 |
| | | மதுரை ஓரைக் கடையத்தூர் நல்வெட்ளையார் | 369 |
| | | பொதும்பில் கிழார்மகன் வெண்கண்ணி | 375 |
| | | நிகண்டம் கலைக்கோட்டுத்தண்டனார் | 382 |
| | | ….. | 385 |
| | | மதுரை மருதங்கிழார்மகனார் பெருங்கண்ணனார் | 388 |
| 4. | மருதம் | ஓரம் போகியார் | 20, 360 |
| | | கொற்றனார் | 30 |
| | | கோண்மா நெடுங்கோட்டனார் | 40 |
| | | மருதம்பாடிய இளங்கடுங்கோ | 50 |
| | | தூங்கலோரியார் | 60 |
| | | வெள்ளிவீதியார் | 70 |
| | | பூதம்வேதனார் | 80 |
| | | அஞ்சில் அஞ்சியார் | 90 |
| | | பரணர் | 100, 260, 280, 300, 310, 350. |
| | | மாங்குடி கிழார் | 120 |
| | | கடுவன் இளமள்ளனார் | 150 |
| | | ….. | 170, 180 |
| | | கூடலூர்ப் பல்கண்ணனார் | 200, 380 |
| | | மிளைகிழான் நல்வேட்டனார் | 210 |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | மதுரை மருதன் இளநாகனார் | 216, 290 |
|  |  | ஆலங்குடி வங்கனார் | 230, 330, 400 |
|  |  | மதுரைஓலைக்கடையத்தார்நல்வெள்ளையார் | 250 |
|  |  | கபிலர் | 320 |
|  |  | நக்கீரர் | 340 |
|  |  | உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் | 370 |
|  |  | ஔவையார் | 390 |
| 5. | முல்லை | மருதன் இளநாகனார் | 21 |
|  |  | கீரத்தனார் | 42 |
|  |  | கபிலர் | 59 |
|  |  | சேகம்பூதனார் | 69 |
|  |  | ஆகம்பன்மாலாதனார் | 81 |
|  |  | இளம்புல்லூர்க் காவிதி | 89 |
|  |  | மாறன் வழுதி | 97 |
|  |  | இளந்திரையன் | 99 |
|  |  | ….. | 115, 161, 169, 181 |
|  |  | ஒரு சிறைப் பெரியனார் | 121 |
|  |  | பெருங்கௌசிகனார் | 139 |
|  |  | இடைக்காடனார் | 142, 221, 316 |
|  |  | கந்தரக்கனார் | 238 |
|  |  | விழிக்கட்பேதைப் பெருங்கண்ணனார் | 242 |
|  |  | காசிபன் கீரனார் | 248 |
|  |  | மருங்கூர்ப் பட்டினத்துச்சேந்தன் குமரனார் | 289 |
|  |  | மதுரைப் பேராலவாயர் | 361 |
|  |  | கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் | 364 |

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  | நக்கீரர்<br>ஔவையார்<br>வன்பரணர் | 367<br>371, 381, 394<br>374 |

**நற்றிணையில் இடம் பெற்ற பெண்பாற் புலவர்கள்**

1. ஆஞ்சில் அஞ்சியார்.
2. ஒளைவையார்.
3. கழார்க்கீரனெயிற்றியார்.
4. குறமகள் இளவெயினியார்.
5. குன்றியனார்.
6. நக்கண்ணையார்.
7. நல்வெள்ளியார்.
8. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்.
9. மாறோக்கத்து நப்பசலையார்.
10. வெள்ளி வீதியார்
11. வெறியாடிய காமக்கன்னியார்.

இவர்களில் கழார்க்கீரனெற்றியார் பூக்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை. பெண்பாற் புலவர் அதிகமாக நெய்தல் திணையில் எட்டுப் பாடல்களும், குறிஞ்சி திணையில் நான்கு பாடல்களும், மருதத் திணையில் மூன்று பாடல்களும், முல்லைத் திணையில் ஒரு பாடலும் பாடியயுள்ளனர். ஆண்பாற் புலவர்கள் நூற்றிபதினைந்து பேர் பூக்களைப் பற்றி பாடியுள்ளனர். இவர்கள் வினைமுடிந்து வரும் தலைவன் குறித்த பருவத்தில் வருவதையும், பூக்கள் அரும்பும் பருவத்தில் நிகழும் ஒழுக்க நிலையைக் குறித்தும் குறிப்பிட்டுள்ளனர். பூக்களைப் பெண்கள் அதிகமாகச் சூடினாலும் பூக்கள் பற்றி ஆண்களே

அதிகமாகப் பாடியுள்ளனர் என்பது இங்குப் புலப்படுகிறது. பூக்களைப் பற்றி பாடாத புலவர்கள் தொண்ணூறு பேர் ஆவார்கள்.

**நற்றிணையில் திணை அடிப்படையில் பெண்பாற் புலவர்களின் பாடல்கள்**

குறிஞ்சி - 47, 129, 268, 309, 357

முல்லை - 371, 381, 394

மருதம் - 70, 90, 250, 390

நெய்தல் - 19, 87, 117, 187, 239, 295, 335, 348, 369

பாலை - 7, 243, 281, 312

மொத்தம் - 25

பூக்களைப் பாடிய பொண்பாற் புலவர்கள் - 10

பூக்களைப் பாடிய ஆண்பாற் புலவர்கள் - 115

மொத்த புலவர்கள் - 125

நற்றிணையில் உள்ள பூக்களின் நிறம், பூக்களின் நிலம், அவை மலரும் காலம் ஆகியவை பாகுபடுத்தப்பெற்றுள்ளது. எல்லா பூக்களின் நிறங்களைப் பற்றியும் இலக்கியத்தில் தெளிவாக விளக்க இயலாது. ஏனென்றால் தற்போது ஒட்டு முறையில் பல்வேறு வண்ணத்தில் பூக்கள் காணப்படுகின்றன.

பெரும்பான்மையான கொடிப் பூக்கள் கார் காலத்திலும், அதை அடுத்த அற்சிரக் காலத்திலும் பூக்கின்றன. இளவேனிற் காலத்தில் மரங்களே மிகுதியாகப் பூக்கின்றன. மலர்கள் பூக்கும் காலங்களாக முதுவேனில், இளவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்று ஆறு பருவங்களைக் கொண்டிருந்தாலும், அற்சிரம் (முன்பனி), மாரி (பின்பனி), வேனில், இளவேனில் என நான்கு பருவத்தின் அடிப்படையில் கூறப்பட்டுள்ளன.

**கார் காலப் பூக்கள்**

ஆறுவகைப் பருவகாலங்களில் ஒவ்வொரு பருவகாலத்தில் வெவ்வேறு வகைப் பூக்கள் பூக்கின்றன. ஒவ்வொரு பருவத்திலும் சிலவகையான பூக்கள் பூக்கின்றன. அவற்றுள் கார்காலத்திலும், முதுவேனிற்காலத்திலும் அதிக அளவில் பூக்கள் பூக்கின்றன என்பதைக் கொண்டு, கார்காலத்தில் மட்டும் நாற்பது வகையான பூக்கள் பூக்கின்ற எனலாம்.

**“நொச்சி**
**மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழக்**
**கார்வந் தன்றால்”** **(நற்-115)**

**“களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்**
**கார்செயல் செய்தகாமர் காலை”** **(நற்-256)**

**“போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ கார்தோன்றும்**
**காந்தள் செறிந்தகவின்”**[26]

**“கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்”**
**(அகநா. கட, வாழ்த்து)**

**“நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த”** **(நற்-368)**

**“கார் கொன்றையொடு மலர்ந்த குருந்து”** **(ஐங்-436)**

**“கார்தோன்றப் பீர்தோன்றி”** **(திணை-நூ,100)**

என்பது கார்ப் பருவத்தில் பூக்கும் பூக்களாக மேற்காணும் அடிகள் புலப்படுத்துகிறது.

**கூதிர்ப் பருவப் பூக்கள்**

கூதிர்ப் பருவத்தில் பூக்கும் பூக்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. ஈங்கை, கூதாளி, கூவிளம், பித்திகம், முசுண்டை ஆகியவை கூதிர்ப் பருவத்தில் பூக்கும் பூக்களாகும்.

**“கூதிர்க் கூதளம்”** **(நற்-244)**

கூதாளிகொடி இனத்தைச் சார்ந்ததும். இக்கூதாளி மலர் கூதிர்ப் பருவத்தில் பூத்து நறுமணம் பரப்பும் என்பது சுட்டியுள்ளது. இவற்றுள் ஈங்கை என்பது ஒருவகைக் கொடி. இக்கொடியின் தளிர், இதன் பூவைவிட அழகு மிகுந்து காணப்படும். மாரிக் காலத்தில் எழில் கொண்டு விளங்கும். இதனை,

**"மாரிஈங்கைமாந்தளிர்"** **(அகநா.-75)**

எனக் குறிப்பிடுகிறது. மாரி என்பது ஈங்கின் தளிரால் குறிப்பிட்டபருவமாகும். இக்கொடி கார்ப்பருவத்திலும் அரும்பி மலரும். கூதிர்க்காலத்தில் நள்ளிரவில் மலர்வது முசுண்டை. இதனை,

**"குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள்**
**புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூ**
**போன்போற் பீரமொடு புதல்பூதல் மலர"**[27]

என்ற நெடுநெல்வாடை அடிகள் புலப்படுத்துகிறது.

**முன்பனிப் பருவப் பூக்கள்**

முன்பனிப் பருவத்தில் ஆவிரை, கரும்பு, கருவிளை, பகன்றை போன்ற பூக்கள் பூக்கின்றன. அற்சிரம் என்பது முன்பனிக் காலாகும். பகன்றை வெள்ளி வட்டிலைப் போலவும், கைத்தொழில் வல்லகம்மியன் இட்டிழைத்த பொன்னாலாகிய சுரிதகமென்னும் அணி போன்ற வடிவையுடைய கோங்கமரத்தில் குவிந்த முகைகள் போன்று பகன்றை மலர் மலர்ந்திருந்தது என்பதை,

**"பாண்டில் ஒப்பின் பகன்றைமலரும்**
**கடும்பனிஅற்சிரம் நடுங்க"** **(நற்-86)**

என முன்பனிக் காலத்தில் பூப்பதாக நற்றிணை விளக்குகிறது. பின்பனிக்காலம் வருமென்று முன்பனியின் கொழுந்தை முற்படவிட்டு அறிவுறுத்திய அடையாளமாகக் குரவம் அரும்பு கட்டுவதும், மாவின் பூங்கொத்துக்கள் தோன்றியிருப்பதையும்,

**"முன்பனிக்**
**கொழுந்து முந்துறீஇக் குரவுஅரும் பினவே"** **(நற்-224)**

முன்பனிக் காலத்திற்குப் பின்னர் பின்பனிக் காலம் என்பதை நற்றிணை சுட்டியுள்ளதை உணரமுடிகிறது. அகன்ற வயலில் கிளைத்து விரிந்த கரும்பினது திரண்ட காம்பினையுடைய பெரியபூ, மழையில் நனைந்த நாரையைப் போல ஈரம் கொண்டு வளைந்திருக்க, மிக்க கூடிய சினத்தினால் அச்சத்தை உண்டாக்கி, பனி தங்கிய பண்பில்லாதவாடைக் காற்றானது நிலவியது எனச் சுட்டப்படுகிறது.

**“அகல்வயல்**

**கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ**

**………………………………………..**

**…………………………………………..**

**புனிகடி கொண்ட பண்பில் வாடை”** (அகநா.-235)

கரும்பின் பூ முன்பனிக் காலத்தில் மலரும் பூவாகும் என்பது புலப்படுகிறது. கரும்பின் மொட்டு வெண்மை நிறத்துடன் வேல் போன்று நீண்டிருக்கும் என்பதை,

**“கரும்பின்,**

**வேல்போல் வெண்முகைபிரியத் தீண்டிஒற்றும்**

**வடபுலவாடை”** (நற்-366)

என்ற பாடலடிகள் வழி உணரலாம். மேலும், வாடை வீசும் காலத்தில் வெண்ணிற மலராக மலரும் என்பதையும் மேற்காணும் நற்றிணைப் பாடல் புலப்படுத்துகிறது.

**பின்பனிப் பருவப் பூக்கள்**

பின்பனிப் பருவத்தில் அதிகமாகப் பூக்கள் பூப்பதாக இலக்கியத்தில் அறியமுடியவில்லை. ஆத்தி பின்பனிப் பருவத்தில் மலரும் பூக்களாகக் கோவை இளஞ்சேரன் (பக்-333, 680) குறிப்பிடுகிறார்.

**“பின்பனி அமையம் வருமென முன்பனிக்**

**கொழுந்து முந்துறீஇக் குரவுஅரும் பினவே”** (நற்-224)

முன்பனிக் காலத்திற்குப் பின்னர் பின்பனிக் காலம் என நற்றிணை குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**இளவேனிற் பருவப் பூக்கள்**

இளவேனிற் பருவத்தில் பலவகையான பூக்கள் பூக்கின்றன. அதிரல், குரவம், குருக்கத்தி, ஞாழல், முருக்கு, வாழை போன்ற இளவேனிற் பருவத்தில் பூப்பதாகும்.

> **“வேனில்**
>
> **இணர்துதை மாஅத்த புணர்குயில் விளித்தொறும்” (நற்-157)**
>
> **“வேனிற் குன்றத்துவெவ்வரைக் கவாஅன்” (நற்-171)**
>
> **“குரவுமலர்ந்**
>
> **தற்சிரநீங்கிய அரும்ப வேனில்”[28]**

என்பதை அகநானூற்றுப் பாடல் வழி அறியமுடிகிறது. குரவு மலர்ந்து முன்பனிக்காலம் நீங்கப் பெற்ற இளவேனிற் காலத்தில், அறல் விளங்கும் நீண்ட மணலையுடைய ஆற்றின் கரையில் மருத மரங்களோடு உயர்ந்து, அழகிய தளிரையும், கிளையையும் உடைய மாமரத்தின் கொத்துக்களாகப் புதிய பூக்கள் செறிந்த சோலை என்று கூறப்படுகிறது. எனவே குரவும், மாவும் இளவேனிற் பருவத்தில் பூப்பவையாகும்.

> **“மாதரார் முறுவல்போல் மணமௌவல் முகைஊழ்ப்ப**
>
> **…………………………………………..**
>
> **இறுத்தந்தது இளவேனில்” (கலித்-27)**

மகளிரின் பற்கள் போல் மணம் வீசும் மௌவல் அரும்புகள் மலர, இளவேனிற் வந்தது எனக் கூறப்படுகிறது. மௌவல் நிறம், வடிவம், மணம், இதழ் முல்லையைப் போன்றது. எனவே மௌவல் இளவேனிற் பூவாகும்.

**முதுவேனிற் பருவப் பூக்கள்**

முதுவேனிற் பருவத்தை வேனிற் பருவம் என்று குறிப்பிடப்படுகிறது. வேனல், வேனிற் என்று முதுவேனிற் பருவத்தைக் குறிப்பிடப்படுகிறது. இப்பருவத்தில் பலவகையானப் பூக்கள் பூக்கின்றன.

**“வேனில் ஓதிப் பாடுநடைவழலை”** **(நற்-92)**

**“நின்றவேனில் உலர்ந்தகாந்தள்”** **(நற்-29)**

**“கான இருப்பைவேனல் வெண்பூ”** **(குறுந்-329)**

**“கோடைப் பூளை”** **(அகநா.-217)**

**“வேனிற் கோங்கின் பூம்பொருட் டன்ன”** **(புறநா-321)**

**“வேனிற் பாதிரிக் கூனிமாமலர்”** **(அகநா.-257)**

இவ்வடிகள் மூலம், இருப்பை, பூளை, கோங்கு, பருத்தி, பாதிரி ஆகிய பூக்கள் வேனிற் பருவத்தில் பூக்கின்றன என்பதை அறியமுடிகிறது.

## பூக்கள் பூக்கும் காலங்கள்

| வ.எண் | கார் | அற்சிரம்(முன்பனி) | இளவேனில் | கோடை |
|---|---|---|---|---|
| 1. | அடும்பு | ஆசினிப்பூ | அதிரல் | இருப்பை |
| 2. | ஆம்பல் | ஆவிரை | ஆத்தி | எருக்கு |
| 3. | உழிஞை | ஈங்கை | குருக்கத்தி | சந்தனப்பூ |
| 4. | எருவை | கரும்பு | கோங்கம் | பூளை |
| 5. | எறுழம்பூ | கருவிளை | கைதை | - |
| 6. | கடம்பு | குரவம் | சிறுசெண்பகம் | - |
| 7. | காந்தள் | குல்லை | செம்முருக்கு | - |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | காயா | கூதளம் | ஞாழல் | - |
| 9. | குருந்து | தமலாக்கொடி | தாழை | - |
| 10. | குவளை | தாமரை | நறுமோரோடம் | - |
| 11. | குறிஞ்சி | நீலம் | பாதிரி | - |
| 12. | குளவி | பகன்றை | புன்னை | - |
| 13. | கூவிளம் | பீர்க்கு | மருதம் | - |
| 14. | கொன்றை | வயலைக்கொடி | வாடாமலர் | - |
| 15. | செவ்வாம்பல் | - | வாழை | - |
| 16. | தளவம் | - | வெண்கடம்பு | - |
| 17. | தோன்றி | - | வெள்ளாம்பல் | - |
| 18. | நறவம் | - | மாம்பூ | - |
| 19. | நெய்தல் | - | - | - |
| 20. | நொச்சி | - | - | - |
| 21. | பிடவம் | - | - | - |
| 22. | பித்திகம் | - | - | - |

| 23. | முல்லை | - | - | - |
|---|---|---|---|---|
| 24. | மௌவல் | - | - | - |
| 25. | வெண்காந்தள் | - | - | - |
| 26. | வேங்கை | - | - | - |
| 27. | தோன்றி | - | - | - |

**நற்றிணையில் கூற்றுகள் அடிப்படையில்**

**தோழியின் கூற்றுகள்**

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | தோழி | 5, 13, 22, 23, 25, 32, 34, 36, 47, 53, 55, 57, 61, 65, 68, 83, 88, 93, 98, 108, 112, 114, 119, 122, 125, 128, 129, 134, 147, 151, 156, 165, 168,173, 182, 188, 194, 206,220, 222, 228, 232, 233, 247, 251, 253, 257, 259, 261, 268, 273, 276, 282, 285, 288, 292, 297, 301, 306, 313, 317, 322, 326, 334, 336, 344, 351, 353, 355, 359, 365, 368, 373, 376, 379, 383, 393, 396, 399. | 80 |
| 2. | பாலை | | 7, 10, 12, 18, 26, 28, 33, 37, 38, | |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | 41, 43, 46, 48, 71, 86, 92, 115, 148, 164, 171, 189, 197, 208, 212, 229, 237, 246, 252, 269, 274, 281, 286, 316, 318, 325, 329, 333, 337,387, 391. | 40 |
| 3. | நெய்தல் | | 4,11, 15, 19, 27, 35, 45, 49, 63, 67, 72, 78, 91, 96, 111, 123, 127, 131, 132, 135, 138, 145, 149, 159, 163, 167, 172, 175, 178, 183, 191, 195, 203, 207, 211, 223, 227, 231, 235, 239, 245, 254, 258, 263, 267, 278, 283, 294, 295, 299, 307, 311,323, 331, 342, 345, 354, 358, 363, 372, 375, 378, 385, 392, 395, 398. | 67 |
| 4. | மருதம் | | 30, 50, 60, 90, 170, 180, 200, 210, 215, 230, 270, 290, 300, 310, 330, 360, 380. | 17 |
| 5. | முல்லை | | 58, 89, 99, 181, 248, 367 | 6 |
| | | | மொத்தம் | 210 |

## தலைவி கூற்றுகள்

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | தலைவி | 1, 17,51, 64, 102, 104, 116, 133, 136, 144, 217, 225, 236, 244, 255, 304, 309, 332, 347, 357. | 20 |
| 2. | பாலை | | 14, 24, 56, 73, 79, 84, 107, 109, 118, 153, 174, 177, 186, 193, 214, 224, 226, 241, 243, 277, 296, 298, 302, 314, 343, 397. | 26 |
| 3. | நெய்தல் | | 31, 38, 54, 74, 87, 94, 117, 130, 187, 196, 199, 218, 219, 249, 272, 275, 287, 303, 327, 335, 338, 348, 369, 382. | 25 |
| 4. | மருதம் | | 20, 70, 260, 280, 340, 350. | 6 |
| 5. | முல்லை | | 69, 97, 221, 238, 266, 289, 381. | 7 |
| மொத்தம் | | | | 84 |

## தலைவன் கூற்றுகள்

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | தலைவன் | 6, 8, 39, 44, 75, 77, 82, 140, 146, 185, 192, 201, 204, 209, 213, 265, 324, 341, 356, 377, 389. | 21 |
| 2. | பாலை | | 3, 9, 24, 52, 62, 76, 103, 105,113, 126, 13137, 141, 157, 166, 190, 202, 205, 240, 256, 262, 264, 284, 308, 312, 346, 352, 362, 366, 384. | 30 |
| 3. | நெய்தல் | | 16, 95, 101, 106, 152, 155, 319, 349. | 8 |
| 4. | மருதம் | | 20, 80, 120, 250, 370. | 5 |
| 5. | முல்லை | | 59, 81, 139, 142, 161, 162, 169, 221, 242, 321, 364, 371, 374. | 13 |
| **மொத்தம்** | | | | 79 |

## நற்றாய் கூற்றுகள்

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | நற்றாய் | - | |
| 2. | பாலை | | 29, 66, 110, 143, 179, 184, 198, 271, 279, 293, 305 | 11 |
| 3. | நெய்தல் | | - | |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | மருதம் | | - | |
| 5. | முல்லை | | - | |
| | | | | 11 |

**பரத்தை கூற்றுகள்**

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | பரத்தை | 176 | 1 |
| 2. | பாலை | | - | |
| 3. | நெய்தல் | | 315 | 1 |
| 4. | மருதம் | | 40, 100, 150, 216, 290, 320, 390,400 | 8 |
| 5. | முல்லை | | - | |
| **மொத்தம்** | | | | 10 |

**கண்டோர் கூற்றுகள்**

| வ.எண் | திணை | கூற்று | பாடல் எண் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | கண்டோர் | - | |
| 2. | பாலை | | 2 | 1 |
| 3. | நெய்தல் | | - | |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | மருதம் | | - | |
| 5. | முல்லை | | 394 | 1 |
| | | | **மொத்தம்** | 2 |

## தேர்ப் பாகன் கூற்றுகள்

| **வ.எண்** | **திணை** | **கூற்று** | **பாடல் எண்** | **மொத்தம்** |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | தேர்ப்பாகன | **-** | |
| 2. | பாலை | | **-** | |
| 3. | நெய்தல் | | **-** | |
| 4. | மருதம் | | **-** | |
| 5. | முல்லை | | 121 | 1 |
| **மொத்தம்** | | | | 1 |

## பாங்கன் கூற்றுகள்

| **வ.எண்** | **திணை** | **கூற்று** | **பாடல் எண்** | **மொத்தம்** |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | **பாங்கன்** | 160 | 1 |
| 2. | பாலை | | - | |

| 3. | நெய்தல் | | - | |
|---|---|---|---|---|
| 4. | மருதம் | | - | |
| 5. | முல்லை | | - | |
| | | | **மொத்தம்** | **1** |

**திணை அடிப்படையில் பூக்கள்**

| **வ.எ** | **பூக்கள்** | **குறிஞ்சி** | **பாலை** | **நெய்தல்** | **மருதம்** | **முல்லை** | **மொத்தம்** |
|---|---|---|---|---|---|---|---|
| | **(குறிஞ்சித் திணைப் பூக்கள்)** | | | | | | |
| 1. | வேங்கைப்பூ | 13,112, 125,151, 168,222, 251,257, 259,313, 334,373, 379,383, 389,396 | 28, 157, 202, 384 | 223 | 216 | 161 | 23 |
| 2. | குறிஞ்சிப்பூ | 268 | - | - | - | - | 1 |
| 3. | காந்தள்பூ | 17,34,51, 185,188, 313,359, 379,399 | 14 | 294 | - | 69, 99, 161 | 14 |

|  |  |  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|---|---|
|  | **(பாலைத் திணைப்பூக்கள்)** |  |  |  |  |  |  |
| 1. | குராம்பூ | - | 56, 224 | - | - | 266 | 3 |
| 2. | கடம்பு | - | - | - | - | - | - |
|  | **(நெய்தல் திணைப் பூக்கள்)** |  |  |  |  |  |  |
| 1. | நெய்தல்பூ | 8, 23 | 113,190,271, 284, 293 | 27,67,78,117, 123,138,155, 183,187,195, 239,275,283 | 60,200 | - | 22 |
| 2. | தாழம்பூ | - | - | 211, 349 | - | - | 2 |
| 3. | முண்டகப்பூ | - | - | 191,207,245 |  |  | 3 |
|  | **(மருதத் திணைப் பூக்கள்)** |  |  |  |  |  |  |
| 1. | தாமரைப்பூ | 1 | - | - | 260,300,310 | - | 4 |
| 2. | கழுநீர் | 273 | - | - | - | - | 1 |
| 3. | குவளை | 6,34,85, 160,204, 301,317, 332,376 | 37,105,166, 262,308,391 | - | 370 | 161,367 | 18 |

| | **(முல்லைத் திணைப் பூக்கள்)** | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | குல்லை | 376 | - | - | - | - | 1 |
| 2. | முல்லை | 108,112, 144, | 115, 316, 343, 366 | 369 | - | 59,169,248,361,367. | 13 |
| 3. | தோன்றி | 173,176 | - | - | | 221 | 3 |
| 4. | பிடவம் | - | 246, 256 | - | - | 99 | 3 |
| | | | | **மொத்தம்** | | | **111** |
| | | | | | - | | |

**நற்றிணையில் இடம்பெற்றுள்ள 67 பூக்கள் திணை அடிப்படையில்**

| வ.எண் | பூக்கள் | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | அதிரல் | - | 52, 337 | - | - | 124 | 3 |
| 2. | அடும்பு | - | - | - | - | 145,254, 272,338, 349 | 5 |
| 3. | ஆசினிப்பூ | 51 | - | - | - | - | 1 |
| 4. | ஆம்பல் | 6 | 113 | - | 100,200, 230,280, 300 | 345 | 8 |
| 5. | ஆத்தி | 265 | - | - | - | - | 1 |
| 6. | ஆவிரை | 146, 377 | - | - | - | 152 | 3 |
| 7. | இருப்பை | - | - | - | - | 111 | 1 |
| 8. | ஈங்கை | - | 79, 193 | 181 | - | 124 | 4 |
| 9. | உழிஞை | 146, 377 | - | - | - | 152 | 3 |
| 10. | எருவை | 156,261 294 | - | - | - | - | 3 |
| 11. | எருக்கம்பூ | 146,220, | - | - | - | 152 | 5 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 294, 377 | | | | | |
| 12. | எறுழம்பூ | - | 302 | - | - | - | 1 |
| 13. | கடம்பு | 34 | - | - | - | - | 1 |
| 14. | கரும்பின்பூ | - | 241, 366 | - | - | - | 2 |
| 15. | கருவிளை | - | - | 22 | - | - | 1 |
| 16. | காளாப்பூ | - | 256 | - | - | - | 1 |
| 17. | காந்தள் | 17,34,85,<br>185,313,<br>355,359,<br>379,399 | 14, 29 | 69, 99,<br>221 | - | 294 | 15 |
| 18. | காயா | - | - | 242, 371 | - | - | 2 |
| 19. | குருக்கத்தி | - | - | 97 | - | - | 1 |
| 20. | குரா | 224 | 56 | 266 | - | - | 3 |
| 21. | குருந்து | - | - | 321 | - | - | 1 |
| 22. | குமிழம்பூ | - | 286 | - | - | - | 1 |
| 23. | குல்லை | 376 | - | - | - | - | 1 |
| 24. | குவளை | 6,34,77, | 37,105, | 161, 367 | 370 | - | |

|  |  |  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|---|---|
|  |  | 85,160, 204,301, 317,332, 357,367, 376 | 166,205, 262,308, 391 |  |  |  | 22 |
| 25. | குளவி | 51,119, 232,376 | 346 | - | - | - | 5 |
| 26. | குறிஞ்சி | 268, 301 | - | - | - | - | 2 |
| 27. | கூதாளி | 244,313, 376 | - | - | - | - | 3 |
| 28. | கூவிளம் | 119 | - | - | - | - | 1 |
| 29. | கொன்றை | - | 246,296, 302 | 99, 221, 242, 371 | - | - | 7 |
| 30. | கைதை | - | - | - | - | 178,349, 163 | 3 |
| 31. | கோங்கம் | - | 48 | - | - | - | 1 |
| 32. | சந்தனப்பூ | 140, 261 | - | - | - | - | 2 |
| 33. | சுரிதகம் | - | 86 | - | - | - | 1 |
| 34. | சிறு செம்பகம் | - | 314 | 97 | - | - | 2 |
| 35. | செம்முருக்கு | - | 73 | - | - | - | 1 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 36. | செங்காந்தள் | 173,176, 188 | - | - | - | - | 3 |
| 37. | செவ்வாம்பல் | - | - | - | 250 | - | 1 |
| 38. | ஞாழல் | - | - | - | - | 31,54,74, 96,106, 167,191, 267,311, 315 | 10 |
| 39. | தமலாக்கொடி | - | - | 292 | - | - | 1 |
| 40. | தளவம் | - | - | 242 | - | - | 1 |
| 41. | தாமரை | 1 | - | - | 260,300, 310 | - | 4 |
| 42. | தாழை | - | - | - | - | 19,49,78, 203,211, 235,299, 335 | 8 |
| 43. | நறவம்பூ | 25 | - | - | - | - | 1 |
| 44. | நறுமோரோடம் | - | 337 | - | - | - | 1 |
| 45. | நீலம் | 379,   273 | - | 161 | - | - | 3 |
| 46. | நெய்தல் | 8,23,190 | 113,271, | - | - | 27,67,78, | |

|  |  |  |  |  |  |  |  |
|---|---|---|---|---|---|---|---|
|  |  |  | 284,293 |  |  | 117,123,<br>138,155,<br>183,187,<br>195,239,<br>283,349,<br>372,382. | 22 |
| 47. | நொச்சி | - | 115,184,<br>293, 305 | - | 200 | 267 | 6 |
| 48. | பகன்றை | - | 86 | - | - | - | 1 |
| 49. | பனங்குருத்து | - | - | 169 | - | - | 1 |
| 50. | பாதிரி | - | 52, 118,<br>198, 337 | - | - | - | 4 |
| 51. | பாலை | - | 107 | - | - | - | 1 |
| 52. | பிடவம் | - | 246, 256 | 238, 242 | - | - | 4 |
| 53. | பீர்க்கு | 326 | 197, 277 | - | - | - | 3 |
| 54. | புன்னை | - | 76 | - | 180 | 31,49,63,<br>74,78,87,<br>91,94,96,<br>159,163,<br>167,175,<br>231,235,<br>249,270,<br>278,311, |  |

| | | | | | | 315,323, 327,375 | 25 |
|---|---|---|---|---|---|---|---|
| 55. | பூளை | 146, 152 | - | - | - | 377 | 3 |
| 56. | மாம்பூ | - | 9, 224 | - | - | - | 2 |
| 57. | மருதம் | 350 | - | - | - | - | 1 |
| 58. | முல்லை | 61,108 | 115,366, 343 | 59,69,36, 169,248, 321,367 | 370 | 369 | 14 |
| 59. | முண்டகம் | - | - | - | - | 191,245, 311 | 3 |
| 60. | மௌவல் | 122 | 316,115 | - | - | - | 3 |
| 61. | வயலைக்கொடி | | 305, 179 | - | - | - | 2 |
| 62. | வாழைப்பூ | 176,188, 225,355 | - | - | 400 | - | 5 |
| 63. | வெண்கடம்பு | - | - | - | 20 | - | 1 |
| 64. | வெண்காந்தள் | - | - | 161 | - | - | 1 |
| 65. | வெள்ளாம்பல் | - | - | - | 290,390 | - | 2 |
| 66. | வாடாமலர் | - | 16 | - | - | - | 1 |

| 67. | வேங்கை | 13,112, 125,151, 168,206, 222,232, 251,257, 259,313, 334,373, 379,383, 389,396 | 28,157, 202,384 | 161 | 216 | - - | 24 |
|---|---|---|---|---|---|---|---|
| | மொத்தப்பூக்கள் | 89 | 62 | 31 | 18 | 79 | 279 |

திணை அடிப்படையில் பூக்களை வகைப்படுத்திக் காணும்போது குறிஞ்சித் திணையில் அதிகமானபூக்கள் (89) இடம்பெற்றுள்ளன. மருதத் திணையில் மிகவும் குறைவான பூக்கள் (18) மட்டும் இடம்பெற்றுள்ளன.

**நற்றிணையில் இடம் பெறும் 67 பூக்கள் அகர வரிசையில்:**

1. அடும்பு (அடுப்பங்கொடி)
2. அதிரல்(மல்லிகை வகை)
3. ஆசினிப்பூ
4. ஆத்தி
5. ஆம்பல்
6. ஆவிரை
7. இருப்பை
8. ஈங்கை(ஈங்குக்கொடி)
9. உழிஞை
10. எருக்கு (புழகு)

11. எருவை (கொறுக்கச்சி)

12. எறுழம்பூ

13. கடம்பு

14. கரும்பு

15. கருவிளை (கருங்காக்கணம்)

16. காளாப்பூ

17. காந்தள்

18. காயா (காசாப்பூ)

19. குமிழம்பூ

20. குரா (குரவம், குரவு)

21. குருக்கத்தி (மாதவிக்கொடி)

22. குருந்து (புனவெலுமிச்சை)

23. குல்லை (மலைப்பச்சை, நாய்த் துளசி)

24. குவளை

25. குளவி(காட்டு மல்லிகை, மலை மல்லிகை)

26. குறிஞ்சி

27. கூதளம் (தூதுவளை, தாளிக்கொடி)

28. கூவிளம்(வில்வம்)

29. கைதை (தாழம்பூ)

30. கொன்றை (சரக்கொன்றை)

31. கோங்கம்

32. சந்தனப்பூ (ஆரம்)

33. சுரிதகம் (திருகுப்பூ)

34. செங்கருங்காலி (நறுமோரேடம்)

35. செம்முருங்கு

36. செவ்வாம்பல்

37. ஞாழல் (புலிநகக் கொன்றை)

38. தமலாக்கொடி

39. தளவம் (மஞ்சள் முல்லை)

40. தாமரை

41. தாழை (தெங்கம்)

42. தோன்றி (செங்காந்தள்)

43. நறவம் ( நறுமணக்கொடி)

44. நீலம்

45. நெய்தல்

46. நொச்சி (சிந்துவாரம்)

47. பகன்றை (சிவதைக் கொடி)

48. பனங்குருத்து

49. பாதிரி

50. பாலை

51. பித்திகம் (சிறுசென்பகம், பித்திகை)

52. பிடவம்

53. பீர்க்கு (பீரம், பீரை)

54. புன்னை (புன்னாகம்)

55. பூளை (சிறுபூளை)

56. மாம்பூ

57. மருதம்

58. முண்டகம் (கழிமுள்ளி)

59. முல்லை

60. மௌவல் (காட்டு மல்லிகை)

61. வயலைக்கொடி

62. வாடா மலர்

63. வாழைப் பூ

64. வெண் கடம்பு (மரா அம்)

65. வெண் காந்தள் (கோடல்)

66. வெள்ளாம்பல்

67. வேங்கை

**நற்றிணையில் இடம்பெற்றப் பூக்கள் மற்றும் தாவரக் குடும்பத்தின் பெயர்களுடன் அட்டவணை**

| வ.எண் | பூக்களின் பெயர் | தாவரப் பெயர் | தாவரக் கலைச்சொல் |
|---|---|---|---|
| 1. | அடும்பு | Hare leaf | Ipomea biloba.Forsk |
| 2. | அதிரல் | Wild Jasmine | Jasminum sp. |
| 3. | ஆசினிப்பூ | Breadfruit tree | Artocarpusincisa |
| 4. | ஆத்தி | Common mountain ebony | Bauhinia tomentosa.Linn |
| 5. | ஆம்பல் | Water lily | Nymphaea alba |
| 6. | ஆவிரை | Tanners Senna (Tenners cassia) | Cassia-auricuiata |
| 7. | இருப்பை | South Indian Mahua | Bassia longifolia |
| 8. | ஈங்கை | Species of sensitive tree | Mimosa rubicaulis |
| 9. | உழிஞை | A common wideside weed | Aerua Ianata |
| 10. | எருக்கு | Yarcum (Madar) | Catotropis gigantea |
| 11. | எருவை | European Bamboo read | Oxytenanthera Thwaitesil |
| 12. | எறுழம்பூ | A hill country tree with red flower | Woodfordia fruticasa L. |
| 13. | கடம்பு | Seaside Indian Oak | Anthocephalus cadamba |
| 14. | கரும்பு | Sugarcane | Saccarum officinarum |
| 15. | கருவிளை | Mussel-shell creeper | Clitroia tirnatea |

| 16. | காளாப்பூ | Fungus mushroom | Agaricus campestris |
|---|---|---|---|
| 17. | காந்தள் | Malabar glory lily | Gloriosa superba |
| 18. | காயா | Iron wood tree | Memecyion edula |
| 19. | குழிழம்பூ | Small cashmere tree | Gmelina arboria.Linn. |
| 20. | குராம்பூ | | |
| 21. | குருக்கத்தி | Common bottle flower | Webera corymbosa |
| 22. | குருந்து | Common delight of the woods | Hiptage madablota |
| 23. | குல்லை | Wild lime | Atalantia |
| 24. | குளவி | Wild basil | Cannabis sativa.Linn. |
| 25. | குவளை | Wild Jasmine | Jasminum |
| 26. | குறிஞ்சி | Purple Indian Water Lily | Nymphaea steliata.wild |
| 27. | கூதாளி | Henna | Lawsonia alba |
| 28. | கூவிளம் | Convolvulus | Ipomea |
| 29. | கைதை | Bail | Aegie marmeios |
| 30. | கொன்றை | Fragrant Screwpine | Pandanus odoratissimus |
| 31. | கோங்கம் | Indian laburnum | Cassia marginata |
| 32. | சந்தனப்பூ | Falsetragacanth | Cochiospermumgossyplum |
| 33. | சுரிதகம் | Sandal Flower | Santalum album |
| 34. | செங்கருங்காலி | - | - |
| 35. | செம்முருங்கு | Red catechu | Acacia catechu |
| 36 | செவ்வாம்பல் | East Indian coral tree | Erythrina Indica |
| 37. | ஞாழல் | Red water lily | Nymphaca rubra R. |
| 38. | தமலாக்கொடி | Orange cap calyxedbrasiletto-climber wagaty | Caesalpiniapuicherrima |

| | | | |
|---|---|---|---|
| 39. | தளவம் | Leather-berried bindweed | Rivea ornate |
| 40. | தாமரை | Golden Jasmine | Jasminum humile |
| 41. | தாழை | Lotus | Melumbium spociosum |
| 42. | தோன்றி | Fragrant Screwpine | Pandunus odoratissimus |
| 43. | நறவம் | Malabar glory lily | Gloriosa superba L |
| 44. | நீலம் | Peacock’s crest | Calsalpinia pulcherrima |
| 45. | நெய்தல் | Blue water lily | Nymphaca stellate willd |
| 46. | நொச்சி | White Indian Water lily | Nymphaea alba |
| 47. | பகன்றை | Stalked leaflet chaste tree | Vitex sp. |
| 48. | பனங்குருத்து | Indian Jalap | Ipomaeaturpethum |
| 49. | பாதிரி | Palmyta-plam | Borassus flabellifer Linn. |
| 50. | பாலை | Yellow flowered fragrant | Stereospermum |
| 51. | பிடவம் | Blue-dyeing roseboy | Chelonoides |
| 52. | பித்திகம் | Badaly emetic rat | Wrigtia tinctoria (Roxh.) |
| 53. | பீர்க்கு | Large Flowered Jasmine | Randia malabarica |
| 54. | புன்னை | Sponge gourd | Jasminum grandiflorum |
| 55. | பூளை | Indian beech | Luffa acutangula |
| 56. | மருதம் | Wool plant | Calophylium tomentosum |
| 57. | மாம்பூ | Black wingled myrobolan | Acreea Ianata |
| 58. | முண்டகம் | Wild Mango | Terminalia |
| 59. | முல்லை | Water thorn | Mangifera indica Linn. |
| 60. | மௌவல் | Arablan Jasmine | Hygraplila spinosa |
| 61. | வயலைக்கொடி | Wild Jasmine | Jasminum sambae |

| 62. | வாடா மலர் | Creeping bind weed | Jasminumangustiflolium |
|---|---|---|---|
| 63. | வாழை | Bacholor’s Buttons | Ipomaea aquatic |
| 64. | வெண் கடம்பு | Plantain | Gomphrena globosa |
| 65 | வெண்காந்தள் | Seaside Indian oak | Musa Paradisiaea |
| 66. | வெள்ளாம்பல் | Pipal | Barringtania racemosa |
| 67. | வேங்கை | White Malabar glory lily | Shorea robusta |
| | | Indian kino flower | Gloriose superba |

**தொகுப்புரை**

- எட்டுத்தொகை நூலான நற்றிணை நல்ல திணை, நல்லொழுக்கம் எனப்படும்.

- திணை என்பதற்கு நிலம், ஒழுக்கம் என அகராதிப் பொருள் கூறுகிறது.

- நற்றிணைக்குப் பின்னத்தூர் அ. நாராயணசாமி உரை ஆசிரியர் ஆவார். இது அகவல் பாக்களால் ஆனாது. ஒன்பதடி சிறுமையும், பன்னிரண்டடி பேரெல்லையும் கொண்டது. நூற்று எழுபத்தைந்து புலவர்கள் பாடப்பட்டது.

- நற்றிணையில் கூற்று அடிப்படையில் 398 பாடல்கள் அமையப்பெற்றுள்ளன. 110, 379 ஆகிய இரண்டு பாடல்களும் பன்னிரண்டு அடிகளுக்கு மேலுள்ளன. கூற்று அமையாதவை 234, 385 ஆவது பாடல்களாகும்.

- கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். திருமாலைப் பற்றிய பாடலாக அமைந்துள்ளது.

- காதல், கற்பு என இயற்கை அழகின் பெட்டகமாகத் திகழ்கிறது. பழங்காலத் தழிழரின் ஒழுக்கலாற்றை காதல் நிகழ்வுகளை இயற்கைப் பின்னணியில் எடுத்தியம்புகிறது.

- அகம், புறம் என இரண்டாகப் பகுத்தனர். இவற்றில் நற்றிணை அகம் சார்ந்ததாகும். கைக்கிளை முதல் பெருந்திணை வரை ஏழு வகைப்படும். இதில் அகம் ஐந்திணைகளாகும். புறத்திணைகளாக வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை என எண்வகைத் திணையும் பூக்களின் பெயர்களால் அமையப்பெற்றுள்ளன.

- முதல் பொருள் நிலம், பொழுதையும்: கருப்பொருளாக மரம், செடி, கொடி, பூவும்: உரிப்பொருள்களாக மாந்தரின் உணர்வுகளான புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் ஆகியவை சுட்டப்பட்டுள்ளன.

- நிலையியல் உயிர்கள் இயற்கையின் சித்திரிப்பில் உவமை, உருகாட்சி, உள்ளுரை, இறைச்சி போன்ற கவிதை உத்திகளின் பகுப்பாகும்.

❖ அகம் என்பது மனத்தால் வெளிப்படுத்த முடியாத, உள்ளத்தால் அடையும் இன்பத்தைக் குறிப்பிடுகிறது. அக இலக்கியத்தில் தோழி கூற்று அதிகமாகவும், பரத்தைக் கூற்று குறைவாகவும் உள்ளன. நற்றிணையில் பொது நிலையில் களவு சிறந்த ஒழுக்கமாக உள்ளதை அறிய முடிகிறது.

❖ பூ, மலர் என்ற சொற்கள் பயன்பட்டாலும் பூ என்ற சொல்லே பொருத்தமானதாகும். பூ என்பது பொதுப் பெயர். அதன் பல நிலைகள் அரும்பும் போது-அரும்பு. அரும்பிப் பனியில் நனையும் போது நனை, நனைந்து முத்தாகும் போது முகை. வெடிக்கத் தயாராக இருக்கும் போது மொக்குள் அரும்பு. விரிந்து கொண்டு இருக்கும் போது. போது மணம் வீசத் தொடங்கும் போது முகிழ். மலர்ந்த பின் மலர் நன்றாக மலர்ந்து மகரந்தம் அலரும் போது அலர். கூட்டமாக மலர்ந்தால் பொதும்பர். வீழும் போது வீ. உதிர்ந்து கிடக்கும் பூக்கள் பொம்மலர், பழுப்பாய் வாடிய பின் செம்மலர், செம்மல் எனக் கூறப்படுகிறது.

❖ நற்றிணைப் புலவர்கள், திணை, கூற்று அடிப்படையில் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளனர். பெண்பாற், ஆண்பாற் புலவர்கள் பற்றிய செய்திகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ நற்றிணையில் இடம் பெற்ற பூக்கள் அகர வரிசைபப்படுத்தப்பட்டு, தாவரக் குடும்பத்தின் பெயர்களும் அட்டவணைப்படுத்தப் பெற்றுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. சாமி. சிதம்பரணார், எட்டுத்தொகையும் தமிழ் பண்பாடும், ப-1.
2. நா. உசாதேவி, நற்றிணை நவிலும் தாவரப் பெருக்கம் (ஆய்வுக் கட்டுரை), ப-125.
3. ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப-628.
4. நர்மதாவின் தமிழ் அகராதி (தமிழ்-தமிழ்-ஆங்கிலம்), ப-427.
5. நா.உசாதேவி, நற்றிணை நவிலும் தாவரப் பெருக்கம் (ஆய்வுக் கட்டுரை), ப-125.
6. மேலது, ப-125.
7. யாழ்.சு. சந்திரா, இலக்கியமும் சூழலியலும், ப-73.
8. குழந்தையுரை, தொல்- பொரு, அகத்திணை- நூற்பா-3.
9. மேலது, நூற்பா-4.
10. நா. உசாதேவி, நற்றிணை நவிலும் தாவரப் பெருக்கம் (ஆய்வுக் கட்டுரை), ப-127.
11. பூ.மு. அன்புசிவா, சங்க இலக்கிய நற்றிணைத் தாவரங்களின் வகைகள், ப-1.
12. இளம்பூரனர் (உ.ஆ), தொல், பொருள், நூற்பா-1586.
13. ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப-16.
14. ஆசிரியர் குழு, நர்மதாவின் தமிழ் அகராதி, (தமிழ்-தமிழ்-ஆங்கிலம்) ப-9.
15. ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப-16.
16. மேலது, ப-15.
17. ஆசிரியர் குழு, லிப்கோ தமிழ்-தமிழ்-ஆங்கிலம் பேரகராதி, ப-735
18. கு.வி. கிருஷ்ணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப-66.
19. கோவை. இளஞ்சேரன், இலக்கியம் ஒரு பூக்காடு, ப-132.
20. இரா. இராமகிருட்டிணன், கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் 99 பூக்கள், ப-267.
21. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம் மரபியல், நூற்பா-89.
22. புறநானூறு, 269.

23. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-268.

24. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப-81.

25. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-268.

26. பரிபாடல், 18:34-35

27. நெடுநெல்வாடை, 12-14.

28. அகநானூறு, 97.

# இயல் - 2

## பூக்களின் வகைகள்

மலர்ந்த பூக்கள் தான் மலர்கள் எனச் சுட்டப்படுகின்றன. பண்டையத் தமிழர் இயற்கையில் செடி, கொடிகள் மிடைந்து,இலையுந் தழையும், பூவும் கனியும் நிறைந்து காணும் சோலையாகத் தாம் வாழ்ந்த பகுதியினை 'நானிலம்' என்று அழைத்தனர். முல்லையும் குறிஞ்சியும் தத்தம் இயல்பு குன்றி, வளம் குறைந்து வற்றிய நிலையிற் காணப்படுமேயாயின் அந்நிலப்பகுதி 'பாலை' எனப்பட்டது. நிலத்தை ஐந்திணைகளாகப் பிரித்து, பண்பாட்டின் அடிப்படையில் உணர்ந்திருந்த திறமும், ஒவ்வொரு நிலத்திலும் அவ்வச் சூழ்நிலைக்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளன. அத்திணைகளுக்கு அவ்வந்நிலத்தில் காணப்படும் பூக்களின் பெயர்களைக் கொண்டே பெயரிட்டுள்ளனர். ஒவ்வொரு நிலத்தில் பூக்கும் பூக்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பூக்கள் பல்வேறு நிறம், மணம், வண்ணமாயிருப்பினும் ஒரு வகையில் தாவர இனத்தில் ஒன்றுபட்டுக் காணப்படுவதை நற்றிணை வழி வகைப்படுத்திக் கண்டறிவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### வகைகள்

முழுமை என்பது தனித்த ஒன்றல்ல. அதனுள் உட்கூறுகள் பல இணைந்திருக்கும். அது போல மலரும் பல கூறுகளைக் கொண்டது. **"மலர் என்பதற்குப் பூ: மலரென்னேவல்: மலர்ச்சியானது என்றும் மலர்தல் என்பதற்கு எதிர்தல், தோன்றுதல், நிறைதல், விரிதல், மொட்டுவிழ்தல், அகலுதல், பரத்தல், மனமகிழ்தல்"**[1] என்றும் கழகத் தமிழகராதி பொருள் உரைக்கின்றது.**"பூ என்பதற்குத் தோன்றுதல், மொட்டு விரிதல், மலர்தல், பூக்கள் தோன்றச் செய்தல்"**[2] எனத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.

பழந்தமிழரின் இலக்கியங்கள் இயற்கையின் பொருண்மையை உற்றுநோக்கி உணர்ந்து படைக்கப்பட்டுள்ளன. இதில் தாவரத்தின் ஓர் உறுப்பான பூக்கள் அழகு, குளிர்ச்சி, மகிழ்ச்சி, கற்பு இவற்றின் குறியீடாக எடுத்தாளப்பட்டுள்ளன. **'வகைஎன்ற சொல் ரகம், முறை, வழி, பிரிவு'**[3] என்று நர்மதாவின் தமிழ் அகராதி பொருள் உணர்த்துகின்றது. ஆங்கிலத்தில் **'Kind**

என்பதற்கு ஒத்த இயல்புடைய, தன்மையுடைய மனிதர்கள், விலங்குகளின் **தொகுதி, குழு, இனம், வகை, பிரிவு'**[4]என ஆகஸ்போர்டு ஆங்கிலம் - ஆங்கிலம் - தமிழகராதி சுட்டுகிறது. இவ்வகராதி **'Classification என்பதற்குப் பிரிவு, இனம், ரகம், தன்மை'**[5] என விளக்கமும் அளிக்கிறது. ஆங்கிலத்தில் Kind, Classification என்பர். பூக்களை வகை பிரிப்பதற்கு அவற்றின் தன்மைகள் எடுத்தாளப்பட்டுள்ளன. பூக்களின் நிறம், மணம், மென்மை, வண்ணம், சுவை,கவர்ச்சி அடிப்படையில் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என வகைப்படுத்தப்பட்டுள்ளன. தொல்காப்பியர் மரம், புல் இரண்டின் உறுப்புகளை,

> **'புறக் காழனவே புல் என மொழிப**
> **அகக் காழனவே மரம் என மொழிப'**[6]

> **'தோடே மடலே ஓலை என்றா**
> **ஏடே இதழே பாலை என்றா**
> **ஈர்க்கே குலை என நேர்ந்தன பிறவும்**
> **புல்லொடு வரும் எனச் சொல்லினர் புலவர்'**[7]

> **'இலையே முறியே தளிரே கோடே**
> **சினையே குழையே பூவே அரும்பே**
> **நனை உள்உறுத்த அனையவை எல்லாம்**
> **மரனொடு வருஉம் கிளவி என்ப'**[8]

எனும் நூற்பாக்களின் வழியும், நில அடிப்படையில் இதனை,

> **'எந் நில மருங்கினும் பூவும் புள்ளும்**
> **அந் நிலம் பொழுதொடு வாரா ஆயினும்,**
> **வந்த நிலத்தின் பயத்த ஆகும்'**[9]

என்கின்றார். ஐந்து வகை நிலங்களுக்கும் உரிய பூக்களும், பறவைகளும் அந்த நிலத்திற்குரிய காலத்துக்கும் பொருந்தாது, வேறொரு நிலத்துக்கு வருமானாலும், அவை அப்படி வந்த நிலத்துக்கு உரிய கருப்பொருளாகக் கொள்ளப்படும் எனப் புலப்படுத்துகிறார். பூவைக் குறிக்க பலவகைச் சொற்கள் சங்ககாலத்தில் இருந்ததை இலக்கியத்தின் வழியே அறியமுடிகிறது. பூவிற்கு மலர், போது,

அலர், தார், தாமம், வீ, இணர், துணர், சமனசம், குசுமம் எனப் பல பெயர்கள் உண்டு. இதனை,

**'தகைபெறு குசுமம் போது தாரவர் சமனசந்தான்**

**மிகுமண மலரே தாமம் வியிணர்துணர் பூவின் பெயர்'**[10]

என்கிறது சூடாமணி நிகண்டு. மலரைக் குறிக்கும் சொற்களாக வீ, மலர், அலர், அலரி, பூ என்பனவாகும் என்கிறது நிகண்டு. இவை தவிர, புழல் என்றொரு சொல்லும் காணப்படுகிறது. இருப்பைப் பூவைக் குறிக்க 'புழல்' என்ற சொல்லை,

**"அங்குழை இருப்பை அறைவாய் வான்பு**

**புல்லுளைச் சிறாஅர் வில்லின் நீக்கி**

**மரை கடிந்தூட்டும் வரையகச் சீறூர்" (அகநா.-109)**

என்ற அடிகளில் காணலாம். பூ, மலர் என்ற சொற்கள் அழகு, மலர்ச்சி என்ற பொருளைத் தருகின்றன, அழகிய யானையைப் **"பூநுதல் யானை"**[11] என்றும், **"பூக்களின் வேலை"**[12] என்ற புறப்பாட்டில் 'பொலிக' என்ற பொருளையும், **"வையகம் மலர்ந்த தொழில் முறை"**[13] என்றும் பூ, மலர் என்ற சொற்கள் ஆளப் பெற்றுள்ளதையும் அறியமுடிகிறது. அலரி, அலர், பூ என்பன கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ ஆகிய எல்லா இன மலர்களையும் குறிக்கும் பொதுவானதாகும். சங்க இலக்கியங்களில் மலர் என்ற சொல் நீரில் மலர்ந்தனவற்றைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டது. 'மலரோ உண்கண்', 'மலர்க்கண்' எனவரும் இடங்களில் 'மலர்' என்ற சொல் நெய்தல் அல்லது குவளை மலரைக் குறிக்கின்றது. பொதுவாக மரத்தில் மலரும் பூக்கள் 'வீ' என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றன. சிறிய மலராகக் கூம்பாது கீழே உதிர்ந்து விழும் மலர்களை வீ என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. **'செவ்வீவேங்கை' (நற்-222)**, **'சிறுவீமுல்லை' (நற்-248)**, **'சிறுவீஞாழல்' (நற்-311)** என்று நற்றிணை எடுத்துக் கூறுகிறது.

**அரும்பு, போது, மலர்**

மலர் மலர்வதற்கு முன்புள்ள பருவநிலைகள் நனை, அரும்பு, முகை, போது என்ற பெயர்களால் வழங்கப்பட்டன. அரும்பு, போது, மலர் ஆகியவற்றிற்குள்ள வேறுபாட்டினை,

**'பனியரும்பு உடைந்த பெருந்தாள் புன்னை'** (நற்-87)

**'அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை'** (நற்-112)

**'ஏதி லாளனும் என்ப போதவிழ்**
**புதுமணற் கானல் புன்னைநுண் தாது'** (நற்-74)

**'மாயிதழ்க் குவளை**
**வண்டுபடு வான்போது கமழும்'** (நற்-105)

**'கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்'** (நற்-349)

**'முகைநாள் முறுவல் தோற்றித்**
**தகைமலர் உண்கண்'** (நற்-370)

என நற்றிணை அடிகள் தெளிவுபடுத்துகின்றன. அரும்பு, போது, மலர் போன்றவை பூக்களின் பருவநிலையைப் புலப்படுத்துகிறன. 'திருக்குறள்' மலரின் நிலையைக் காதலுக்கு உயர்வாக

**'காலை அரும்பிப் பகலெல்லாம் போதாக**
**மாலை மலருமிக் நோய்'**[14]

என்பதில் அதன் நிலைகளைக் குறிக்கிறது. மலரின் பருவங்களில் அரும்பு முதற்பருவம்.போது மலராவதற்கு முந்திய பருவம். இதனை,

**'சினைய பாசரும்பீன்ற செம்முகை முருக்கின்**
**அப் போதவீழ் அலரி'**[15]

என்ற அகநானூற்றுப் பாடல்வழி அறியமுடிகிறது. அன்றே மலர்ந்த புது மலரை 'நாண்மலர்' என்றும் 'நாட்பூ' என்றும் வழங்கினர்.

**'நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிச்**

**சுளிச்சுரும் பரற்றும்'**[16]

என்று சுளிச் சுரும்பரற்றும் நாண் மலரைக் காட்டும் விதத்தில், உதிர்ந்து கீழே விழுந்த மலர் 'செம்மல்' எனப்பட்டது.

**'புதுப்பூஞ் செம்மல்'**[17]

**'மெல்பூஞ் செம்மல்'**[18]

கீழே விழுந்து வாடி உதிர்ந்த மலர்களைச் சாம்பல் என்ற பெயரலால் வழங்கினர் இதனை

**'ஆம்பற் பூவின் சாம்பலன்'**[19]

என்ற குறுந்தொகை அடிகளால் அறியலாம். அவ்வாறு இலக்கியங்களின் வழியே பூக்களின் வளர்ச்சி நிலையை அறிய முடிகிறது.

**பூங்கொத்து**

ஒரு சில மலர்கள் கொத்துக் கொத்தாக மலரும் தன்மையுடையன. தனித்து மலரும் மலரன்றிக் கொத்தாக மலரும் மலர்களும் இவற்றைப் போன்று பல பெயர்களைப் பெற்று விளங்குகின்றன. கொத்துக்களின் நிலைக்குத் தக்கவாறு பெயர்களும் பல்வேறு நிலையில் உள்ளன. அவை குலை, துணர் அல்லது இணர், குரல் என்பதாகும். காந்தள் மலர் குலை குலையாகவும் காஞ்சி, ஞாழல் போன்றவை இணராகவும் பூக்கும் தன்டை உடையவை. நொச்சி, நெய்தல் போன்ற பூக்கள் குரலாக மலர்கின்றன. இதனை,

**'காந்தள் அலங்குலைப் பாய்ந்து' (நற்-185)**

**'வாங்குசினை மருதத்துத் தூங்குநுணர்' (நற்-350)**

எனப் பூங்குலை, குலையாக மலர்ந்துள்ள நிலையை நற்றிணை எடுத்துரைக்கிறது.

**மாலைகள்**

கட்புலன்களுக்கு விருந்தளிக்கும் மலரினங்களைத் தொடுத்து மாலையாகவும் ஆக்கியுள்ளனர். அம்மாலைகளும் தொடுக்கும் விதத்தால் கண்ணி, தார், தொடலை, தொடை, கோதை, பிணையல், மாலை எனப் பல பெயர்களைப் பெற்றுள்ளன. இதனைக் கீழ்க்கண்ட நற்றிணை அடிகள் விளக்குகின்றன.

**'கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி'** **(நற்-34)**

**'தேங்கமழ் விரிதார் இயல்தேர்'** **(நற்-190)**

**'பூவுடன் நெறிதரு தொடலை'** **(நற்-138)**

**'முகையவிழ் கோதை'** **(நற்-260)**

**'எதிர்மலர்ப் பிணையல'** **(நற்-160)**

**'மாலைக் கட்டின் மார்பூர்பு இழிய'** **(நற்-269)**

என மாலையைப் பல்வேறு வண்ணப் பூக்களால் தொடுத்தும், கட்டியும் சூடியுள்ளனர். இன்று மாலை கட்டும் தொழில் செய்து தங்களது பொருளாதாரத்தை வாழ்வியலை உயர்த்தும் முறையைக் காணமுடிகிறது. வண்ணப் பூக்களால் தொடுத்த மலர்களை இன்று விற்பனையில் மாலை எனக் கூறுவது நடைமுறை வழக்காகக் காணப்படுகிறது. இதனை 'பண்டாரம்' என்ற இனத்தினர் செய்து வருகின்றனர். திருக்கோயில்களின் பூஜைகளுக்கு நந்தவனத்தில் பூக்களைப் பறித்துப் பூக்கட்டும் மணியாள் இருந்துள்ளனர்.

**குற்றி**

நீரில் மலர்ந்த மலர்களைக் 'குற்றி' என்ற சொல்லால் வழங்கினார்கள். இலக்கியங்களில் **'மலர்ந்த பொய்கைப் பூக்குற்று' (நற்-115), 'நெய்தல் குற்றி'** (நற்-349) என்றும் **"குவளைகுற்றும்"**[20] எனவும் காணப்படுகின்றன. பருவங்கள் மலர்களின் மூலமும் பகுக்கப்பட்டுள்ளன. முல்லை தமிழர் வாழ்வில் கற்பின் மலர் என்று சொல்லப்படுகிறது. வாழ்வியல் மரபுகளை வகுக்கத் துணை நின்ற மலர்கள் தமிழர் வாழ்வின் மங்கலப் பொருளாகவும் விளங்குகின்றன. மங்கலப்

பொருள்களில் மதிப்பும் முதன்மையும் பெற்று விளங்குவதாக மலர் சிறப்பிடம் வகிக்கிறது. பூ,மலர் என்னும் இவ்விரு சொற்களும் ஒரு பொருள்களைக் குறிக்கின்றன. பல் வகை மலர்களுக்கும் பொதுவாகவும் வழங்கப்பெறும் பொது பெயர்ச் சொற்களாகும். இவ்வாறு பல பெயர்களால் வழங்கப்பெற்று வருகின்ற பல்வகை மலர்களும், அவை மலர்கின்ற இடவகையால் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நால் வகைப்படுத்தப்பெறும். இளங்கோவடிகள்

**"கோட்டினும் கொடியினும் நீரினும் நிலத்தினும்**
**காட்டிய பூ"**[21]

எனக் கூறியுள்ளதை அறியமுடிகிறது. இந்நால் வகை மலர்களைச் சேக்கிழார்,

**"கோட்டு மலரும் நிலமலரும்**
**குளிர்நீர் மலரும் கொடுங்கொடியின்**
**கோட்டு மலரும்"**[22]

எனப் பெரியபுராணத்தில் குறிப்பிட்டுள்ளதையும் அறியமுடிகிறது. மற்றொருப் பாடல் இதனை,

**"கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு**
**புதர்ப்பூ என்றிவை நால்வகைப் பூவே"**[23]

என்றும் வகைப்படுத்திக் கூறியுள்ளது. இந்நால்வகைப் பூக்களும் சிறப்பாக நால்வகை நிலங்களின் அடிப்படையில் மலை-குறிஞ்சி, காடு-முல்லை, வளநிலம்-மருதம், நீர்-நெய்தல் என்று நால்வகைச் சிறப்பினால் வகைப்படுத்தப்பட்டன. எனினும் ஒவ்வொரு வகை நிலத்திலும் நால்வகைப் பூக்களும் மலர்தலுண்டு. குறிஞ்சி நிலத்தில் பூக்கும் மலர்களைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப் பாட்டு,

**"மலையவும் நிலத்ளுதவும் சினையவும் சுனையவும்**
**வண்ண வண்ணத்த மலர்"**[24]

எனச் சுட்டுகிறது. மலைப்பூ, நிலப்பூ, சினைப்பூ, சுனைப்பூ எனவும் உணர்த்தப்படுகின்றது. தனிச்சிறப்புக் காரணமாகத் தேன்மலர், ஒண்பூ, சுவைப்பூ என்றெல்லாம் சில வகை மலர்கள் வழங்கப்படுகின்றன.

சங்க இலக்கியங்கள் சுட்டும் மலர்களை “நிலப்பூ, நீர்ப்பூ என்ற இருவகையுள் அடக்கலாம் என்றும் நிலப்பூக்களைக் கொடிப்பூ, கோட்டுப்பூ, செடிப்பூ, புதற்பூ, புற்பூ”[25] என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. சங்கப் புலவர்தம் பாடல்களில் கயப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ, புதற்பூ என்ற பகுப்பு முறை அமைந்திருப்பதையும் காணமுடிகின்றது.

**“வயலகம் நிறையப் புதற்பூ மலரே”[26]**

**“கொடியவும், கோட்டவும்”[27]**

**“பாடல்சால் சிறப்பின் சினையவும் சுனையவும்**
**நூடினர் கொயல் வேண்டா நயந்துதாம் கொடுப்ப”[28]**

என்றும் புதற்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ, கயப்பூ இனங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் ஓரினப் பூவிற்குப் பல பெயர்கள் வழங்குவதையும் அறியமுடிகிறது. அப்பெயர்கள் ஒவ்வொரு பூக்களின் நிறவேறபாடுகளை உணர்த்துகின்றன. இங்குத் தோன்றி, காந்தள், கோடல் போன்றவை காந்தள் இனத்தைச் சார்ந்தவையாக இருப்பினும் தோன்றி காந்தளையும், கோடல் வெண்காந்தளையும் குறிக்கின்றன. அதிரல், முல்லை, தளவம், குளவி, மல்லிகை, மௌவல், கொகுடி, சேடல் ஆகியவை முல்லை இனத்தைச் சார்ந்தவை. இருப்பினும் சிறுசிறு வேறுபாடுகளால் அவை தளவம்-செம்முல்லை என்றும், அதிரல்-காட்டுமுல்லை என்றும் குளவி-காட்டு மல்லிகை என்றும் கொகுடி ஒருவகை முல்லை என்றும், சேடல்-பவழக்கால் மல்லிகை என்றும் சிறப்பிக்கப்பெற்றுள்ளன.

கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் கூறியுள்ள தொண்ணூற்றி ஒன்பது பூக்களில் நாற்பத்தைந்து கோட்டுப் பூக்களாகும். குறிஞ்சி நிலத்திற்குரிய பூவாகக் கோட்டுப்பூவை ஒரு சிலர் கருதினாலும் எல்லா வகை நிலங்களிலும் இவ்வகைப்பூ காணப்படுகிறது. எறுழம், சுள்ளி, கூவரம், வடவனம், வாகை, குடசம், போங்கம், திலகம், பாதிரி, மருதம் போன்றவை கோட்டுப்பூ வகையைச் சார்ந்தவை என்றும் இருபத்தாறு கொடிப் பூக்களையும் குறிப்பிட்டுள்ளனர். அவற்றுள் முல்லை, காந்தள், பிச்சி போன்றவை நிலப்பூவுகளாகும். நிலத்தில் குத்துகுத்தாகப் புதரில் தோன்றும் பூ ஆகும். எனவே இது புதற்பூ என்றும்

சுட்டப்படுகின்றது. நிலப்பூக்களில் குறிஞ்சி, தும்பை, நெருஞ்சி போன்ற இருபத்திரெண்டு பூக்கள் இடம்பெற்றுள்ளன. நீர்ப்பூ நெய்தல் நிலப்பூவாக இருந்தாலும் எல்லாவகை நிலங்களிலும் காணப்படுகிறது. "மலையில் காணப்படும் நீர்ப்பூவானது சுனைப்பூ என்றும், முல்லை நில ஓடையில் உள்ள நீர்ப்பூ ஓடைப்பூ என்றும், மருத நிலக் குளத்தில் பூப்பது வயப்பூ என்றும், நெய்தல் நில நீர்ப்பூ, கழிப்பூ மற்றும் கேணிப்பூ என்றும் குறிப்பிட்டப்பட்டுள்ளன. நீர்ப்பூக்கள் பலவற்றில் தேன் இருக்காது. அப்படியே இருந்தாலும் அவற்றின் அளவு மிகக் குறைவாகவே காணப்படும். தாவரவியல் செய்திகளின்படி நீரில் முழுவதும் மூழ்கியுள்ள நீர்ப்பூக்களில் முற்றிலும் தேன் இருக்காது. நீருக்கு வெளியே மலரும் தாமரை, குவளை போன்ற பூக்களில் தேன் இருக்கும்"[29] என்றும் குறிஞ்சிக் கபிலர் நீர்ப்பூ வகையில் பூக்களைக் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியச் சொல்லடைவுகளில் ஒவ்வொரு சொல்லுக்கும் சொற்பொருள் விளக்கம் பலரால் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்விற்குரிய நற்றிணையில் காணலாகும் மலர்களுக்கும் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. இன்றைய வேளாண்மையில் ஏற்பட்ட பசுமைப் புரட்சி, ஒட்டுமுறை, வீரியத் தன்மை (Hybird) கால மாற்றம் போன்ற காரணங்களால் பூக்கள் பல்வேறு வண்ணங்களில் தோற்றம் பெற்றுள்ளன என்பதும் அறியத்தக்கதாகும்.

**கோட்டுப்பூ**

நற்றிணையில் அறுபத்தேழு பூக்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் கோட்டுப்பூ இருபத்தி மூன்றும், கொடிப்பூ பதினெட்டும், நிலப்பூ பத்தொன்பதும், நீர்ப்பூ ஏழும் கூறப்பட்டுள்ளன. நால்வகைப் பூக்களில் முதலிடம் பெற்று விளங்குகிறது கோட்டுப்பூ, குறிஞ்சி நிலச்சிறப்புப் பூவாகும். கோடு என்பது கிளை, சினை எனப்பொருள்படும். மரங்களிலும், செடிகளிலும் கிளைகளிலும் பூக்கும் பூவே கோட்டுப்பூவாகும். இதனை மரப்பூவென்றும் வழங்குவதுண்டு.

இருப்பை, எறுழம்பூ, கடம்பு, காயா, குருந்து, கொன்றை, கோங்கம், ஞாழல், நொச்சி, பாலை, பாதிரி, புன்னை, மருதம், வெண்கடம்பு, மாம்பூ, வேங்கை, ஆசினிப்பூ, செம்முருங்கு, ஆத்தி, கூவிளம், சந்தனப்பூ, குரா, குமிழம்பூ, சுரிதகம் முதலிய மரங்களின் பூக்கள் கோட்டுப் பூக்களாகும்.

**இருப்பை**

இருப்பை பூ வெண்ணிறமானது. மலைப்பாங்கான செந்நிலப் பெருவழிகளில் இதன் மரம் வளர்ந்து நிற்கும். கோடை காலத்தில் மிகுதியாகப் பூக்கும். இருப்பைப் பூ மரத்திலிருந்தே வாடாமல் கீழே உதிர்ந்து விழும் இயல்பிணையுடையது. மகளிர் இம்மலர்களை எடுத்து விற்பனைப் செய்தனர் என இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இருப்பைப்பூவின் மொட்டுப்பூனையின் பாதத்தைப் போன்று இருக்கும் என அகத்திணைப்(331) பாடல் குறிப்பிடுகிறது. இம்மலர் மிகவும் வெண்மையானது. சூரியனின் கதிர்பட்டவுடன் வாடி விடும் தன்மையுடையது. இருப்பைப்பூ மரத்திலிருந்து உதிர்ந்து விழும் காட்சி ஆலங்கட்டி மழை வானத்திலிருந்து விழுவதைப் போலுள்ளது என்பர். அம்பறாத்தூணி தலை திறப்பது போல இருப்பை மொட்டு மலர்கின்ற காட்சி காணப்படுவதையும், மலரின் அகத்துப் பஞ்சுபோன்ற துய் இருக்கும் என்றும் அது வெளியே நீண்டு காணப்படுவதையும்,

**'அத்த இருப்பைப் பூவின் அன்ன**
**துய்த்தலை இறவு'** **(நற்-111)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.இலுப்பைப் பூப் போன்ற சிறிய தலையை உடையது. இறாமீன் என நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது. செந்நிலப் பகுதிகளில் இவ்வெண்ணிறப் பூக்கள் உதிர்ந்து கிடப்பது குருதியின் மீது கொழுப்புப் படர்ந்திருப்பதைப் போன்று காட்சியளிப்பதை,

**'வெருக்கடி யன்னகுவிமுகிழ் இருப்பை'** **(அகநா.-267)**

**'கான இருப்பை வேனல் வெண்பூ**
**வளிபொரு நெஞ்சினை உகுத்தலின் ஆர்கழல்பு**
**களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்'** **(குறுந்-329)**

எனச் சுட்டுகிறது. அரும்பு அம்பின் நுனி போன்று கூர்மையாகக் காட்சியளிப்பதை,

**“அம்புறுனை ஏய்ப்ப அரும்பிய இருப்பை”**[30]

என அகநானூறு கூறுகிறது. இலுப்பை மரம் இன்று அறிதாகக் காணப்படுகிறது். பூக்கள் மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறன. பூ வெண்மையானது, உருண்டையாக உள் துளை உடையது. இப்பூவிலுள்ள தேன் சக்கரைப் பாகுபோல அதிகமான இனிப்புச் சுவை மிக்கதாகக் காணப்படும். பூக்கள் குலை குலையாக இருக்கும். வெண்பூக்களைக் கரடிக் கூட்டம் கவா்ந்துண்ணும் என அகநானூறு (267) புலப்படுத்துகிறது.

**எறுழம்பூ**

எரிபுரை எறுழ் என்பது நெருப்புப் போன்று தோன்றும் எறுழம் பூ என்று கூறப்படுகிறது. பெரிதாகப் பெய்கின்ற மழையை நோக்கிப் பூத்திருக்கின்ற எறுழம் பூக்கள் நீலமணி போன்ற நிறம் கொண்டவையாகும். அடா்ந்த புதா்களில் உள்ள நல்ல பூங்கொத்துக்களைப் பூக்கள் மழைக்காலம் நீங்கியதால் தம் இயல்பான நிறத்தினின்று மாறி வெண்மை நிறமாக மாறியிருத்தலை,

**‘வருமழைக்கு எதிரிய மணிநிற இரும்புதல்**
**நறைதிற் படுத்த நல் இணா்த்து எறுழ்வீ’ (நற்-302)**

என நற்றிணை சுட்டுகிறது. எறுழம்பூ குளிா் காலத்தில் பூக்கும். விரிந்த பூங்கொத்துக்களையுடைய உளி பொருந்திய எறுழ் மரத்தின் மலா் முருகன் அமா்ந்த மலையில் பரவிக்கிடந்தது. தோழியும் தலைவியும் பாறைமீது பறித்துக் குவித்த மலா்களுள் எரியையொத்த எறுழம் மரப்பூ ஒன்றாகும் எனக் குறிஞ்சிப் பாட்டு (66) புலப்படுத்துகிறது.

**கடம்பு**

இம்மரப்பூ முருகனுக்குரியது. வெண்கடம்பு, செங்கடம்பு என இரு வகைப்படும். நெருப்பினைப் போல செந்நிறப் பூக்களையுடைய கொம்புகளைக் கொண்டது.வண்டுகள் பாயும் வெண்கடம்பின் பூங்கொத்துகள் கமழும் கூந்தல் என்பதை, **‘தேம் பாய் மராஅம் கமழும் கூந்தல்’ (நற்-20)** எனக் கூறுகிறது. இம்மரத்தில் இறைத்தன்மை இருப்பதாகக் கருதி வழிபட்டனா். இம்மரங்கள் கார்காலத்தில் மிகுதியாகப் பூக்கும். அதன் மலா் மிகுந்த மணமுடையதாக் இருக்கும் என்பதை,

**‘கார் நறுங் கடம்பு’** **(நற்-34)**

என நற்றிணை கூறுகிறது. கடம்ப மாலை அணிந்தவன் கடம்பன் எனவும்,பசிய இலையுடன் விரவிய மாலையணிந்தவன் முருகன் (புறம்-23) எனவும் சுட்டுகிறது. நன்னனுக்குரிய பெருவாயிலில் உருள்வடிவமான பூக்களைக் கொண்ட கடம்பமரங்கள் நிறைந்திருந்தன (பதிற்றுப்பத்து-4:7) எனவும், பொய்கை அடைகரையில் உயர்ந்து வளர்ந்து வளர்ந்த கடம்பின் இணைதல் நிறைந்த பூங்கொத்து நீருண் துறையிடத்தே இந்திர கோபத்தை ஒத்த தாதை உதிர்க்கும் (சிறுபாண் - 68) எனச் சுட்டுகிறது.

**“ஏரி கான்றன்ன பூஞ்சினை மரா அத்து”**[31]

**‘அவரோ வாரார் தான் வந்தன்றே,**
**வலம் சுரி மராஅம் வேய்ந்து,**
**நம் மணங்கமழ் தண்பொழில் மலரும் பொழுதே’** **(ஐங்-348)**

என்ற பாடல் மராமரம் இளவேனிற் காலத்தில் பூப்பதும், இதன் மலர் வலமாகச் சுழித்த அமைப்புடையதும் என்பதையும் அறியலாம். தேனுடைய மலர்ந்த கடம்பின் மெல்லிய பூங்கொத்தையும், யா மரத்தின் பூக்களையும் மரல் நாரில் தொடுத்துக் கூத்தர் அணிவதை, **“தேம்பட மலர்ந்த மராஅ மெல் இணரும்”**[32] என்றும் மலர்ந்த மலரினையுடைய வெண்கடம்ப மரம் என்பதை, **‘விரிமலர் மராஅம் பொருந்தி’ (அகம்-172)** என்று கூறியுள்ளனர். இப்பூக்கள் மலையில் நீரோடைகளின் அருகே வளர்ந்து காணப்படும் என்றும் முருகக்கடவுள் இதனைக் மரமாகக் கொண்டனர் என்று அகநானூறு (35,11) புலப்படுத்துகின்றது. கடப்ப மலர் குளிச்சியுடையது. தேருருள் போன்ற அமைப்பினை உடையதாக இருக்கும். கொத்துக் கொத்தாக மலரும் என்பதைப் பரிபாடலும், முருகாற்றுப்படையும்,

**“உருள் இணர்க் கடம்பு”**[33]

**“உருள் பூந் தண்தார்”**[34]

என்று கூறுகின்றன. அச்சத்தைச் செய்யும் வேலன் இன்னியம் முழங்கக் குறிஞ்சி மலர் சூடிக் கடம்பு சூடுதலால் எழில் மிகும் முருகனை தன் மெய்க்கண்ணே

நிறுத்தி வழிபட்டுள்ளதை மதுரைக்காஞ்சி (611-614) கடம்புப் பூக்களைப் புலப்படுத்துகிறது.

**காயா**

காயா தற்போது ‘காசா’ என்று வழங்கப்படுகிறது. இது காட்டுப் பகுதிகளிலும், செந்நிலப் பகுதிகளிலும் வளர்ந்து காணப்படும். முதுவேனிற் காலத்தில் பொலிவிழந்திருந்த மரத்தின் கிளைகள் மழை பெய்தவுடன் தழைத்துக் கருமையுடன் பளபளப்பாகக் காட்சியளிக்கின்றன. கருநீல மலர்ப் பூங்கொத்துகளையுடையது. நீலமணி போன்ற அழகான பூவைக் கொண்ட இச்செடி அழகற்ற கொம்புகளையுடையது. நீலமணி போலப் பலவாய மலர்களையுடைய காயாவின் குறுங்கிளைகள் இறங்கக் கார்ப்பருவம் தொடங்கியது. இதனை,

**“பன்மலர்க் காயாங் குறுஞ்சினை”** **(நற்-242)**

என்ற அடி சுட்டுகிறது. காயா இணராக மலரும் தன்மையுடையது அதனால், **“பல்லிணர்க் காயா”**[35] என்று குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்றுள்ளது. காயா மொட்டாக இருக்கும் போது நீலமணியின் நிறத்தையும் மயிலின் கழுத்தைப் போன்ற நிறத்துடனும் ஒத்துக் காணப்படுவதை,

**“குநனைக் காயா கணமயில் அவிழவும்”** **(சிறுபாண்-265)**

என்று சுட்டியுள்ளனர். கார்காலத்தில் இம்மலர் மிகுதியாகப் பூக்கும். கொன்றை, தளவு, முல்லை இவற்றில் இணைந்து மலர்வதை,

**“காயா கொன்றை நெய்தல் முல்லை**
**போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்**
**பூவணி கொண்டன்றாற் புறவே”**[36]

என்று ஐங்குநூற்றின் வழி அறிய முடிகிறது. முல்லை நிலத்து நுண்ணிய மணலில், நெருங்கிய இலைகளைக் கொண்ட காயா மலர் மைபோல் மலர்ந்திருப்பதை,

**“……………………அயிர்**
**செறிஇலைக் காயா அஞ்சனம் மலர”**[37]

எனும் படியான பல மலர்கள் காயாவில் குறுகிய கிளைகள் தோறும் நெருங்கி அழகு செய்வதை,

**“மணி எனப் பல் மலர் காயாங் குறுஞ்**

**சினை கஞல”**[38]

என்று பொருநராற்றுப்படை கூறுகிறது. மணி நிறத்திலிருக்கும் காயா பூ வாடியவுடன் கரிய நிறத்தை அடைவதால்,

**“கரி பரந்தன்ன காயாஞ் செம்மல்”**[39]

என்று குறிப்பிடுகிறது. குன்றில் மேகம் போலக் காயா மலர்கள் மலர்ந்திருப்பதனையும், அதன் இடையிடையே சரக் கொன்றைகள் மலர்ந்திருப்பது போல மலையின் பிளவில் மின்னல் மின்னியதையும்,

**‘காயாங் குன்றித்துக் கொன்றைபோல**

**மாமலை விடரகம் விளங்க மின்னி’ (நற்-371)**

என நற்றிணைச் சுட்டுகிறது. நீலமணி போலப் பலவாய மலர்களையுடைய காயாவின் குறுங்கிளைகள் வளங்கக் கார்ப்பருவம் தொடங்கியதை நற்றிணை புலப்படுத்துகிறது. ஆயர் காயாம் பூவாலான தலைமாலை உடையவர் என்பதை,

**“காயாம்பூக் கண்ணி கருந்துவர் ஆடையை”**[40]

என்று கலித்தொகை எடுத்துக் கூறுகின்றது. கார்காலத்தில் அழகற்ற காயாவின் பெரிய கொம்புகள் பூக்கள் பொருந்திய மென்மையான மயில் கழுத்தைப் போல் தோன்றியது என்பதை,

**‘புல்என் காயா பூக்கெழு பெருஞ்சினை**

**மென்மயில் எருத்தின் தோன்றும்’ (குறுந்-183)**

எனக் குறுந்தொகை கூறுகின்றது.

**குருந்து**

குருந்தம் பூக்கள் மயில் தோகையை விரித்தாற் போன்று காணப்படும். குருந்த மரம் கரிய பெரிய பூவை உடையது என்பதை,

**‘மா இரு குருந்தம்’ (குறிஞ்-95)**

எனக் குறிஞ்சிப் பாடலும், சிறுபாறையின் பக்கத்தில் குருந்த மரம் மலர்ந்தது என்பதை,

**'குருந்து அவிழ் குறும்பொறை'** **(நற்-321)**

என நற்றிணைப் பாடலும் சுட்டுகின்றன. இதனைக் 'குருந்தம்' என்று கலித்தொகைப் பாடல் (111) குறிப்பிடுகிறது. பெரும்பாலும் கொன்றையும், குருந்தும் சேர்த்தே சொல்லப்படுகின்றன. இது முல்லை நிலத்தில் மலரும் மலராகும். இதனை,

**'நன் பொன்னன்ன சுடரிணர்க்**

**கொன்றையொடு குருந்து மாருடைத்து'** **(ஐங்-436)**

எனக் கொன்றையும், குருந்தும் இணைந்து பூக்கும் இடங்களை அதிகமாகப் பார்க்கலாம். கள் ஒழுகும் பசுமையான குருந்த மரத்தில் நறுமணம் வீசும் கிளைகளிலிருந்து ஆண்மயில் தன் துணையை அழைத்துக் கூப்பிடுவதனை,

**'…………………………………….. மஞ்ஞை**

**நனைப் பசுங் குருந்தின் நாறுசினை இருந்து**

**துணைப் பியிர்ந்து அகவும்'** **(அகநா.-85)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. உழவர்கள் கூழ் உண்பதற்காகச் சென்று தங்கும் வலிய இலையினையுடைய குருந்து மரத்தின் வளைந்த கிளையில் மயில் சென்று அமர்ந்து, கிளிகளை ஓட்டும் மகளிரைப் போல ஒலியுண்டாக எழுப்பிய காட்சியை,

**'வல் இலைக் குருந்தின் வாங்குசினை இருந்து**

**கிளிகடி மகளிரின் விளிபடப் பயிரும்'** **(அகநா.-194)**

என்ற அகப்பாடலடிகளும் எடுத்துக் கூறியுள்ளன. கொன்றையும், குருந்தும் கார்காலத்தில் மலர்வதை,

**"காசின் அன்னபோது ஈன் கொன்றை**

**குருந்தொடு அலம்வரும் பெருந்தண் காலை"**[41]

என்று குறுந்தொகை புலப்படுத்துகிறது. சங்கால மக்கள் குருந்தம்பூவிற் கட்டிய மாலையை அணிந்ததையும், முல்லையைக் குருந்தம் பூவோடு மகளிர் உச்சியில் சூடியதையும்,

**'குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்'** (கலித்-111)

**'முல்லைக் குருந்தொடு முச்சி வேய்ந்து'** (கலித்-113)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். குரவு, தாவு, குருந்து இவை எயிறு போன்றும் கோடல் அரவின் படம் போன்றும் மலர்ந்திருப்பதை,

**'குரவும் தளவும் குருந்தும் கோடலும்**

**அரவு கொண்டுஅரும்ப'**

**(பெருங்கதை,1.உஞ்சைக்காண்டம்,49.முல்லை நிலங்கடந்தது:98-99)**

என எடுத்துக்காட்டுகிறது. இப்பூக்கள் இலக்கியத்தில் கூறப்பட்டிருப்பினும், இன்று காண்பதற்கு அரிய வகையாக உள்ளன.

**கொன்றை**

இதனைக் **"கடுக்கை"**[42] என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. இது முல்லை நிலத்தில் மலரும் மலராகும். கார்காலத்தில் இம்மலர்கள் பூக்கத் தொடங்கும் என்பதை,

**'புதப் பூங் கொன்றை**

**கானம் கார்எனக் கூறினும்'** (குறுந்-21)

என்று குறுந்தொகை பாடல் கூறுகின்றது. **'பிடவுங் கொன்றையுங் கோடலும்' (நற்-99)** பருவ காலத்தை மறந்து கடனீரையுண்டதனாலாகிய நிறைந்த சூலைத் தாங்காத மேகம் பெய்த வளமழையைக் காரென்று மறந்த உள்ளத்துடன் ஏற்றுப் பிடவும், கொன்றையும், காந்தளும் அறியாமை உடையன ஆதலின் மலர்ந்தன. 'செம்புலப் பறவில் பொற்காசினைத் தொங்க விட்டாற் போன்ற' அழகையுடைய நல்ல மலரையுடைய கொன்றையின் உள்ளிய பூங்கொத்துக்கள் அதன் கிளைகள் தோறும் தொங்கிப் பிற மலர்களின் நறுமணத்தோடு கலந்து மணம் பரப்பின (நற்- 221) எனப் புலப்படுத்துகின்றது. கொன்றைப் பூக்கள் மிகமிக

அழகானவை, சரம்சரமாக ஒன்றிய நிறத்தில் மாலைகள் தொங்கினாற் போன்று பூத்துக் குலுங்கும். தொலைவில் காணும் போதே கண்களைக் கவர்திருக்கும் தன்மை கொண்டது. கொன்றை மரம் குறுமரமாயினும் பூத்துக் குலுங்கும் காலத்திலும், மரமெல்லாம் கொழுந்துகளாக அரும்பியிருக்கும் காலத்திலும் பார்ப்பதற்கு மிகக் கவர்ச்சியாக இருக்கும். கண்களைக் கவரும் பூக்களையுடைய கொன்றை மரத்தைப் போல் மிகச் சில மரங்கள் காணப்படுகின்றன.

இக்காலத்தில் காணப்படும் கொன்றையில் மூன்று வகைகள் உள்ளன. அவைகளில் மஞ்சள் பூவுடையதே சங்கப் பாடல்களில் கூறப்பட்ட கொன்றையாகும். பிற கொன்றைகள் வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டு இங்கு வளர்க்கப்படுகின்றன. கொன்றை தமிழ் நாட்டில் காணப்படும் சிறிய மர இனத்தைச் சேர்ந்தது. ஒவ்வொரு கிளையிலும் பல சிறு கிளைகள் தோன்றி, அதில் பல நரம்புகள் விட்டுச் சிவப்பு நிறப் பூக்கள் மலரும். இந்தப் பூ ஆவாரம் பூவினைப் போல வடிவத்திலிருக்கும். இடையிடையே இலேசான மஞ்சள் நிறமும் கலந்திருக்கும்.

**‘ஆய்பொன் அவிர் இழை தூக்கி யன்ன**
**நீடு இணர்க் கொன்றை’ (அகநா.-364)**

என வரும் அடிகள் கொன்றை கார்காலத்தில் மலரும் என்பதையும், இணராகப் பூக்கும் என்பதையும் காட்டுகின்றன. கொன்றை மலர் தாது நிறைந்தது. இடையர் ஆக்கும் சோற்றின் நிறம் கொன்றைத் தாதின் நிறத்தைப் பெற்றிருப்பதை,

**‘களிபடு குழிசிக் கல் அடுப்பு ஏற்றி**
**இணர்ததை கடுக்கை ஈண்டிய தாரின்,**
**குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப புன்கம்’ (அகநா.-393)**

என்ற பாடல் புலப்படுத்துகின்றது. அன்றே மலர்ந்த மலரை,

**“கடும் பொன் அன்ன கொன்றை”**[43]

**“பொன் என மலர்ந்த கொன்றை”**[44]

**'பொன் எனக் கொன்றை மலர'** (நற்-242)

**"சுடர்ப் பூங்கொன்றை"**[45]

**'தூங்கு இணர்க் கொன்றையொடு'** (அகநா.-115)

**'பொன்வீக் கொன்றையொடு'** (நற்-246)

**'புழற்காய்க் கொன்றைக்'** (நற்-246)

**'குன்றத்துக் கொன்றை'** (நற்-371)

என்று மேற்காணும் நற்றிணைப் பாடலடிகள் சுட்டுகிறன. தலைவனின் பிரிவால், தலைவியின் கண்கள், கொன்றைப் பூப்போலப் இருந்ததை,

**'கொன்றைப் பூவின் பசந்த உண்கண்'** (ஐங்-500)

என்று சுட்டப்பட்டுள்ளது. இங்குப் பசலைக்குக் கொன்றைப் பூ உவமைப்படுத்தப்படுவதையும் அறியமுடிகிறது. நீளமாக வளர்ந்த கொன்றைக் காயைக் கொண்டு உருவாக்கிய குழலில் இனிய இசையைக் கோவலர் இசைத்ததை,

**"ஒழுகிய கொன்றைத் தீம்குழல்முரற்சியர் கோவலர்"**[46]

என்ற கலித்தொகைப் பாடல் சுட்டுகின்றது. மணம் கமழ்கின்ற பூங்கொத்துக்களையுடைய கொன்றைப் பூவைப் பனங்குருத்தின்கண் வைத்துக் கண்ணி தொடுக்கப்பட்டதை,

**"நாறு இணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்"**[47]

என்ற பதிற்றுப்பத்துப் பாடலால் அறியமுடிகிறது. கொன்றை மரம் கொடி கொடியாகப் பூங்கொத்துக்களை மலர்விக்கின்றன. கொடிப்பூக்கள் மணத்துடன் மலர்கின்றன. இவற்றுடன் காந்தள் மலரின் மணமும் கலந்து தென்றல் கொண்டு வருவதை,

**"கொன்றைக் கொடிஇணர் ஊழ்ப்பக் கொடிமலர்**

**மன்றல் மலர மலர்காந்தள் வாய்நாற**

**நன்று அவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத்**

**தென்றல் அசைவரும்''**[48]

என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. ஆயர்குல இளைஞர் மலையிலும், காட்டிலும் பூத்தக் கொன்றை, காயா, வெட்சி, பிடா, முல்லை போன்ற பூக்களால் தலை மாலையைச் சூடியதை,

**'மெல் இணர்க் கொன்றையும் மென்மலர்க் காயாவும்**

**புல் இலை வெட்சியும் பிடவும் தளவும்**

**முல்லையும் குருந்தும் கோடலும் பாங்கரும்**

**கல்லவும் கடத்தவும் கமழ்கண்ணி மலைந்தனர்**

**பல்லான் பொதுவர்' (கலித்-3)**

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. கொன்றை மரத்தின் இலைகளிடையே பூங்கொத்துகள் கொத்துக் கொத்தாகத் தொங்கும். அவற்றில் வண்டுகள் மொய்க்கும். அம்மலர்க் கொத்துக்கள் மகளிர்தம் கூந்தலில் அணிந்த பொன் அணிகள் போன்றிருந்தன என்பதை,

**''வண்டுபடத் ததைந்த கொடிஇணர் இடையிடுபு**

**பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்**

**கதுப்பின் தோன்றும் புதுப்பூங் கொன்றை'' (குறுந்-21)**

என்ற பாடல் விளக்குகின்றது. கொன்றையின் பூங்கொத்துக்கள் பொன்னிழைக்கும் பொன்மாலைக்கும் ஒப்பிடப்பட்டுள்ளது.

**''இழையணி மகளிரின் விழைதகப் பூத்த**

**நீடுகரி இணரசுடர்வீக் கொன்றைக்**

**காடுகவின் பூத்த ஆயினும்'' (நற்-302)**

என வரும் நற்றிணைப் பாடல் கொன்றைப் பூவினை மிக அழகாக எடுத்துக் கூறுகிறது. ஆங்கிலத்தில் கொன்றை 'Laburnam' என்று அழைக்கப்படுகிறது. இதன் பொருள் பொன் மாலை என்பதாகும். இதன் பூங்கொத்தை ஆங்கிலத்தில்

'Golden shower' என்றும் 'streaming gold' என்றும் கூறுவர். கொன்றையின் பூவைச் சுடு பொன்னுக்கும் அடர் பொன்னுக்கும் உவமையாக,

**"அடர்பொன் என்னச் சுடரிதழ் பகரும்" (ஐங்-430)**

**"சுடுபொன் அன்ன கொன்றை சூடி" (ஐங்-432)**

என்று ஐங்குநுறூற்றுப் பாடலடிகள் கூறுகின்றன. மாமல்லபுரத்துச் செல்வ மகளிர் தம் இடையில் கொன்றை அரும்பு போன்ற பொற்காசுகள் கோத்த வடத்தை அணிந்திருந்தார்கள், கொன்றைக் கிளையில் உள்ள அரும்புகளின் மேல் பணி படர்ந்திருப்பது மகளிர் தம் இடைகளில் பொற்காசு வடத்தை அணிந்திருப்பதைப் போல இருந்ததை,

**"…..…………………………….மகளிர்**
**கொன்றை மென்சினை பனிதவழ்பவைபோல்**
**பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க" (பெரும்பாண்-329)**

என்று பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது. கார்காலத்தில் நீண்ட பூங்கொத்துக்களைக் கொண்ட கொன்றை மரங்கள் பூத்திருந்தன. அதனோடு காடு முழுவதும் அழகு பெறத் தோன்றிப் பூக்களும், முல்லை, தேற்றாவின் பூக்களும் மலர்ந்து காடெல்லாம் மணம் பரப்பியதை அகநானூற்றுப் பாடலடிகள்,

**"ஆய் பொன் அவிர்இழை தூக்கி அன்ன**
**நீடு இணர்க் கொன்றைகவின் பெறக்காடு உடன்**
**சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ**
**முல்லை இல்லமொடு மலர" (அகநா.-364)**

எனக் கூறுகிறது. தளிரையும், கொத்துக்களையும் உடைய கொன்றை பொன் போன்ற மலர்களைச் சொரிகின்றது என்பதை,

**"முறிஇணர்க் கொன்றை நன் பொன் கால" (முல்லை-94)**

என்ற அடி குறிப்பிடுகிறது. எ.பத்மநாபன் 'பூக்காரியும் பூக்களும்' என்ற தலைப்பில்,

**“கதிரவன் உதிக்கு முன்னே**

**கண்களை கருத்தை அள்ளும்**

**புதுமணம் பரப்பு கினற**

**பொன்னிறக் கொன்றை’’[49]**

என்று கொன்றை மலரைக் குறிப்பிடுகின்றார். கொன்றைப் பூக்கள் பொன்னலான அணிகலன்களை மகளிர் அணிந்தது போல, யாவரும் விரும்பும் வண்ணம் மலர்விரிந்த நீண்ட சுரிந்த பூங்கொத்தினையுடைய காடுகள் நிறைந்து காணப்படுவதைச் சுட்டுகிறது.

**கோங்கம்**

கோங்கம் மரம் மலையிலும், காட்டிலும், ஆற்றங்கரையிலும் அதிகமாகக் காணப்படும். கோங்கம் பூ எல்லாப் பருவத்திலும் பொன் நிறத்தில் கொத்துக் கொத்தாகப் பூக்கும். இப்பூக்களில் வண்டுகள் மொய்க்கும், பூ புல்லியபுற இதழைக் கொண்டும், இதழ்கள் மிகுதியாகவும் காணப்படும். கோங்கம் காடுகளில் அதிகமாக வளர்ந்திருக்கும். இதனை,

**“பல்பூங் கோங்கம் அணிந்த காடே’’ (நற்-202)**

என்ற பாடல் அடி சுட்டுகிறது. இவை இளவேனிற் பருவம் தொடங்கியவுடன் மிகுதியாகப் பூக்கத் தொடங்கும், முகை உருண்டு காணப்படுவதால் மகளிரின் நகிலுக்கு உவமையாக்குகின்றனர். இதனை,

**“வேனில் கோங்கின் பூம்பொருட்டு அன்ன”[50]**

என்ற பாடலடியும்,

**“கோங்கு முகைத்தன்ன குவிமுலை ஆகம்’’[51]**

என்னும் பாடலடியும் புலப்படுத்துகின்றன. ‘விரிபூ கோங்கம்’ இதழ் விரிந்த கேரங்கம் பூ என்று குறிஞ்சிப்பாட்டு கூறுகிறது. இம்மரம் பளபளப்பாகவும் இதன்பூக்கள் மஞ்சள் நிறத்திலும் காணப்படுவதைப் பொன் போன்று கோங்கு பூத்ததாக எடுத்துக்கூறுகிறது. இதனை,

**"பொரி அரைக் கோங்கின் பொன் மருள் பசுவீ**

**விரிஇணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி"**[52]

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

**"புதுமலர்க் கோங்கம் பெண்எனத் தாது ஊழ்ப்ப"**[53]

மேலும் கோங்க மலர்கள்,

**"தேன் பாய்ந்து ஆர்க்கும் தெரியிணர்க் கோங்கு" (அகநா.-153)**

என்றும் கூறப்பட்டுள்ளது. கோங்க மலர் பருவமின்றி எல்லாக் காலமும் பூக்கும் என்பதை,

**"பருவமில் கோங்கம்"**[54]

எனவரும் பரிபாடலடிகள் மூலம் அறியலாம். காடுகளிலுள்ள மரங்களில் இம்மலர்கள் மலர்ந்து நிற்கும் காட்சியை, கார்த்திகை மாதத்து விளக்கினை நினைவூட்டும் நிலையில் இருந்ததை,

**"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ" (நற்-48)**

என குறிப்பிடுப்பிடும் பாடலடிகள் மூலம் அறிந்து கொள்ளலாம். கோங்கமலர் மலருங் காலத்தில், இலைகள் எல்லாம் உதிர்ந்து பூக்கள் நிறைந்த கிளைகளில் வண்டினங்கள் ஆராவாரிக்கும்படி தோன்றியதை,

**"இலையில் அம்சினை இன வண்டார்ப்ப**

**மலையோர் மென்முகை அவிழ்ந்த கோங்கம்"**[55]

எனும் குறுந்தொகை அடிகள் கூறுகின்றன. மலைத் தொடரின் உச்சியில் கோங்கம் பூக்களில் வண்டுகள் ஆராவாரித்ததை,

**"மீனொடு பொலிந்த வானில் தோன்றித்**

**தேம் பாய்ந்து ஆர்க்கும் தொஇணர்க் கோங்கின்" (அகநா.-153)**

எனும் அகநானூற்றுப் பாடலடிகள் சுட்டுகின்றன. இளவேனிலில் உறுதியான கோங்கம் மொட்டு மலர்வதை,

**“திணி நிலைக் கோங்கம் பயந்த**

**அணிமிகு கொழுமுகை உடையும் பொழுதே”**[56]

என்கிறது. குளிர்ந்த மணம் வீசும் கோங்கம் மலர்ந்த மலை பொன்மாலை அணிந்த யானை போல் தோன்றுவதை,

**“தண்நறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்**

**பொன் அணியானை போல் தோன்றுமே” (நற்-96)**

**“தாது சூழ் கோங்கின் பூ”**[57]

என வரும் அடிகளால் அறிந்து கொள்ளலாம். இள மஞ்சளில் மொட்டுகளும் பளிச்சிடும் மஞ்சள் மலர்களும், அடர் பச்சையில் இலைகள் தாங்கி மெல்லிய கிளைகளும், விதைகள் பஞ்சால் சுற்றப்பட்டது போன்று காணப்படுவதால் இவை காற்றில் பறக்க ஏதுவாக இருக்கிறது. இப்பூக்கள் மென்மையானவை, குடை போன்று விரியும். பூவில் வளைந்த பொருட்டு இருக்கும். கோங்கம் பூ மிகுந்த மணம் நிறைந்த, மலை மேல் கார்த்திகை விளக்கு ஏற்றி வைத்தது போல காட்சியளிப்பதாகச் சுட்டப்பெற்றுள்ளது.

**ஞாழல்**

சோலைகளில் எழிலூட்டும் பல மலர்களுள் ஞாழல் மலரும் ஒன்றாகும். இதனைப் புலிநகக் கொன்றை (Tiger Claw Tree) என்றும் அழைப்பர். இது கடற்கரையில் அதிகமாக வளர்ந்து காணப்படும். பெரும்பாலும் புன்னையும், ஞாழலையும் சேர்த்தே கூறுவார்கள். இளவேனிற் காலத்தில் பொன்னிற வண்ணத்தில் பூக்கும். நெய்தலுக்குரிய கருப்பொருளாக நச்சினார்க்கினியர்,

**“மரம் புன்னையும், ஞாழலும் கண்டலும்”**[58]

எனக் குறிப்பிடுகிறார். நாற்கவிராச நம்பியும்,

**“கண்டல், புன்னை வண்டிமிர் ஞாழல் ....**

**நெய்தற் கருப் பொருளே”**[59]

என்று கூறுகிறார். ஞாழல் மலர் எல்லா நிலத்திலும் பூக்கும் தன்மை உடையது. இருப்பினும் நெய்தல் நிலத்தில் அதிகமாகப் பூக்கும். மணிபல்லவத் தீவில் கடலோரம் இருந்த இலஞ்சியில் ஞாழல் பூத்திருந்ததை மணிமேகலை,

**"ஞாழல் ஓங்கிய தாழ்கண் அசும்பின்" (மணிமேகலை)**

என்று குறிப்பிடுகிறது. இதனை,

**"நறுவீ ஞாழல் மாமலர்த் தாஅய்,**
**புன்னை தகைந்த வெண்மணல்" (நற்-96)**

**"புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்**
**மணம் கமழ் கானல்" (நற்-167)**

**"சிறுவீ ஞாழலோடு கெழீஇய புன்னை அம்கொழுநிழல்" (நற்-315)**

என்ற பாடலடிகள் சுட்டியுள்ளன. மேலும்,

**"எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ்" (நற்-267)**

என்ற நற்றிணைப் பாடலடியும்,

**"கானல், இடையெலா ஞாழலுந் தாழையும் ஆர்ந்த**
**புடையெலாம் புன்னை புகன்று"[60]**

என்ற பாடலடிகளும் ஞாழல், தாழை, புன்னை ஆகிய மூன்று நெய்தல் நிலத் தாவரங்களை இணைத்துக்காட்டுகின்றன.

**"நனைமுதிர் ஞாழல் தினைமருள் திரள்வீ**
**நெய்தல் மாமலர்ப் பெய்த போல்**
**ஊதை தூற்றும் உரவரீர்ச் சேர்ப்ப"[61]**

என்ற குறுந்தொகைப் பாடல் ஞாழல் மரமும், நெய்தல் கொடிகளும் அருகில் வளர்ந்து இருப்பதையும் ஞாழல் மலர்கள் மழை பொழிவது போல் நெய்தல் மலர்கள் மீது உதிர்வதையும் சுட்டிக்காட்டுகிறது. ஞாழல் கொத்துக் கொத்தாய்ப் பூக்கக் கூடியது. இதன் இணர் பற்றி,

**“எக்கர் ஞாழல் இணர்ப்படு பொதும்பர்”**[62]

எனவும்,

**“ஞாழல் அரும்புமுதிர் அவிழ் இணர்”**[63]

எனவும் சுட்டுகிறது. ஞாழல் பூங்கொத்துக்கள் தாழ்வாகத் தொங்கும் தன்மையுடையவை என்பதை,

**“எக்கர் ஞாழல் இறங்கிணர்ப் படுசினை”**[64]

**“ஞாழல் அம்சினைத் தாழ் இணர்”** **(நற்-106)**

என்ற அடிகள் விளக்குகின்றன. குயில் கூவும் காலத்தில் ஞாழல் மலர்வதாகக் கூறப்பட்டுள்ளதை, குயில் பயிரும், கன்னியிள ஞாழற் பூம்பொழில்என ஞாழல் புன்னையுடனும் மருதுடனும் மலர்ந்து மணம் பரப்புவதாகவும் குறிப்பிடப்படுகிறது. ஞாழல் மழைக் காலத்தில் மலர்வதாகவும் கூறுகிறார் டி.பிராண்டிஸ் என்னும் நிலையியல் உயிர் நூலார். ஞாழல் மணம் கமழும் நறுமலர், குறிஞ்சி நில மகளிர் ஞாழல் மலர்க் கொத்தைக் கூந்தலில் விரும்பிச் சூடுவதால்,

**“குமரி ஞாழல்”** **(நற்-54)**

என்றும்,

**“கன்னி இளஞாழல்”**[65]

எனவும் குறிப்பிடப்படுகிறது. மீனவர் நிலப்பூ ஞாழலையும், நீர்ப்பூ நெய்தலையும் சேர்த்துச் சூடிக்கொள்வர்கள் என்று அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. ஞாழல் மலர்களில் மிகுந்த தேன் இருப்பதை,

**“சிறுவீஞாழல் தேன்தோய் ஒள்ளிணர்”** **(நற்-191)**

என நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. இதன் பூ மணமுள்ளதால், பூ மஞ்சரியில் இருந்து உடனே விழுந்து விடும். மஞ்சரியில் நிறைய பூக்கள் இருக்கும். மகளிர் இதனை அணிந்திருந்ததை.

**“வேங்கையே ஞாழலே விம்மு பாதிரிகளே விரவி**
**யெங்கும், ஓங்குமா காவிரி வடகரை”**[66]

என்ற தேவாரப் பாடல் வழி அறியலாம். ஞாழல் அரும்புகள் மீன் முட்டை போன்ற பொன்நிறம் கொண்ட வெண்சிறு கடுகு போன்று சிறிதாகக் குவிந்த கொத்தாகப் பூக்கும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**நொச்சி**

நொச்சி என்பதற்கு மதில் என்னும் பொருளுண்டு. நொச்சியில் கருநொச்சி, வெண்ணொச்சி, மலைநொச்சி என மூன்று வகையுண்டு. இவற்றுள் கருநொச்சி மரங்களை வீடுகளில் விரும்பி வளர்த்துள்ளனர். இக்கரு நொச்சிப் பூவே போர்ப் பூவாகவும், போர்ச் சின்னமாகவும் அமைந்தது. இம்மரத்தின் மீது மௌவல் கொடியும் சேர்ந்தே படர்ந்து செல்லும். நொச்சியும் மௌவலும் சேர்த்தே இருப்பதாகக் கூறுகின்றனர். உ.வே.சாமிநாதய்யர் 'மலைநொச்சி' என்ற ஒரு வகையைக் குறிப்பிடுகின்றார். அதன் பூ கருமை நிறமுடையது, மணியைப் போலத் தோன்றும், யாமத்தில் அப்பூ உதிர்ந்துவிடும். தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் போதுதன் வீட்டின்முன் இருந்த சிறிய அழகிய நொச்சி மரத்தின் கரிய கொம்பின் மேல் படர்ந்திருந்த முல்லைக் கொடியைக் காட்டி, மலரும் போது வருவேன் என்றதை,

**"தாழ்வுஇன் நொச்சி சூழ்வன மலரும்**
**மௌவல் மாச்சினை காட்டி**
**அவ்வளவு என்றார்"** **(அகநா.-23)**

**"நொச்சி மாஅரும்பு பன்ன கண்ண**
**……………….. ………………**
**……………… ……… மகளிர்**
**உணங்குதினை துழவும் கைபோன் ஞாழல்**
**மணங்கமழ் நறுவீ வரிக்கும்"** **(நற்-267)**

என்ற அடிகளில் காணலாம். நொச்சி கருநொச்சியானதால், அதன் முகையும் மலரும் கருமை வண்ணம் உடையதாகும். இதில் 'மா' என்பது கருமை வண்ணத்தைக் குறிக்கும். கரிய அரும்பு போன்ற கண்ணையுடையது நண்டு, நண்டின் கண்ணிற்கு மா அரும்பு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. நொச்சியின் மலரை, 'மணிஏர் நொச்சி' (நற்-184), 'மணிமருள் நொச்சி' (குறு-138), 'மணிக் குரல்

நொச்சி' (நற்-293) என்றும் கூறியுள்ளனர். மணி என்பது நீலமணியாகும். நீலமணி போன்ற கருநீல வண்ணமுடைய சிறிய பூ கொத்துக் கொத்தாகப் பூக்கும். இவற்றைத் தனியாகக் கொய்து தொடுத்து அணிய முடிவதில்லை. கொத்தாகவே கிள்ளி அணிவது வழக்கம். அம்மலர்க் கொத்துக்களை மாலையாகத் தொடுத்தும் சூடினர். இதனை,

**"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடி"** **(நற்-293)**

**"ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி"** **(நற்-200)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவற்றில் 'தெரியல்' என்பது தொடுக்கப்பட்ட மாலையாகும். நொச்சிச் செடியின் கரிய அரும்பு போன்ற கண்ணைக் கொண்டிருக்கும் தினையை மகளிர் உலர்த்த துழா விடும் போது புலிநகக் கொன்றை மரத்திலிருந்து வீழ்ந்து கிடக்கும் பூக்கள் கோலமிட்டது போன்ற காட்சியளிக்கும். நொச்சியின் இலைகள் மயிலடியைப் போன்றும் பூங்கொத்துக்கள் கரிய நிறம் உடையதாகவும் விளங்கும். அழகான கொம்பில் கொத்தாகப் பூத்த பூ நீலமணி போன்றது என்பதை,

**"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி**
**அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த**
**மணி மருள் பூ"** **(குறுந்-138)**

என்று குறுந்தொகை எடுத்துக்கூறுகின்றது. மேலும்,

**"மயிலடி இலைய மாக்குரங் நொச்சி**
**முனைநடு மௌவலொடு உழ்முகை அவிழக்"** **(நற்-115)**

**"கருங்குரல் நொச்சிகண்ஆர் குரூஉத்தழை**
**மெல்இழை மகளிர் ஐதுஅகல் அல்குல்"**[67]

**"கண்ணி கட்டிய கதிர அன்ன**
**ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி"** **(நற்-200)**

இவ்வாறாகக் காணப்படும் நொச்சிப் பூக்களை இளம் பெண்கள் தழையாடையாகவும், மாலையாகவும் சூடியுள்ளனர்.

**பாதிரி**

பாதிரி மரம் காட்டுப் பகுதியில் மிகுதியாக வளர்ந்து காணப்படும். **"அத்தப் பாதிரி"**[68], **"கானப் பாதிரி"**[69] என்று அழைக்கப்படுகிறது. பாதிரிமலர் மென்மையானது. பஞ்சு போன்ற துய்யினை உடையது, இதழ்கள் மெல்லியதாகக் காணப்படும்.

> **"ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய**
> **துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி" (நற்-118)**

என அதன் தோற்றத்தை நற்றிணை எடுத்துக் கூறியுள்ளது. பாதிரியின் புற இதழ்கள் கருமையுடன் இருக்கும். அகவிதழ்கள் வளைந்து காணப்படும். இது வேனிற் காலத்தில் மலரும் தன்மையுடையது.

> **"கானப் பாதிரி கருந்தகட்டு ஒற்வீ" (அகநா.-261)**
>
> **"வேனிற் பாதிரி கூனி மாமலர்" (அகநா.-257)**

என்கிறது. அதிரலும், பாதிரியும் சேர்த்துக் கூறப்படுகின்றன. பாதிரிமலர் வாடியவுடன் நரைத்த நிறமுடையதாக மாறிவிடும் என்பதை,

> **"வேனிற் பாதிரி கூனிமா மலர்**
> **நரைவாய் வாடல்காறும் நாற்சுரம்" (அகநா.-257)**

இப்பாடல் மூலம் அறியமுடிகிறது.

> **"பைங்கூழ்ப் பாதிரிப்போதுபிரிந் தன்ன**
> **வங்கோ சிகமும் வங்கச் சாதரும்"**[70]
>
> **"கோசிக ஆடை பூத்தன பாதிரி"**[71]

என பாதிரியின் பூ கோசிக ஆடைக்கு இணையாகக் கூறப்பட்டுள்ளது. இது காசியில் நெய்யப்பட்ட பட்டாடையாகும். இது பொன்னிறமானது. பாதிரிப் பூ மஞ்சள் நிறமும், பொன்னிறமும் உடையது. பாதிரி மலரிதழின் அடிப்பகுதியில்

மகரந்தத் தூள்கள் துவங்கும் இடத்தில் சுற்றிலும் ஒரே வரிசையாகக் குறுமயிர்கள் உண்டு என்று செடி நூல் கூறுகின்றது.

**"முதிரா வேனில் எதிரிய அதிரல்**

**பரா அரைப் பாதிரி குறுமயிர்மாமலர்"** **(நற்-337)**

எனப் பாதிரி மலரில் மயிர் உண்டென்பதை இப்பாடல் எடுத்துக்கூறுகிறது. இம்மலர்கள் வேனிற் காலத்தில் மலரும். ஏப்ரல், மே மாதங்களில் இது பூக்கிறது. 'வேனிற்கட் பாதிரி' என்று நன்னூல் மயிலைநாதர் உரையில் கூறுகின்றார். 'வேனிற் பாதிரி' என்று குறுந்தொகையும் (167), அகநானூறும் (257) கூறுகின்றன. பசிய இலையினை உதிர்த்த பருத்த அடி பொருந்திய பாதிரி மரம் என்பதைப் 'பாசிலை ஒழிந்த பரா அரைப் பாதிரி' என்று பெரும்பாணாற்றுப்படை (4) சுட்டுகிறது. பாதிரி மலர் இதழ்கள் தண்ணீருக்கு நறுமணம் தரும் இயல்புடையவை என்பதை,

**"ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு**

**தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு"**[72]

என்ற பாடல்வழி நாலடியார் 'கல்வி' அதிகாரத்தில் புலப்படுத்துகிறது. பன்மையான காம்பினையுடைய பாதிரி மலரின் வரிகளும், நுண்ணிய கொடியை உடைய அதிரல் மலர்களும் கருமணலில் அழகுபடுத்தியதை,

**"புன்கால் பாதிரி அரிநிறத் திரள்வீ**

**நுண்கொடி அதிரலொடு நுணங்கு அறல் வரிப்ப"** **(அகநா.-237)**

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் கூறியுள்ளன. மணல்களில் பாதிரிப் பூக்கள் பரவி இருந்ததையும், தலைவி அவற்றைக் குவித்து மாலையாகக் கட்டியதையும்,

**"உயர்கரைக் கான்யாற்று அவிர்மணல் அகன்றதுறை**

**வேனில் பாதிரி விரிமலர் குவைஇத்**

**தொடலை தைஇய மடவரல் மகளே"** **(ஐங்-361)**

என்ற ஐங்குறுநூற்று அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. பாதிரிப்பூக்கள் இலக்கியத்தில் காணப்பட்டாலும், தற்காலத்தில் அவை காணக்கிடைக்காத நிலையே உள்ளது.

**புன்னை**

சங்க இலக்கியங்களில் மலரினங்களில் சிறப்பான இடத்தைப் பெற்றிருப்பது புன்னை ஆகும். கடி இரும்புன்னை மணத்தையுடைய பெரிய புன்னைப் பூ எனநச்சினார்க்கினியர் கூறுகிறார். கடற்கரைக் கழிகளின் ஓரங்களில் நீர்நிலைப் பகுதிகளில் வளரக்கூடியவை. புன்னை மரம் நெய்தல் திணைக்குரிய மரமாகக் கடல் சார்ந்த பகுதியில் காணப்படுகிறன.

'புன்னாகம்' என்ற ஒரு வழக்கும் உண்டு. புன்னாகம் என்பதற்குப் புன்னையின் விசேடம் என்று நச்சினார்க்கினியர் கூறுவார். புன்னை இளவேனிற் காலத்தில் மலரும். புன்னையின் அரும்பு கழுவப்பெறாத வெண்ணிற முத்தைப் போன்றிருக்கும் இதனை,

**"மண்ணா முத்தம் அரும்பிய புன்னை"**[73] **(அகநா.30)**

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. பொன்போன்ற தாதையுடைய புன்னை மலர் இணராக மலர்ந்து நிற்கும், தேனும், மணமும் உடையது. இவற்றை,

**"அன்றில் சேக்கும் முன்றில் பொன்னென**
**நன்மலர் நறுவீ தாஅம்**
**புன்னை நறும் பொழில்"**[74]

**"தேனிமிர் நறுமலர்ப் புன்னை"**[75]

என்ற அகநானூற்றுப் பாடல்வழி அறியலாம். புன்னையின் பூ மிக வெண்மையானது. மொக்கு, பூ, பூவின் காம்பு எல்லாம் வெண்மையாகப் புன்னையில் காணமுடியும் என்பதை,

**"உள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன**
**பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னைக்"** **(நற்-231)**

என்ற அடிகள் தெளிவுபடுத்துகின்றன. ஊர்க் குருவியின் முட்டை உருவிலும் நிறத்திலும் புன்னையின் முற்றிய வெள்ளை அரும்பை ஒத்திருக்கிறது. மலர்களின் நுண்ணிய பூந்துகள் வீழப்பெற்ற நெய்தல் மலர் பொன்னோடு பொருந்திய நீலமணி போல அழகு பெறத் தோன்றுவதை,

**"புன்னை நுண்தாது உறைத்தரு நெய்தல்**
**பொன்படு மணியின் பொற்பத் தோன்றும்" (ஐங்-189)**

என்ற ஐங்குறுநூறு பாடலடிகள் உணர்த்துகிறன. கரிய கொம்புகளையுடைய புன்னையின் சிறுசிறு கிளைகள் தோறும் நறிய மலர்களிடத்தே, மலரும் காலம் பார்த்து நுகர்தற்காகச் சுரும்புகள் ஆராவாரிப்பதை,

**"கருங்கோட்டு நறும் புன்னை மலர்சினை**
**மிசைதொறும் கரும்பு ஆர்க்கும்" (கலித்-123)**

என்ற கலித்தொகைப் பாடல் கூறுகிறது. இரும்பு போன்ற கரிய புன்னை மரக்கிளைகளில் உள்ள பச்சை இலைகள் நீல மணிகள் போன்றன. அந்த இலைகளின் இடையே உள்ள பூங்கொத்துக்கள் வெள்ளியைப் போன்றன. அப்பூக்களின் நடுவே உள்ள பூந்துகள் பொன்துகள் போன்றவை. அத்துகள் உதிர அதனைப் பெற்ற வண்டுகள் புலியின் மேல் உள்ள புள்ளிகளைப் பெற்றதை,

**"இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை**
**நீலத்து அன்ன பாசிலை அகம் தொறும்,**
**வெள்ளி அன்ன விளங்கஇணர் நாப்பன்**
**பொன்னின் அன்ன நறுந்தாது உதிர,**
**புலிபொறி கொண்ட பூநாறு குரூஉச்சுவல் வரிவண்டு" (நற்-249)**

என்ற நற்றிணைப் பாடல் எடுத்துக்கூறுகிறது. இலக்கியத்தில் கூறப்படுவதைப் போலவே இக்காலத்திலும் புன்னை மரத்தை நிழல் தரக்கூடியதாக வீட்டின் முன்னால் வளர்க்கின்றனர். பூக்களில்முத்துப் போன்றும், பொன் போன்றும் மஞ்சள் பூந்துகளும் காணப்படுகிறன.

**மருதம்**

நீர்ப்பெருக்கான இடங்களில், வயல்களின் ஓரங்களில் மருதம் இணராகப் பூக்கும் தன்மையுடையது. பூவின் நிறம், மஞ்சள் நிறமாக இருக்கும்.

**"நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை**

**தேங்கமழ் மருது இணர்கடுப்ப"**[76]

என்று திருமுருகாற்றுப்படை சுட்டுகின்றது. இப்பூக்கள் மரத்திலிருந்து மிக எளிதில் உதிர்ந்து விழும் தண்மையுடையன. பறவைகள் பறக்கும் வேகத்திலேயே அவை உதிர்ந்து விடுகின்றன என்பதை,

**"பழனப் பல்புள் திரியக் கழனி**

**வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்" (நற்-350)**

என்ற நற்றிணை அடிகள் உணர்த்துகின்றன. மருத மலர் துய் உடையதாக இருக்கும். 'உளைப்பூமருதம்' என்று இது சிறப்பித்துக் கூறப்படுகிறது. மருதின் புற இதழ்கள் கருமை நிறத்துடன் காணப்படும். இதனை,

**"கருந்தகட்டு உளைப்பூமருதின் ஒள்ளிணர்"**[77]

என்பதன் மூலம் உணரலாம். மருதமலரில் சிவப்பு நிற மலரும் உண்டு என்பதைச் **"செவ்வீ மருது"**[78] என்ற குறுந்தொகைப் பாடலால் அறிந்துகொள்ள முடிகிறது.

மருதுகளில் சிறந்த பூவையுடைய மருது 'பூமருது' என்று அழைக்கப்படுகிறது. பிற மருதங்கள் கருமருது, வெள்ளை மருது என்றும் அதன் அடிமரங்களின் நிறங்களையொட்டி அழைக்கப்படும். சங்ககால மருதப் பூவில் சிறந்தது, பூ மருதம். ஊதா நிறம் சிறிது கலந்து இளஞ்சிவப்பான பெரிய இதழ்கள் மருதம் பூவிற்குண்டு. இதன் பூ தொலைவிலேயே தெளிவாகத் தெரியும் வண்ணம் உள்ளது. கண்ணை ஈர்க்கும் மிக அழகு வாய்ந்த பூக்களில் ஆறு சிவந்த இதழ்கள் ஏந்திய தட்டுக்கள் போலத் தோன்றும் அமைப்பில் உள்ளது.

மருத மரம் Lagerstroemia Flos-Reginae என்ற தாவரப் பெயரில் அழைக்கப்படுகிறது. இதன் பெயரிலேயே இதனுடைய பெருமையையும் செடிநூலார் குறிப்பிட்டள்ளனர்.

அரசிக்கு உகந்த பூ என்ற பொருளில் **Flos-Regina** என்றும், ஆங்கிலத்தில் 'The Queen's Flower' என்று அழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் இந்தியாவின் பெருமை என்ற பொருளில் 'Pride Of India' என்றும் கூறுகின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழர் நாகரிகத்திற்குப் பெருமை தேடித் தந்த பூவைத் தற்போது **'இந்தியாவின் பெருமை'** என்று இரா. இராமகிருட்டிணன் குறிப்பிடுகிறார். வையை ஆற்று நீர் கொண்டுவந்து சேர்த்த நீண்ட மணல் பரப்பு அமைந்த கரையில் நீண்டு வளர்ந்திருந்தது அழகிய மருதமரம், அம்மரம் பல பூக்கள் பூக்கும் சோலையில் இருந்ததை அகநானூற்றுப் பாடல்,

**"வருபுனல் வையை வார்மணல் அகன்றதுறை**
**திருமருது ஓங்கிய விரிமலர்க்கா"** **(அகநா.-36)**

என்று குறிப்பிடுகின்றது. வெண் சிறு கடுகினைப் போன்ற சிறிய பூக்கள் உடைய ஞாழல் மரத்தின் பூ, அழகிய மருத மரத்தின் வாடிய பூக்களுடன் பரவி இருந்ததை,

**"ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்**
**செவ்வி மருதின் செம்மலோடு தாஅய்த்"** **(குறுந்-50)**

என்று குறுந்தொகை சுட்டுகிறது. குளிர்ந்த சண்பகப் பூக்களைச் செருகி, கருமையான இதழையும், வெள்ளிய அக இதழையும் உடைய மருத மரத்தின் பூங்கொத்தினைச் சண்பகப் பூவின் மேல் வைத்துக் கட்டப்பெற்ற மாலை என்பதை,

**"பெருந்தண் சண்பகம் செரீ, கருந்தகட்டு**
**உழைப்பூ மருதின் ஒன்இணர் சுட்டி"**[79]

என்ற அடிகள் சுட்டுகின்றன. உளை பொருந்திய பூக்களை அதிகமாகக் கொண்ட மருத மரத்தில் குருகுகள் தம் இனம் சூழக் குழுமியிருக்கும் என்பதை,

**"உளைப்பூ மருதத்துக் கிளைக்குருகு இருக்கும்"** **(ஐங்-7)**

என்று குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. சங்க காலத்தில் கூறப்பட்ட பூமருது தற்போது காண்பதற்கு அரிதான ஒன்றாக இருப்பினும், மருத மரத்தின் பூக்கள் சந்தன நிறத்தில் கொத்துக் கொத்தாகக் காணப்படுகின்றன.

**வெண்கடம்பு**

மராமரம் இதனை வெண்கடம்பு என்றும் கூறுவர். வெண்ணிறப் பூவுடன் இளவேனிற் காலத்தில் மலரும். வண்டுகள் பாயும் வெண்கடம்பின் பூங்கொத்துகள் கமழும் கூந்தல் என்பதனை,

**"தேம் பாய் மராஅம் கமழுமம் கூந்தல்"** **(நற்-20)**

என்ற நற்றிணைப் பாடல் எடுத்துக்கூறுகிறது. இதன் மலர்கள் மழையுடன் வீழும் பனிக்கட்டிக்கு உவமையாகப்பட்டுள்ளது. நெருப்பினைப் போலச் செந்நிறப் பூக்களையுடைய கொம்புகளைக் கொண்ட மராமரம் என்பதை,

**"எரி கான்றன்ன பூஞ்சினை மராஅத்து"**[80]

என்னும் பாடல் வழி அறியலாம்.

**"தீய்ந்து மரா அத்து ஓங்கல் வெஞ்சினை,**
**வேனில் ஓர் இணர்"**[81]

என்னும் குறுந்தொகைப் பாடலடிகள், ஐங்குறுநூறு இளவேனிற் பத்து ஆகிய இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளதையும் மேலும்,

**"அவரோ வாரார் தான் வந்தன்றே,**
**வலம் கரி மராஅம் வேய்ந்து,**
**நம் மணங்கமழ் தண்பொழில் மலரும் பொழுதே"** **(ஐங்-348)**

என்னும் பாடல் கொண்டு மராமரம் இளவேனிலில் பூப்பது என்பதும், இதன் மலர் வலமாகச் சுழித்த அமைப்புடையது என்பதும் அறியப்படுகிறது. தேனுண்டாக மலர்ந்த கடம்பின் மெல்லிய பூங்கொத்துக்களையும், யா மரத்தின் பூக்களையும் மரல் நாரில் தொடுத்துக் கூத்தர் அணிந்துள்ளனர். இச்செய்தியினை,

**"தேம்பட மலர்ந்த மராஅமெல் இணரும்**
**உம்பல் அசைத்த ஒண்முறி யாவும்**

**தளிதொடு மிடைந்த காமர் கண்ணி**

**திரங்குமரல் நாரில் பொலியச் சூடி"**[82]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. மலர்ந்த மலரினையுடைய வெண்கடம்ப மரத்தை,

**"விரிமலர் மராஅம் பொருந்தி"** **(அகநா.- 172)**

என்ற அகநானூற்றுப் பாடலடி கூறுகிறது. இருளையும் தோற்கச் செய்யும் பருத்த அடியையுடைய செங்கடம்ப மரத்தில் பூத்த வட்டவடிவமாக பூக்களால் தொடுக்கப்பட்ட குளிர்ச்சியுள்ள மாலை கிடந்து அசையும் மார்பினனாய் முருகன் விளங்குகின்றான். இவற்றை,

**"இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து**

**உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்"**[83]

எனும் திருமுருகாற்றுப்படைப் பாடலடிகள் சுட்டுகின்றன. மராஅம் மரத்தின் அரும்புகள் வலப்பக்கமாக முறுக்கேறி இருக்கும். அவை கொத்துக் கொத்தாகவும், ஒருவன் கோல் கொண்டு அம்மரக் கிளைகளின் மேல் தாக்கினால் அம்மலர்கள் எல்லாம் உதிர்வதைப் போலவும், தென்றல் காற்றுப் பலமாக வீசி அம்மலர்களை உதிர்த்ததும் அவ்விடத்தில் மலர்மணம் கமழ்ந்ததையும்,

**"………….. புரி இணர்**

**மெல் அவிழ் அஞ்சினை புலம்ப, வல்லோன்**

**கோடு அறை கொம்பின் வீஉகத் தீண்டி**

**மராஅம் அலைத்த மணவாய்த் தென்றல்"** **(அகநா.-21)**

என்ற அகநானூற்றுப்பாடல் சுட்டுகிறது. வெண்கடம்பு வெண்மையாகவும், ஆலங்கட்டி மழையைப் போலவும் காணப்படும் என்பதை அறிய முடிகிறது.

**மாம்பூ**

மாம்பூ இணராக மலரும் இயல்புடையது. இதற்கு மணம் உண்டு. 'கடிகமழ்மா', 'கவிழ்இணர்மா' என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

குளிர்ச்சியுள்ள மணம் கமழும் சோலையில் ஆண் மயிலோடு சேர்ந்த சிவந்த கண்ணைக் கொண்ட பெண் குயில் கூவி எதிர்எதிராக ஆரவாரிக்கும் பூக்கள் மிகுதியாகப் பூக்கும் காலம் இளவேனில் காலம் என்பதை,

**"அடைகரை மாஅத்து அலங்குசினை ஒலியாத்**
**துளிர்கவின் எய்திய தண்நறும் பொதும்பின்**
**சேவலொடு கெழீஇய செங்கண் இருங்குயில்**
**புகன்றுஎதிர் ஆலும் பூமலிகாலை" (நற்-118)**

என்ற நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கின்றது. மாம்பூ எளிதில் மரத்திலிருந்து உதிரும், அவ்வாறு உதிர்ந்து விழுவது மழைத்துளி விழுவதைப் போலக் காட்சியளிக்கின்றது. இதனை,

**"கருங்கோட்டு மாஅத்து அலங்க சினைப் புதப்பூ**
**மயங்கு மழைத் துவலையின் தாஅம்" (அகநா.-236)**

எனும் அகநானூற்றுப் பாடல்வழி உணரலாம். கவிழ்ந்த பூங்கொத்துகளைக் கொண்டது மாமரம். சூரன் மாமரமாக மாறியபோது அவனை வீழ்த்தினான் முருகன் என்பதை,

**"…………… கவிழ்இணர்**

**மாமுதல் தடிந்த"**[84]

இளவேனில் காலத்தில் ஆற்றங்கரையில் உள்ள மாமரத்தின் நெருங்கிய கிளைகளில் தளிர்கள் அழகாகத் தழைத்து இருக்கும். குயில் மாமரக் கொம்பிலுள்ள பூந்துகளைக் கோதும் பொழுது அவை உதிர்ந்து குயிலின் உடன் பொன் உரைத்துப் பார்க்கும் கட்டளைக்கல் போல இருக்கும். இவற்றை,

**"…………… இருங்குயில் பொன்னின்**
**ஊரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை**
**நறுந்தாது கொழுதும் பொழுது" (குறுந்-192)**

என்ற குறுந்தொகைப் பாடல் எடுத்துக்கூறுகிறது.

**“பொரிகால் மாஞ்சினை புதைய**

**எரிகால் இளந்தளிர் ஈனும் பொழுது”** **(ஐங்-349)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் பொரிந்த அடிமரத்தைக் கொண்டது மாமரம் இளவேனிலின் அது தன் கிளைகள் புதையும்படி தீயைக் கக்குவது போல இளந்தளிரை ஈனும் என்பதை,

**“……….மாஈன்ற தளிரின் மேல்**

**குணிகாரம் கொட்டுங்கொல் என்றாங்கு அனிசெல**

**மேனி மறைத்த பசலையன்”** **(கலித்-26)**

என்னும் கலித்தொகைப் பாடல் எடுத்துக்கூறுகிறது. மாமரங்கள் வீடுகளிலும் காணப்படுகிறது. இது தை, மாசி மாதங்களில் பூக்கிறது. பூ மணம், பூந்துகள், தேன் இவற்றைக் கொண்டிருக்கும் என்பதை அறிய முடிகிறது.

**வேங்கை**

சங்க இலக்கியங்களில் அதிகமான இடங்களில் கூறப்படும் மரமாகும். புறவிலும், மலைச் சாரல்களிலும் இது மிகுதியாகக் காணப்படுகிறது. குறிஞ்சிநில மக்கள் வீட்டு முற்றங்களில் பெரும்பாலும் வேங்கை வளர்த்துள்ளனர். பூக்கள் மஞ்சள் நிறத்தில் மாலை மாலையாகப் பூத்து இருப்பதைக் காணலாம். சிவப்பு நிறத்திலும் வேங்கை மலரினம் இருக்கும். இவற்றை,

**“பொன்னிணர் வேங்கை”** **(நற்-157)**

**“கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை”** **(நற்-222)**

என நற்றிணைப் பாடல் கூறுகிறது. இதன் மொட்டுகள் கரியநிறத்துடன் காணப்படும். இதனை,

**“வேங்கையின் மணியேர் அரும்பு”** **(அகநா.-232)**

**“காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கை”** **(நற்-373)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. தேனும், தாதும் நிறைந்த இம்மலர்கள் மனம் பொருந்தியவை. அதனை ‘நறுவீ வேங்கை’ என அகநானூற்றுப் பாடல்

கூறுகிறது. வேங்கை மலர் மரத்திலிருந்து உதிர்கின்ற காட்சி கொல்லன் உலையில் தெறிக்கின்ற கதிர் போன்று காணப்படுவதை நற்றிணைப் பாடல்(13) கூறுகிறது. மாலை நேரத்தில் வேங்கை மலர்கள் மலரும் என்பதை,

**"மணிமருள் மாலை மலர்ந்த வேங்கை" (அகநா.-298)**

என்று அகநானூறு கூறுகிறது. வேங்கை பூத்து நிற்பது நன்னிமித்தமாகக் கருதப்படுகிறது. எனவேதான் இதனை 'நன்னான் வேங்கை' என்றும் 'கணிமலர்' என்றும் குற்றாலக்கோவை (20) எடுத்துக்கூறுகிறது. வேங்கை மலரை வண்டுகள் மூசாது என்பது பிற்காலக் கொள்கையாகும். இதனை,

**"வண்டுண்டிடா மலர்சேர்குழல்"[85]**

என்று'வேங்கை மலர்'பற்றிக் குற்றாலக் கோவையில் கூறுவதையும் காணலாம்.

**"நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக்**

**களிச் சுரும்பாற்றும்"[86]**

எனவும்,

**"சுரும்புண விரிந்த கருங்கால் வேங்கை" (நற்-168)**

எனவும் எடுத்துரைக்கப்படுகிறது. ஊர் மன்றத்தின் உள்ள வேங்கை மரங்கள் மணநாளை அறிவிப்பது போலப் பூத்து நின்றன என்றும் அம்மரங்களில் மணி போன்ற அரும்புகள் மலர்ந்த பொன்னிறப் பூக்கள் இருப்பதை,

**"மன்ற வேங்கை மணநாட் பூத்த**

**மணிஏர் அரும்பின் பொன்வீ" (அகநா.-237)**

என்று அகநானூறு சுட்டிக்காட்டுகின்றது. வேங்கையின் பொன் நிறம் பெற்ற பூங்கொத்துக்களைப் பறிக்கப் பெண்கள் அம்மரத்தின் அருகில் நின்று 'புலி' என்று கூறினர். அவ்வாறு கூறினால் அம்மரம் தன் கிளைகளைத் தாழ்த்திப் பூக்களைப் பறித்துக் கொள்ள வாய்ப்பளிக்கும் என்ற நம்பிக்கையிருந்ததை,

**"தலைநாள் பூத்த பொன்இணர் வேங்கை,**

**மலைமார் இடூஉம் ஏமப் பூசல்"[87]**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. பொன் போன்ற புதிய வேங்கை மலா் தந்த பூந்துகளைப் பூசிக்கொண்டு அதனால் அழகு பெற்ற மயில் கூட்டம் பசுமையான கல்லின்மேல் கூடி ஞாயிற்றின் ஒளியில் திளைத்த காட்சியை,

**"வேங்கை தந்த வெற்பு அணி நன்னாள்**

**பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்**

**கமழ்தாது ஆடிய கவின்பெற தோகை**

**பாசறை மீமிசைக் கணம் கொண்டி ஞாயிற்று**

**உறுகதிர் இளவெயில் உண்ணும்" (நற்-396)**

என்ற நற்றிணைப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. வேங்கை மலா் கொண்டு மலையில் உள்ள கடவுளைத் தலைவியொருத்தி வழிபட்டதை,

**"மன்ற வேங்கை மலர்சில கொண்டு**

**மலை உறை கடவுள் குலமுதல் வழுத்தி" (ஐங்-259)**

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலடிகளும், வேங்கை மரக்கிளையில் மலர்கள் உடையதை,

**"வரைசேர்பு எழுந்த சுடர்வீ வேங்கை**

**பூ உடைப் பெருஞ்சினை"[88]**

என்று பதிற்றுப்பத்துப் பாடலடிகளும் எடுத்துரைக்கின்றன. கரிய மேட்டு நிலத்தில் இம்மரங்கள் காணப்படும். 'புலி, புலி' என்று கூவினால் கிளை தாழ்ந்து பூ பறிக்க உதவும் என்ற நம்பிக்கையுண்டு. பூ குளிர்ச்சியும், பருமையுமானது, கரிய புற இதழைக் கொண்டது.

**ஆசினிப்பூ**

இப்பூக்கள் மலையின் மேல் பூக்கும். கரிய சேற்றைப் பூசிய கொற்றியையுடைய கொல்ல வல்ல களிற்றுயானை அறியாமையால் ஆசினியை முறித்து மலா்ந்திருந்து பரவி வேங்கை மரத்தின் கீழே தாங்கி நிற்கும் மலைக்கிழவன் போன்ற உடம்பின் வேறுபட்டதைக் காட்டுகின்றது.

**"கொல் களிறு**

**பேதை ஆசினி ஒசித்த**

**வீதா வேங்கைய மலைகிழவோற்கே''** **(நற்-51)**

என நற்றிணைப் பாடல் கூறுகிறது. ஆசினிப் பூக்கள் பழமுதிர் சோலையில் வீழும் அருவிகளில் புரண்டு ஓடுவதையும் புலப்படுத்துகிறது.

**செம்முருக்கு**

இம்மரங்கள் கோடைக்காலத்தில் பூங்கொத்தில் காய்த்துப் பழுத்து முற்றிய நிலையில் காணப்படும். இதனை,

**''வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன''** **(நற்-73)**

என நற்றிணைப் பாடல் விளக்குகிறது. உயர்ந்த கிளையைக் கொண்ட முருக்க மரம் அதன் மலர்களை உதிர்க்கிறது. உதிராத அரும்புகள், கொத்துக் கொத்தாகச் செக்கச் செவேலென பூக்கின்றன. நல்லியக்கோடன் பாணனுக்கு அளித்த தேரின் மேற்பரப்பு அம்மலர்களின் செந்நிறம் போன்று சாதிலிங்கக் குழம்பால் பூசப்பெற்றிருந்தது என்பதை,

**''சிதர்நனை முருக்கின் சேண் ஓங்குநெஞ் சினை**

**ததர்பிணி அவிழ்ந்த தோற்றம் போல**

**உள்ளிரக்கு எறிந்த உறுக்குறு போர்வை''**[89]

எனும் சிறுபாணாற்றுப்படை அடிகள் எடுத்துக்கூறுகிறன.

**''கருங்கால் வேங்கை இருங்கிளைப் பெ**

**நறும்பூக் கொய்யும் ஓசை''**[90]

என மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. முள்முருங்கை மரத்தின் சிவந்த அரும்புகள் புலியின் நகங்கள் போன்று இருக்கும். அவ்வரும்புகள் மலர்ந்திருந்தன என்பதை,

**''செம்முகை அவிழ்ந்த முள்முதிர் முருக்கின்**

**சிதர்ஆர் செம்மல் தாஅய் மதர்எழில்''** **(அகநா.-99)**

என்றடிகள் எடுத்துரைக்கின்றன. குளங்கள் நீர்ப்பூக்களால் நிறைந்து அழகுபெற்றன. முருங்க மரத்தின் முதிர்ந்த இதழ்கள் நீருள் விழுகின்ற காட்சி தெளிவான கண்ணாடிப் பாத்திரத்தில் பவளத்தை இட்டது போன்றிருந்தது.

கரையோரக் கிளைகளில் உள்ள மலர்களின் நிழல் நீரில் தோன்றிற்று. அதனை உண்மையான பூக்கள் என்று மயங்கிய வண்டுகள் கூட்டம் நீரின் மேல் வட்டமிட்டு ஆரவாரித்ததை,

**"…………… கயம்நந்திக் கவின் பெற**
**மணிபுரை வயங்கலுள் துப்புளறிந் தலைபோலப்**
**பிணிவிடும் முருக்கு இதழ் அணிகலத்து உதிர்ந்து உகத்**
**துணிகயம் நிழல்நோக்கித் துதையுடன் வண்டு ஆர்ப்ப" (கலித்-32)**

என்ற கலித்தொகைப் பாடல் விளக்குகிறது. நீர் அடைகரையில் தாழ்ந்துள்ள முருக்க மரம் நெருப்புப் போல மலர்ந்து தீயும் நீரும் சேர்ந்தாற் போலிருந்து என்பதை,

**"முருக்குத் தாழ்பு எதிரிய நெருப்பு உறழ்அடைகரை" (பதிற்று-33)**

எனப் பதிற்றுப்பத்துப் பாடல் குறிப்பிடுகிறது.

**ஆத்தி**

அரசர்களின் சின்னங்களாகப் பூக்கள் திகழ்ந்தன. சோழன் 'ஆர்' என்ற ஆத்திப் பூவையும், பாண்டியன் வேப்பம் பூவையும், சேரன் போந்தை என்ற பனம்பூவையும் சின்னங்களாகப் பெற்றிருந்தனர். சோழர் குடிமரபுக்குரிய பூ 'ஆர்' என்னும் மரத்தின் மலராகும். 'ஆர் என்னும் இம்மரத்திற்கு ஆத்தி, தாதகி, சல்லகி என்னும் பெயர்களை நிகண்டு'தமிழ் இலக்கியத்தில் மலர்கள் (ப-97) கூறுகிறது. சோழர் சூடும் ஆர் என்னும் ஆத்தியை நற்றிணைப் பாடல்,

**'பாரத்து அன்ன ஆரமார்பில்' (நற்-265)**

எனவும் குறிப்பிடுகிறது. **"தாதகி ஆத்தி ஆரே சல்லகி யெல்லாமொன்றும்" (சூடா.மரப்பெயர்-19)** ஆர் என்னும் பெயர் சங்க காலத்தில் பெருவழக்காக இருந்தது. ஆத்தி குறிஞ்சிப்பாட்டில் கூறப்பட்டுள்ளது. இம்மரத்தின் பெயர் இடைக்காலத்தில் காட்டாத்தி, திருவாத்தி என்று இரண்டு அடைமொழிகளுடன் சேர்த்து வழங்கப்பட்டது. இம்மரம் காடாக அடர்ந்து செறிந்து இருப்பதால் காட்டாத்தி என்று வழக்கினைப் பெற்றது. 'பூவரசம் பூ போன்ற அமைப்புடன், ஆனால் இதில் நான்கில் ஒரு பங்கு அளவினதாக வெள்ளை நிறத்திலும்

மஞ்சள் நிறத்திலும் பூக்கும் மலரினை இக்காலத்தில் ஆத்தி எனக் காட்டுகின்றனர்' என இரா. இராமகிருட்டிணன் (பக்-186) கூறியுள்ளார்.

ஆர் என்பது ஆத்தி மலர், தமாலம் என்பது வெற்றிலைக் கொடி அது படர்ந்த மரம் 'ஆர்' வெற்றிலையாகக் கொடிக்காலில் அகத்தி மரத்தில் படர விடுகின்றனர். இந்த அகத்திதான் அத்தியாயிற்று. அகத்தி என்னும் சொல் ஆத்தி என மருவி வழங்கப்படுகிறது.

**கூவிளம்**

தலைவன் குளவியுடன் கூவிளம் பூவை இடையிட்டுக் கட்டி மாலையாக அணிந்ததை,

> **"பெருவரை நிழல் வருகுவன் குளவியொடு**
> **கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்"** **(நற்-119)**

என நற்றிணைப் பாடல் விளக்குகிறது. எழினி எனும் தலைவன் கூவிளமலரிடையே கண்ணியன் யாவதும் அணிந்ததை, 'ஊராது ஏந்திய குதிரை, கூர்வேல், கூவிளங்கண்ணிக் கொடும்பூண் எழினியும்' (புறம்-158) என்றும் கூவிள மரத்தின் விறகை எரிக்கப் பயன்படுத்தியதை,

> **"கூவிள விளகின் ஆக்குவரி நுடங்கல்"**[91]

என்று புறநானூறு குறிப்பிடுகிறது. "சங்க நூல்களில் கூவிளத்தைப் பற்றி வேறு குறிப்புகள் இல்லை"[92] என இரா. இராமகிருட்டிணன் குறிப்பிட்டுள்ளார். தலைவி தோழியோடு கூவிளம், எறுழம் முதலிய பூக்களைப் பறித்து விளையாடியதாகக் குறிஞ்சி (65,66) சுட்டியுள்ளது. "கூவிளம், கூவிளை, வில்வம், வில்வ, பத்ரி என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. வில்வ மரம் இந்தியாவைத் தாயகமாகக் கொண்டது. இதன் பூக்கள் ஐந்தங்க மலர் வகையைச் சேர்ந்தது. மகரந்தத் தூள்கள் எண்ணற்றவை என்று"[93] எடுத்துக் கூறுகிறது.

**சந்தனப்பூ**

சந்தனம் நறுமணப் பொருள்களின் ஒன்றாகும். ஆரம் என்பது சந்தனப்பூவின் பெயர். "இதனை 'திண் காழ் ஆரம்' என்றும் 'ஆரம் நாற', 'அருவிடர்த் ததைந்த', என்றும் 'ஆரம் நாறும் மார்பினன்' என்றும் 'நறும்

மார்பினன்' என்றும் 'நறும் காழ்','ஆரமொடு மிடைந்த மார்பில்' என்றும் இருந்துள்ளது."[94] சங்க காலத்தில் சந்தனத்தை மார்பில் பூசிக் கொண்டதை அறியமுடிகிறது. கரிய மேகம் மேல் பாலுள்ள மலையிலேயெழுந்து மழை பெய்து தழையச் செய்த சிறிய கிளைகளிலே பூங்கொத்துக்களையுடைய பெரிய குளிர்ச்சி பொருந்திய சந்தன மரத்தின் குறையோடு பலவாய பொருட்கள் சேர்த்துக் கூந்தலில் சந்தனம் பூசியதை,

**"கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த**
**சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்**
**வகை சேர் ஐம்பால் தகைபெற வாரிப்**
**புலர்விடத்து உதிர்ந்த துகள்படு கூழை" (நற்-140)**

எனும் பாடல் சுட்டுகின்றது. சந்தன மரத்திலிருக்கும் போந்து நறுமணங்கமழ்கின்ற மலைப் பினப்பினையுடையது என்பதை,

**"சாந்தம் போகிய தேங்கமழ் விடர்முகை" (நற்-26)**

எனும் நற்றிணைப் பாடல் புலப்படுத்துகின்றது. மணம் சுட்டு அகிற் புகையும், சந்தனப் புகையும் ஒருங்கு மணக்கின்ற கருமணலைப் போன்ற கரிய கூந்தல் என்பதை,

**"கமழ் அகில், ஆரம் நாறும் அறல் போல் கூந்தல்"[95]**

என்று குறுந்தொகை சுட்டுகிறது. சந்தன மரத்தின் இடையே எழும் அகிற்புகை மலரின் மணத்தோடு பரவி சிறந்த கலவை மணமாகக் கமழும் தலைவன் என ஐங்குறுநூறு (212) கூறுகிறது.

**குரா**

குரவு, குரா என்றும் அழைக்கின்றனர். மலர் வெண்மை நிறத்துடன் குவிந்து இணராகப் பூக்கும் தன்மையினையும், மணமிகுந்து காணப்படும் பண்பினையும் கொண்டது என்பதை,

**"குறுங்காற் குராவின் குவியிணர் வான்பூ" (நற்-266)**

**"குறுநிலைக் குராவின் சிறுநனை நறுவீ" (நற்-56)**

என்ற நற்றிணைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. குரவ மலரை,

**"நறும் பூங் குரவம் பயந்த**

**செய்யாப் பாவை கொய்யும் பொழுது"** **(ஐங்-344)**

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. பல் இணர்க் குரவம், பல இதழ்களையுடைய குரவம்பூ என நச்சினார்கினியர் உரை கூறுகிறது. குரவம் பூ வெண்மையானது, நறுமணம் மிக்கது. குரா மரத்தின் பெயரால் 'குராப்பள்ளி' என்றொரு ஊரும் அமைந்துள்ளது. குரவம் முல்லை நிலத்து மரம் முன்பனிக் காலத்தில் அரும்பு கட்டத் தொடங்கும், இளவேனிற் காலத்தில் அதிகமாகப் பூக்கும் என்பதை,

**"பின்பனி அமையம் வருமென முன்பனிக்**

**கொழுந்து முந்துநீஇ குரவு அரும்பினவே"** **(நற்-224)**

என்ற அடிகளும்,

**"குரவு மலர்ந்து**

**அற்சிரம் நீங்கிய அரும்பித வேனில்"[96]**

**"அரவு எயிற்றன்ன அரும்பு முதிர் குரவு"[97]**

என்ற அடிகளும் உணர்த்துகின்றன. குரா மொட்டுக்களும், பூக்களும் சிறியதாகக் காணப்படும். மேலும் குரவ மலரின் நனை அரும்புகள் மரக்கிளைகளில் பசுமை நிறத்தில் காணப்படும். நறுமணம் மிக்க குரவம் பூவை 'கொய்யாப் பாவை' என்றும் குரவமும் மரவமும் இளவேனிற் பருவத்திற்குரியன என்றும் பூத்து நிற்பதால் காடு முழுவதும் புத்தழகு பெற்றுக் காணப்பட்டதையும் சங்க இலக்கியங்களின் வழியே அறியமுடிகிறது.

**குமிழம்பூ**

உடை மரம் உள்ள வழியில் 'கல்' என்ற ஒலியோடு கீழே விழுந்து அப்புல்லிய குன்றுக்கு அழகு செய்யும்,

**"ஊசல் ஒண்குழை உடைவியத்து அன்ன**

**அத்தக் குமிழின் ஆய் இதழ் அலரி**

**கல்என வரிக்கும் புல்என் குன்றம்"** **(நற்-286)**

என நற்றிணைப் பாடல் கூறுகிறது. குமிழமரத்தின் அழகிய இதழையுடைய மலர்கள் கற்பாறையில் கோலஞ் செய்தாற் போல உதிர்ந்து கிடந்ததைச் சுட்டுகிறது. குமிழம்பூ பொன்னால் செய்யப்பட்ட குழை போன்று விளங்குவதாகக் கூறப்படுகிறது.

> **"குமிழின்பூ**
>
> **பொன்செய்குழையில் துணரதூங்க"**[98]

எனக் கார்நாற்பது கூறுகிறது. ஊசல் போன்று ஒளி பொருந்தியது காதணி ஆகிய குழை அக்குழையைப் போன்றது குமிழ மரத்தின் அழகியப்பூ என்பதை அறிய முடிகிறது.

**சுரிதகம்**

இப்பூ முன்பணி காலத்தில் பூக்கும். அழகு பொருந்திய கைத்தொழிலில் வல்ல கம்மியன் இட்டிழைத்த பொன்னாலாகிய சுரிதமெனும் அணி போன்ற வடிவினைப் பெற்றிருந்ததை,

> **"கடும்பிண அற்சிறம் நடுங்கக் காண்தகக்**
>
> **கைவல் வினைவன் தையுபு சொரிந்த**
>
> **சுரிதக உருவின வாகிப் பெரிய**
>
> **கோங்கங் குவிமுகை அவிழ"** **(நற்-86)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. சுரிதகம் என்பதைத் திருகுப்பூ போன்றதோர் அணிவகை என்றும், அணி போன்ற வடிவினை ஒத்த கோங்கின் குவிமுனைகள் மலர்வது எனவும் நற்றிணை சுட்டியுள்ளது.

**கொடிப்பூ**

பூக்களில் இரண்டாவது இடம் பெற்று விளங்குவதாகும். பூக்களின் வகைகளில் கொடிப்பூ அதிக அளவில் காணப்படுகின்றது. நற்றிணையில் கோட்டுப்பூக்கள் இருபத்தி மூன்று, கொடிப்பூக்கள் பதினெட்டு, நிலப்பூக்கள் பத்தொன்பது, நீர்ப்பூக்கள் ஏழு கூறப்பட்டுள்ளன. பனங்குருத்தும் இதில் காணப்படுகின்றது. குறிஞ்சி நிலத்து மலர்களைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப்பாட்டில் கோட்டுப்பூக்கள் நாற்பத்தி ஐந்து, கொடிப்பூக்கள் இருபத்தாறு,

நிலப்பூக்கள் பத்தொன்பது, நீர்ப்பூ ஐந்து கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு மலர்வகையுள் இவ்வெண்ணிக்கைகளோடு முடிவானது அல்ல. ஒவ்வொரு வகையிலும் மேலும் பல பூக்களுண்டு என்பதும் கூறப்படுகிறது. கொடிப்பூக்கள் காட்டுப் பகுதியாகிய முல்லை நிலத்தின் சிறப்பு மலராகும். கொடிகள் நிமிர்ந்து நிற்கும் திறன் இல்லாதவை. தாம் வளருகின்ற இடங்களுக்கு அருகில் வளரும் பிற வன்மையான தண்டுகளையுடைய மரங்கள், செடிகள், கொம்புகள் ஆகியவற்றைப் பற்றிக் கொண்டு வளரும் தன்மை உடையவையாகும். பற்றி வளராத நிலையில் சில கொடிகள் நிலத்திலேயே படர்ந்து வளர்கின்றன. அவ்வாறு பற்றி வளரும் கொடிகளில் சில, மரங்கள் தெரியாதவாறு அதன் உச்சிவரை பற்றிக் கொண்டு வளரும் கொடிகள் இருக்கின்றன. இவை அனைத்தும் கொடி என்ற இனத்தில் அடங்குகின்றன.

நற்றிணையில் கொடி இனங்களாகக் கூறப்படுபவை அதிரல், அடும்பு,ஈங்கை, உழிஞை, காந்தள், குருக்கத்தி, குளவி, தளவம், பகன்றை, பீர்க்கு, முண்டகம், முல்லை, மௌவல், தமலாக் கொடி, நறவம், நறுமோரோடம், வயலைக் கொடி,வெண்காந்தள் ஆகியனவாகும்.

**அடும்பு**

அடும்பின் தாவரக் கலைச்சொல் Ipomaea blloba. அடும்பு கடற்கரை ஓரங்களிலும், கழிகளிலும் படர்ந்து கிடக்கும். அரும்பு நெய்தலில் கூறப்பட்டிருந்து பொருத்தமான ஒன்றாகக் காணப்படுகிறது.

> **“இருங்கழி பொருதஈர வெண்மணல்**
>
> **மாக்கொடி அரும்பின் மாஇதழ் அலரி”** **(நற்-145)**

என்ற பாடலடிகள் அரும்பின் இதழ் பெரியதாக இருக்கும் என்பதைச் சுட்டுகிறது. அதன் மலர்கள் குதிரையின் தார்க்குச்சியின் நுனியில் கட்டப்பட்டுள்ள சிறிய மணியைப் போல வடிவினதாக இருக்கும் என்பதை,

> **“மான் அடிஅன்ன கவட்டிலை அரும்பின்**
>
> **தார்மணி அன்ன ஒண்பூ”**[99]

என்றும், கொடி அரும்பின் ஆராய்ந்த பூக்களை விரவித் தொடுக்கப்பட்ட நெய்தலாகிய கண்ணியை விளையாட்டு மகளிர் சூடியதை,

**"அரும்பின் ஆய்மலர் விரைஇ நெய்தல்**

**நெடுந்தொடை வேய்ந்த - ஓரை மகளிர்"**[100]

என்றும் குறுந்தொகைப் பாடல்கள் உரைக்கின்றன. மலை போல் உயர்ந்த வெண்மையான மணல் மேட்டில் படர்ந்த அடுப்பங் கொடியின் மலர்களைப் பறித்ததை,

**"குன்று ஓங்கு வெண் மணற்கொடி அடும்பு கொய்தும்" (நற்-254)**

என்று நற்றிணை கூறுகிறது. தலைவிக்கு வளைந்த கழியின் அருகிலுள்ள அடும்பின் மலரைத் தலைவன் பறித்துக் கொடுத்ததை,

**"கொடுங்கழி மருங்கின் அடும்பு மலர் கொய்தும்" (நற்-349)**

என்ற நற்றிணைப் பாடலடி சுட்டுகிறது. குளிர்ந்த கடற் பரப்பில் அடப்பங் கொடிகள் தழைத்து வளர்ந்த நீர்க்கரையில் நண்டுகள் விளையாடுகின்றன என்று பதிற்றுப்பத்து (51:6-7) எடுத்துரைக்கிறது. நெய்தல் நில சிறார்கள் மணலில் படர்ந்த அடும்பின் பூவினைத் தம் தலையில் சூடினர். இச்செய்தி,

**"வறன் அடும்பின் மலர் மலைந்தும்"**[101]

என்று பட்டினப்பாலையில் (65) இடம்பெற்றுள்ளது. அடுப்பங்கொடி பச்சையாகக் காணப்படும். இதை 'பாசடும்பு' என்று சங்க நூல்கள் கூறுகின்றன.

**"ஆய் கொடிப் பாசடும்பு பரிய ஊர்பு இழிவு" (அகநா.-330)**

**"ஏர் கொடிப் பாசடும்பு பரிய ஊர் இழிபு" (ஐங்-101)**

என்றும் அடுப்பங்கொடியை வர்ணித்துள்ளனர்.

**"கடுங்கதிர் ஞாயிறு மலைமறைந் தன்றே**

**அடும்புகொடி துமிய ஆழி போழ்ந்தவர்" (நற்-338)**

என்று நற்றிணைப் (நற்-338) பாடலடிகளில் மிக்க வெயிலைச் செய்யும் ஞாயிறு மேல்திசையில் மறைந்ததும் அடம்பங் கொடிகள் தேரின் கட்டிய மணியின் இனிய ஒலியும் தோன்றாமல் போயிற்று என்று புலப்படுகிறது.

**அதிரல்**

அறிவியல் கலைச்சொல் (Jasminua angusti follower vahl) என்கிறது. இதனைப் **"புனலிக்கொடி"**[102] என்று நச்சினார்கினியரும், 'காட்டு மல்லிகை' என்று அரும்பதவுரையாசிரியரும், **"மோசிமல்லிகை"**[103] என்று அடியார்க்கு நல்லாரும் குறிப்பிடுகின்றனர். இது இளவேனிற்காலத்தில் மிகுதியாக மலரும்.

**"முதிரல வேனில் எதிரிய அதிரல்"** **(நற்-337)**

அதிரல் கொடி மரத்தில் படரும் என்பதும், இதன் பூக்கள் பூனை சிரித்தார் போன்று இருக்கும். ஆற்று மணலில் கொட்டி விரித்தார் போன்று காணப்படும். இதனை ஆடவரும் மகளிரும் தனியாகக் கட்டியும், பிற பூக்களோடு சேர்த்துக் கட்டியும் அணிந்து கொள்வார்கள். அதிரல் மொட்டின் வடிவம் கூர்மையாகவும், நீண்டதாகவும் இருக்கும். **"குயில் வாய் அன்ன கூர்முகை அதிரல்"**[104] என்ற புறப்பாடலால் இதனை அறிந்து கொள்ளலாம். வெண்மை நிறமாகக் காணப்படும் மொட்டுகளின் மீது மெல்லிய வரிகள் வெருகின் கூரிய எயிறுகளைப் போன்று இருக்கும்.இதனை,

**"பார்வல் வெருகின் கூர்எயிற்று அன்ன**

**வரிமென் முகைய நுண்கொடி அதிரல்"** **(அகநா.-391)**

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

**"அல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்**

**பெரும்புலர் வைகறை அரும்பொடு வாங்கிக்**

**கான யானை கவனம் கொள்ளும்"** **(அகநா.-267)**

என்பதில் இம்மலர் இரவில் அல்லது வைகறைப் பொழுதில் மலரும் என்பதை உணர்த்துகின்றது.

**"கொய்குழை அதிரல் வைகூபுலர் அதிரல்"** **(அகநா.-213)**

என்ற அகநானூற்றுப் பாடல்கள் மலரும் காலத்தைக் சுட்டுகின்றன. **"அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்"**[105] என்னும் முல்லைப்பாட்டு அடிகள் குறிப்பிடுகிறது. இளவேனில் விருப்பத்திற்குரிய பருவம். அப்பருவத்தில் மகளிர் கூந்தல் போன்று நெளிநெளியாக ஆற்று ஓர கருமணல் அமைந்திருக்கும். இடத்தில் புனலிக் கொடி தனக்குரிய பூக்களைப் பூத்தது பற்றிய காட்சியை,

**“புதுப்பூ அதிரல்தர அய்க்**

**கதுப்பு அறல்**

**அணியும் காமர் பொழுதே”** **(ஐங்-345)**

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் காட்டுகிறது. காட்டு மல்லிகை எனப்பேச்சு வழக்கில் கூறப்படும் மல்லிகை மணமில்லா மல்லிகை. அழகிய வெள்ளை நிறத்தில் ஆறேழு இதழ்களும், தளிர் பச்சையில் சிறு காம்பும், அடர் பச்சையில் நீள்வட்ட இலைகளும், மலருமாக அழகாகக் காட்சியளிக்கும். மணமில்லா மலராக இருப்பினும், மலரின் வெண்மை நிறமும் அதன் நீண்ட இதழ்களும் பார்க்க அழகாக இருக்கும். இப்பூவில் மாலையும் தொடுத்தனர் என அறியமுடிகிறது.

**ஈங்கை**

இதன் தாவரவியியல் பெயர் **Mimosa rubicaulis.** சங்க இலக்கியத்தில் இதனைக் கொடி என்று குறிப்பிட்டுள்ளனர். நச்சினார்க்கினியார் **“இண்டங்கொடி”**[106] என்று கூறியுள்ளார். இக்கொடி பனிக்காலத்தில் செழித்து வளர்ந்து பூத்துக் காணப்படும். இதனை,

**“வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்**

**அரும்பனி அளை இய கூதிர்”** **(ஐங்-456)**

என்ற ஐங்குறுநூற்றுச் செய்தி வழியாக அறியப்படுகிறது.

**“குரீஇ**

**நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன**

**சிறு பல் பிள்ளை”** **(நற்-181)**

எனக் குருவிக் குஞ்சுகளுக்கு உவமையாகக் கூறப்படுகிறது. ஈங்கையின் இதழ்களால் மூடப்படும் போது தேன்துளி மிகத் திரண்டு விளங்கும் மலர் என்பதை,

**“சிறை நாள்ஈங்கை உறைநனிதிரள் வீ”** **(நற்-79)**

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிட்டுள்ளது. ஈங்கையின் அரும்பும், புனமல்லிகை மலரும் உயர்ந்த மணலால் அமைந்த திடலில் உதிர்வதை **“ஈங்கை முகை வீ**

**அதிரல் மோட்டு மணல் எக்கர்''** **(நற்-124)** என்ற பாடல் சுட்டிக் காட்டுகிறது. ஈங்கை மலர்கள் வெண்மை, துவர் ஆகிய இரு நிறங்களில் உள்ளன என்பதை,

**''இரங்காழ் அன்ன அரும்புமுதிர் ஈங்கை**

**ஆலி அன்ன வால்வீ தாஅய்''**[107]

என்றும்,

**''வாங்கு துளைத் துவரின் ஈங்கைப் பூப்பக்**

**கடிது வந்தி நுத்த வாடை''** **(அகநா. 243)**

என்றும் எடுத்துரைக்கின்றன. இம்மலரின் உள் பகுதியில் பஞ்சு போன்ற பொருள் அமைந்திருக்கும். அதனைத் 'தூய்' என்று கூறுவர். அதனால் இம்மலர் **''வண்ணத் துய் மலர்''**[108] என்று சிறப்புப் பெயர் பெற்று விளங்குகிறது.

**உழிஞை**

உழிஞை ஒரு கொடி மலர் ஆகும். **''நுண்கொடி உழிஞை''**[109] எனப் பதிற்றுப்பத்து சிறப்பிக்கிறது. இதன் இலைகள் சிறியதாக இருக்கும். இச்சிறு இலைகளைக் கொண்டு கட்டப்பட்ட தெரியலை, **''உழிஞைப் போதுக்களை இடையிடை வைத்துக் கட்டிய மாலைகளையும்''**[110] என வீரர்கள் அணிந்து கொண்டு போர்க்களம் சென்றனர் என்று புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

பூக்கள் புறத்துறைகளின் முக்கிய அடையாளச் சின்னங்களாக அமைந்துள்ளன. பனம் பூ, ஆத்திப்பூ, வேப்பம்பூ ஆகிய குடிப்பூக்கள் மூன்றும் அரசர் மரபுகளின் சின்னங்களாகும். எனவே அவை அரசப்பூக்கள் என்று அழைக்கப்படுகின்றன. புறத்துறையில் போர் முறைகளுக்கான சின்னங்களாகச் சில பூக்கள் அழைக்கப்படுகின்றன. இவை போர்ப்பூக்கள் என்றும் சுட்டப்பட்டுள்ளன. பூவினைக் கொண்டும் சின்னத்தைக் கொண்டும் இன்னார் இன்ன போருக்குச் செல்கின்றனர் என்று அறியும் நிலையில் அரசப்பூ, போர்ப்பூ ஆகியன திகழ்ந்துள்ளன. இருவகைகளும் "புறப்பூ" புறத்திணைப் பூ என்னும் வகையைச் சாரும். போர்ப்பூக்கள் போர்ச் சின்னங்களாகும். அப்போர்ச் சின்னங்கள் போர் நிகழ்ச்சிகளைப் போர் முறையை எடுத்துக்கூறுகின்றன. அந்நிலையில் "உழிஞைப்பூ - முற்றிகையிடல்" என்றும் இப்பூக்களின் சின்னங்கள் "உழிஞைப்போர்" என்றும் போர் முறையில் சொல்லப்படுகிறது.

படைவீரர்க்கு அவ்வப்போர்க்குரிய பூச் சூட்டப்படும். போர்ப் பூச் சூட்டி வழங்குவது ஒரு மரபாகும். மன்னன் வழங்குவான், அல்லது உரியவரைக் கொண்டு வழங்கச் செய்வான். இது“பூக்கோள் நிலை” என்னும் துறையாக அமைந்துள்ளது.

**“கார்எதிரிய கடற்றானைப்**

**போர்எதிரிய பூக்கொண்டன்று”**[111]

எனப் புறப்பொருள் வெண்பாமாலை கூறுகிறது. முற்றுகையிடும் வீரர்கள், முற்றுகையிடுவதன் சின்னமாக உழிஞைப் பூச்சூடுவார்கள். இது உழிஞைப்போர் என்றும் உழிஞைத் திணை என்றும் சொல்லப்படுகிறது. அரசனை முற்றுகையிடுவதன் சின்னமாக உழிஞைப் பூச் சூடுவது முற்றுகைப் பாடுதல் போர்மரபு ஆகும். இம்மரபுப்படி வீரர்கள் உழிழைப்பூச் சூடினார்கள் என்பதை,

**“சிறியிலை உழிழைப்பூ தெரியல் சூடி”**[112]

**“பொலங்கொடி உழிழையன்”**[113]

**“ஒண்டளிர்**

**நெடுங்கொடி உழிஞைப் பவரோடு மிடைத்து**

**செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி”**[114]

என்னும் பாடலடிகளால் அறியலாம். உழிஞைப்பூ ஒரு கொடிப்பூவாகும். ‘நெடுங்கொடி உழிஞை’ என்பதும் நுண்கொடி உழிஞை என்பதும் இதனை உணர்த்துகின்றன. ‘நுண்’ என்பதால் உழிஞைக் கொடி நுண்ணிய மெல்லிய கொடி என்பது விளங்கும். ‘பொலங்கொடி’ என்றும் குறிப்பிடப்படுவதால் இக்கொடி பொன் போன்ற நிறமுடையது என்பதும் பெறப்படும். சிறிய இலைகளையுடைய இக்கொடி பொன் போன்ற நிறமுடையது என்றும் கூறப்படுகிறது. சிறிய இலைகளையுடைய இக்கொடியின் கணுக்கால் பூக்கள் பூத்து, அதன் பூவும், தளிரும் பொன்னிறம் உடையதாக இருக்கும். பொன்போன்று இருப்பதால் பொன்னாலே செய்து அணிப்படுவதும் உண்டு. இதனை,

**“பொன்புன்னை உழிஞை வெவ்போக்க சூட்டுவ”**[115]

என்னும் அடி உணர்த்துகின்றது. உழிஞைக் கொடியைப் ‘பொற்கொற்றனன்’ என்றும் உலக வழக்கில் வழங்குவர்.

**“வில்லாப் பூவின் கண்ணி சூடி”** **(நற்-146)**

**“மடலே காமா் தந்தது அலரே**

**மிடையூ எருக்கின் அலா் தன் தன்றே”** **(நற்-156)**

இப்பாடல் விலைக்கு விற்றற்கியலாத பூளை பூவையும் உழிழைப் பூவையும், எருக்கம் பூவையும், ஆவிரப் பூவோடு கலந்து கட்டிய மாலையைச் சூடியதையும் எடுத்துக்கூறுகிறது.

**காந்தள்**

சங்க இலக்கியங்களில் பெரிதும் போற்றப்படும் அழகிய பூ காந்தள் பூவாகும். காந்தள் பூ தமிழகத்தின் தேசியப் பூவாகவும் கருதப்படுகிறது. மழைக் காலங்களில் வேலியோரங்களில் பூத்துக் குலுங்கும் இப்பூ மலைச்சாரலில் வளரும். கார்த்திகை முதல் மாசி வரையிலான மாதங்களில் பூக்கிறது. கார்த்திகை மாதங்களில் இந்தப் பூக்கள் அகல் விளக்குப் போலப் பூப்பதால் கார்த்திகை விளக்கிற்கு ஒப்பிட்டுக் ‘கார்த்திகைப்பூ’ என்றும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளது. காந்தளில் இரண்டு இனங்கள் காணப்படுகின்றன. காந்தள் பொதுவாக இளஞ்சிவப்பு நிறத்தில் அமைந்திருககும். மிகுந்த சிவப்பாக உள்ள காந்தள் பூ ‘தோன்றிப்பூ’ என்றும் ‘கோடல்’ என்றும் ‘வெண்காந்தள்’ என்றும் கூறப்பெறும். இப்பூக்கள் குலை குலையாகப் பூத்திருக்கும், நல்ல மணமும் உண்டு. இச்செய்தியை,

**“நறுந்தண் சிலம்பின் நாறு குலைக் காந்தள்”** **(ஐங்-226)**

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் தெளிவுபடுத்துகிறது. காந்தட்கொடி குறிஞ்சி நில மக்கள் வீடுகளின் வேலியோரங்களிலும், பாதையோரங்களிலும் வளர்ந்து காணப்படும். **“காந்தளம் சிறுகுடி”**[116] என்று ஊரினைச் சிறப்பித்துக் கூறியுள்ளனா். இது கார்காலத்தில் நள்ளிரவில் அதிகமாக மொட்டுக்கள் மலரும். விளக்கைப் போன்று காட்சியளிக்கும். இதனை,

**“பல்வயின்**

**தோன்றி தோன்றுபு புதல்விளக்கு உருஅ”** **(நற்-69)**

என்ற நற்றிணைப் பாடல் வழியும்,

**"நறுவீ முல்லையோடு தோன்றி தோன்ற**

**வெறியேன் றன்றே வீ கமழ் கானம்"** **(அகநா.369)**

**"துன்னருங் காரிருள் திருமணி உமிழ்ந்த நாகம்**

**காந்தள் கொழுமடற் புதுப்பூ ஊதும் தும்பி**

**நீள்நிறம் மருளும் அருவிடர்"** **(அகநா.138)**

என்னும் அகநானூற்றுப் பாடல்களிலும் காணமுடிகின்றன. காந்தளின் தண்டு மெல்லியதாகவும், இலைகள் ஒள்ளிய நெய்ப்புடனும் அழகாக இருக்கும். இதன் இலைகளின் நுனியில் மெல்லிய கம்பிகள் வேலியோர பிற மரச் செடிகளைத் தழுவி பற்றிக் கொள்ள உதவுகின்றன. ஒரே பூவில் காணப்படும் மாறுபட்ட நிறங்கள் கண்களை ஈர்க்கும். காந்தள் பூ மொட்டாக இருக்கும் போது குவிந்து நீண்டிருக்கும். பூவில் ஆறு அழகிய இதழ்கள் பிரிவுகளோடு இருக்கும். பூக்கும் போது இவ்விதழ்கள் இளம்பச்சை நிறமாகவும், பின்னர் மஞ்சளாகவும், கிச்சிலி நிறமாகவும் இறுதியில் சிவப்பு கருஞ் சிவப்பாகவும் (Crimson) மாறுவது வியப்பளிக்கிறது. இதழ்களின் அடிப்பகுதியில் ஒரு நிறமாகவும், நடுப்பகுதியில் வேறு நிறமாகவும் காணப்படுவது இப்பூவின் தனித்தன்மையாகும். காந்தள் பூ கைவிரலுக்கு உவமையாகச் சொல்லப்படுகிறது. புறநானூற்றில் இதனை,

**"காந்தள் முகை புரைவிரல்"**[117]

எனக் காந்தள் முகையினை விரலுக்கு ஒப்புமையாக்கிக் கூறப்பட்டுள்ளது. நுனி சிவந்துள்ள காந்தள் மொட்டு விரியும் போது இரத்தம் தோய்ந்த யானைத் தந்தம் போன்ற காட்சியுடையதாகத் தோன்றுகிறது. இதனை,

**"கொன்ற யானைக் கோடு கண்டன்ன**

**பாம்புடைக் கொடுமுகை அவிழ்ந்த காந்தள்"** **(நற்-294)**

என்று நற்றிணை விரிந்துக்கூறுகிறது. இதன் இதழ்கள் நீண்டு இருப்பதால் மலர்ந்த மலர், கை விரித்தது போல் தோற்றமளிக்கிறது. காந்தள் மலரின் இதழ்கள் உடைந்த வளையல் துண்டுகள் போலவும், துடுப்பினைப் போலவும் தோற்றம் அளிக்கின்றன.

**"கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்"**[118]

**“செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்”**[119]

**“காந்தளந் துடிப்பின் கவிகுலை”**[120]

**“வனை உடைந்தன்ன வள்ளிதழ்க் காந்தள்”**[121]

எனச் செங்காந்தள் பூவைத் ‘தோன்றிப்பூ’ என்றும் ‘குருதிப்பூ’என்றும் இலக்கியங்களில் கையாளப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**“தோடார் தோன்றிகுருதி பூப்ப”**[122]

என்று முல்லைப் பாட்டு தோன்றி மலர் குருதி போலப் பூத்திருப்பதாகக் கூறகிறது. வெண்காந்தள் (கோடல்) மலரில் மெல்லிய கோடுகள் காணப்படுவதால் இதனை,

**“விரிவென் கோடல் விளங்குருலை வான்பூ” (அகநா.264)**

என்ற அகநானூற்றுப் பாடல் தெளிவுபடுத்துகின்றது.

**“பல் துடுப்பு எடுத்த அலங்குலைக் காந்தள்” (அகநா.78)**

**“காந்தள் கமழ்குலை அவிழ்ந்த நயவருஞ் சாரல்” (அகநா.108)**

என அகநாநூற்றிலும்

**“அகல் இலைக் காந்தள் அலங்கு குலைப் பாய்ந்து” (நற்-185)**

என்று நற்றிணையிலும் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள பல மலர்களில் காந்தள்பூ முதன்மையானது. இதனுடன் கோடல், தோன்றி எனும் இரு மலர்களும் ஒப்ப வைத்து எண்ணப்பட்டுள்ளன. இம்மூன்றும் தீச்சுடர் போன்ற செம்மை நிறம் உடையன. ஒரே மாதிரியான வாழிடங்களைப் பெற்றவை. தலை கவிழ்ந்து பெரிய இதழ் விரிந்த காந்தள் மலரை மலைச்சாரலில் காண முடிகிறது.

**“மலர்கவிந்து**

**மாமட லவிழந்த காந்தளஞ் சாரலின்” (நற்-14)**

என்றும் கூறப்பட்டுள்ளது. பாலை நிலத்தில் கோடை காலத்தில் காய்ந்து வாடிய காந்தளைக் காட்சிப்படுத்துகிறது

**“காந்தள் அம் கொழுமுகை காவல் செல்லாது**

**வண்டுவாய் திறக்கும்”** **(குறுந்-265)**

என்ற குறுந்தொகைப் பாடல் காந்தள் கொடியின் தண்டு பசுமையானது, வலுவில்லாதது என்கிறது. இக்கொடி 10 முதல் 20 அடி வரை கிளை விட்டுப் படரும். ஆண்டு தோறும் புதிய கொடிகள் நிலத்துனுள்ளே இருக்கும் கிழங்கிலிருந்து வளரும் என்பதை அறியமுடிகிறது.

**குருக்கத்தி**

குருகு என்பது தற்காலத்தில் குருக்கத்தி என்று அழைக்கப்படுகிறது. ‘மாதவிக் கொடி’ என்று கூறுவர். ‘மாதவி’ என்ற வடமொழிப் பெயராலும் கூறுகின்றனர். குருகு பசுமையான அழகிய பெரிய கொடியில் நறுமணமுள்ள பூக்களைப் பூத்துக் குலுங்கும். இது பஞ்சு போன்ற துய்யினை அகத்தே கொண்டு அழகாகத் தோற்றமளிப்பதை,

**“மதனின் துய்த்தலை**

**இதழ் பைங் குருக்கத்தி”** **(நற்-97)**

என்று நற்றிணை எடுத்துக் கூறுகிறது. நறுமணமுள்ள கொடியைப் பந்தலில் ஏற்றி வளர்த்ததைச் சிலப்பதிகாரம்

**“வெயினுழை பறியா குயில்நுழை பொதும்பர்**

**குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடி**

**பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ”**[123]

**“மாதவியென்றோர்**

**பாசிலைக் குருகின் பந்தரிங் பொருந்தி”**[124]

என்கிறது. “குருக்கத்தி மிக நீண்ட கொடி என்பதை ‘நெடுங்கொடி’ என்பது சுட்டுகிறது. இது காஞ்சி மரத்தைச் சுற்றி ஏறுவதைப் பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கிறது. இதன் கொடி தடித்துக் காணப்படுவதால் ‘கொழுங்கொடி’ என்று”[125] இரா. இராமகிருட்டிணன் குறிப்பிட்டுள்ளார். குருக்கத்தியின் பூக்கள் நீண்ட கொத்துக்களில் தொங்கும். இந்தப் பூக்கள் நிறைய கொத்தாகப் பூப்பதைப் பற்றி,

**“கோதை மாதவி சண்பகப் பொதும்பர்**

**கோதை மாதவி கொழுங்கொடி யெடுப்பக்**

**காவு கானமுங் கடிமல ரேத்த”**[126]

என நச்சினாக்கினியர் பசிய குருக்கத்திப்பூ என்று கூறுகிறார். குருக்கத்திக் கொடியைப் பிற நறுமணமுள்ள செடி, கொடிகளோடு தோட்டங்களிலும், பூஞ்சோலைகளிலும் வளர்த்துள்ளனர். பாண்டியனின் வையை ஆறு கஞ்சங்குல்லை, மகிழம், குருக்கத்தி, பாதிரி போன்ற பல்வேறு மலர்களைச் சுமந்து கொண்டு வருவதை,

**“குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி**

**எல்லாம் கமரும் இருசார் துரைகவிழ”**[127]

என்று பரிபாடல் கூறுகிறது. குருக்கத்திப் பூவைப் பித்திகையிடன் சேர்த்துக் கட்டி மகளிர் விற்பனை செய்துள்ளதை அறிய முடிந்தது. இலக்கியத்தில் கூறப்பட்டிருந்தாலும் இப்பூக்கள் இன்று அரிதான பூக்களாகவே உள்ளன.

**குளவி**

முல்லை இனங்களில் ஒன்றான குளவி மலரைத் தற்போது பன்னீர்ப் பூ அல்லது மரமல்லிகைப்பூ என்று அழைக்கின்றனர். இதனை, மலை மல்லிகைப்பூ, காட்டு மல்லிகை என்று நச்சினார்கினியர் குறிப்பிடுகிறார். இதனை **“பெருந்தண் குளவி”** என்று நற்றிணைக் (51) குறிப்பிடுகிறது. கார்காலத்தில் முதல் மழை பெய்தவுடனேயே அரும்பு விட்டுப் புதர் புதராக வெள்ளை வெளேரெனப் பூத்துக் குலுங்கும். இது மலைச் சாரல்களில் அதிகமாக வளர்ந்திருக்கும். மலை நாட்டு மக்களின் வீடுகளின் முற்றங்களிலும் வளர்ந்து காணப்படும்.

மணம் மிகுந்த மலர் என்பதால் இதனைக் ‘கமழும் குளவி’என்று அடைமொழியுடன் அழைப்பர். **“கூதளம் கவினிய குளவி முன்றில்”**[128] என்ற புறப்பாடல் அடி முன்றிலில் குளவி படர்ந்திருப்பதைத் எடுத்துக்கூறுகிறது. குளவியின் தளிர்களையும், பூக்களையும் குரங்குகள் விரும்பி உண்பதை ஐங்குறுநூற்றுப் பாடல் (299) எடுத்துக்கூறுகிறது. வரகு வைக்கோலால் வேயப்பட்ட குடிசையின் மேல் மணம் உள்ள காட்டு மல்லிகை படர்ந்திருப்பதை,

**“ஏனல் உழவர் வரகுமீது இட்ட காண்மிகு குளவியே”** **(பதிற்-30)**

என்று பதிற்றுப்பத்து பாடுகிறது. குறிஞ்சி நிலத் தலைவன் முல்லை, காட்டு, மல்லிகை, கூதாளி, குவளை ஆகிய மலர்களால் புனைந்த மிகக் குளிர்ந்த மாலையை உடையவன் என்பதை,

**“குல்லை குளவி கூதனம் குவளை**

**இல்லமொடு மிடைந்த ஈர்ந்தன் கண்ணியன்”** **(நற்-376)**

என்ற பாடலும், குவளை மலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகையின் மணம் வீசுகின்ற தலைவியின் நெற்றி என்பதைக், **“குவளையொடு பொதிந்த குளவி நாறு நறுநுதல்”**[129] என்ற குறுந்தொகைப் பாடலும் சுட்டுகின்றன.

முல்லையும் குறிஞ்சியும் மோதுவது போல ஒரு பாடல் இடம் பெற்றுள்ளது. முல்லை நிலத்தில் காளையும் குறிஞ்சியாகிய மலை நில எருதும் ஒன்றோடு ஒன்றாக புண் உண்டாகும் படித்தாக்கின. அதனைப்போல வலிமையான இதழையுடைய காட்டு மல்லிகை மலரைச் சூடிய முல்லை நிலக் கோவலரும் குறிஞ்சி மலர் சூடிய குறவரும் தத்தம் தலையில் சூடிய மலர்கள் வாடும்படி காளையையும் விடையையும் மோதவிட்டுப் பார்த்தனர். உண்டான ஆராவரத்தைக் கூத்தர் கேட்டனர் என்பதை,

**“இதழ்க் குளவியும் குறிஞ்சியும் குழைய**

**நல்ஏறு பொருஉம் கல் என் கம்பலை”**[130]

என்று மலைபடுகடாம் எடுத்துக்காட்டுகிறது. மணங்கமழும் குளவி பூத்த குன்றுகள் பலவற்றைக் கடந்து வந்து அவனிடத்தே தங்கியது பதிற்றுப்பத்தும் (12), தலைவனது மலைநாட்டில் பெரிய குளிர்ச்சியுடைய குளவியைக் களிறு குழைய மிதித்தது என்பதை நற்றிணை (51) ஆவது பாடலும் விளக்குகின்றன. கொல்லி மலையிலுள்ள சிறுபசுங் குளவியின் மணம் செவ்விதிற் கமழும் கூந்தலையுடையவள் தலைவி என நற்றிணை (346) ஆவது பாடல் சுட்டுகிறது.

**தளவம்**

தளவம் முல்லை இனத்தைச் சார்ந்த பூவாகும். சங்க காலத்தில் தளவம் என்னும் பெயரால் குறிப்பிட்ட பூவை இக்காலத்தில் சாதி மல்லிகை என்று

அழைக்கிறோம். நச்சினார்க்கினியர் இதனைச் செம்முல்லைப் பூ என்று குறிப்பிடுகிறார். மலைச் சாரல்களிலும் பாறையின் மேலும் படர்ந்து காணப்படுவதுடன் கார்காலத்தில் மாலை நேரத்தில் மிகுதியகாக மலர்ந்து நிற்கும். மணம்மிக்க மலரின் நுனி மீன் கொத்திப் பறவையின் அலகைப் போன்று சிறிது சிவப்பாகவும் கூர்மையாகவும் இருக்கும். இதனை,

**"பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"**[131]

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. தளவம் மலரின் மொட்டுகள் பூவிதழின் புறத்தோற்றம் சிவப்பாகக் காணப்படும். மொட்டு செந்நிறமாக இருப்பதால் இதனைச் செம்முல்லை என்றும் கூறுவர். மலர்ந்ததும் ஒவ்வொரு பூவிதழின் அகத்தோற்றமும் வெண்மையாக இருக்கும். இவ்வாறு பூவிதழின் தளம் மாறுவதால் தளவம் என்றும் அழைக்கப்படுகிறது.

சங்க இலக்கியப் பாடல்களில் 'தளவ முல்லை' என்றும் 'அவிழ் தளவின் அகன் தோன்றி, நகுமுல்லை' என்றும் 'புதலிவர் தளவம் பூங்கொடி அவிழ்ப' என்றும் காணப்படுகிறது. தளவ மலர் கொடியில் பூக்கும். பதினெண் கீழ்க்கணக்கு, இரட்டைக் காப்பியங்களிலும் தளவம் பூ பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. புதரின் மீது படர்ந்த செம்முல்லையின் சிவல் முள்ளைப் போன்ற சிவந்தஅரும்புகள் என்பதை,

**"புதல் மிகைத் தளவின் இதன்முட் செந்தனை" (அகநா.23)**

என்ற அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. மிகுந்த மழை பொழிந்தது. பாறையின் பக்கத்தில் இச்சிலிப் பறவையின் வாய்போன்ற அரும்பைக் கொண்ட தளவம் மலர்ந்ததை, உழவர்கள் காட்டில் புதரில் மலர்ந்துள்ள தளவம் பூவைச் சூடியதைப் புறப்பாடலால் அறிய முடிகிறது.

**பகன்றை**

இது ஒரு கொடி வகையாகும். இதனை நச்சினார்க்கினியர் 'சிவதை' என்று கூறுகிறார். பகன்றை என்பது **"பெருங்கையால்"**[132] என்னும் கொடியென்பர் அடியார்க்கு நல்லார். பகன்றை மலர் வெண்மையான இதழ்களையும் பகலில் தோன்றும் திங்கள் போலும் உருவத்தினையும் உடையது. முன்பனிக் காலத்தில்

வேல் போல விரிந்த மேல் கதுப்பாகிய தோலை உடைய பகன்றை வெள்ளி வட்டிலைப் போல மலர்வதை,

**"வேல்என விரிந்த கதுப்பின் தோல**

**பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்"** **(நற்-86)**

எனும் நற்றிணைப் பாடலடிகள் எடுத்தியம்புகின்றன. பகன்றை பனிக்காலத்தில் மலர்வது, அகன்ற இலையைக் கொண்டது, பெரிய பூக்களைக் கொண்டது தேன் மிகுதியாக உடையதுமாகும். இதன் மணம் கள்ளின் மணம் போன்று இருப்பதால் இல்லத்தார் விரும்பிச் சூடுவதில்லை. புலைத்தி நீரில் தோய்த்து, வெளுத்துப் பசையிட்ட ஆடை போல, வெண்ணிறமாய்க் காட்சியளிக்கும். இம்மலர்கள் வயலிலும், பசுமையான புதரிலும் மலரும். ஞாயிறு மறையும் மாலைக் காலத்தில் விரிந்து மலரும் என்பதை,

**"இறங்குபோது அவிழ்ந்த ஈம்புதல் பகன்றை"** **(அகநா. 243)**

என்று அகநானூறு சுட்டுகிறது. குளிர்ச்சியுள்ள துறையில் பூக்கும் பகன்றைப் பூவாலாகிய மாலையைச் சலவை செய்த ஆடையைப் போல அணிவதை,

**"பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்**

**கழுவுறு கலிங்கம் கடுப்ப சூடி"** **(பதிற்று-76)**

என்று பதிற்றுப்பத்து எடுத்துக்காட்டுகிறது. பகன்றையின் வெண்ணிறப் பூக்கள் பனி நீரால் நிறைந்தமை போன்றும், பால்நிரம்ப ஊற்றப் பெற்ற கிண்ணம் போன்றும் தோற்றமளிப்பதைப் போலவும் இருக்கும். இதனை,

**"பகன்றை வால்மலர் பனி நிறைந்ததுபோல்**

**பால்பெய் வள்ளம்"** **(அகநா.219)**

என்று கூறுகிறது. அரும்பு மலர்ந்த பகன்றையின் புதுப்பூப் போன்ற அகல மடிக்கப்பட்ட ஆடை என்பதை,

**"போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன**

**அகன்றுபடி கலிங்கம்"**[133]

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. கூர்மையான அரத்தால் அறுத்தெடுத்த வளைகள் போக எஞ்சிய சங்கினது நுனிப்பகுதி போன்று வலப்பக்கம் சுரிந்த முகத்தினை உடைய பகன்றை மலரின் அருப்புகள் இருப்பதை,

**"…………….. ……………வாளரத்துமித்த**

**வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன,**

**தளைபிணி அவிழா, கரிமுகப் பகன்றை"**[134]

என்று அகநானூறு சுட்டுகிறது. நீருண்ணு துறை அழகு பெறும்படி, புதலொடு வந்து தாழ்ந்து கிடந்தது பகன்றைப் பூ, அதனைச் சேர்த்தார் போன்று பசிய இலையினை உடைய தாமரை மொட்டு உள்ளதை,

**"பகன்றைப்பூ உற நீண்ட பாசடைத் தாமரை"**[135]

என்று கலித்தொகைப் பாடலால் அறியமுடிகிறது. கள் விற்க பெண்டிர் போகும் பொழுது பகன்றைப் பூ மாலையைத் தலையில் சூடுவதை,

**"பகன்றைக் கண்ணி பழையர் மகளிர்"**[136]

என்று மலைபடுகடாம் எடுத்துக்காட்டுகிறது. வெண்மையான பூவைக் கொண்டிருக்கும். பின்பனியாகிய, தைமாதத் தூற்றலில் மலரும் இப்பூவின் அரும்பு சங்கின் நுனிபோன்று இருக்கும். அரும்புகள் முறுக்கிப் பிழிந்த துணித் திரிபோல் காணப்படும். இப்பூக்கள் வேல் போன்றும், வெள்ளி வட்டில் போலும் பூக்கும் எனக் சுட்டப்படுகிறது.

**பீர்க்கு**

பீர்க்கம் பூ என நச்சினார்க்கினியர் கூறுகிறார். பீரை, பீரம், பீர், பீர்க்கு என்றும் கூறப்படுகிறது. வேலியோரங்களிலும், மரங்களிலும் படர்ந்து வளர்வதாகும். இதன் மலர் பொன் போன்ற நிறத்தை உடையது. வாடைக் காலத்தில் இது மலரும்,

**"நுண்முள் வேலித் தாதொடு பொதுளிய**

**தாறு படு பீரம்"** **(நற்-277)**

என்பது வேலியோரங்களில் மலரும் பூ என்பதை எடுத்துக்கூறுகிறது.

**"………………………….. பொன்என**

**இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்**

**அற்சிரம்''** (ஐங்-464)

என்ற அடிகள் அதன் நிறத்தையும், காலத்தையும் காட்டுகின்றன. பொன் போன்ற நிறத்தை உடைய பூக்கள் பூத்து இருப்பதைப் **''பொன் போல் பீரமொடு, புதல் புதல் மலர''**[137] என்னும் அடி சுட்டுகிறது. நீர் ஒழுகுகின்ற பசுமையான புதரைப் பற்றுக் கோடாகக் கொண்டு படர்ந்து தழைத்த, மழைக் காலத்தில் மலரும் பீர்க்கின் மலர்கள் என்பதை,

**''நீர்வார் பைம்புதற் கலித்த மாரிப் பீரத்து''**[138]

என்ற பாடலடி காட்டுகின்றது. தலைவியின் நெற்றி தனக்குரிய நிறத்தை இழந்து படர்கின்ற பீர்க்கங் கொடியின் மலர் போல நிறம் கொண்ட பசலையைப் பெற்றது. இதனை நற்றிணை,

**''நுதலே, பீர் இவர் மலரின் பசப்பு ஊர்ந்தன்றே''** (நற்-197)

என்றும், பொன் அணிகளால் அழகு பெற வேண்டிய தோள்கள் கழன்று வீழப் பொன்னிறம் உடைய பீர்க்கமலர் போன்ற பசலையைத் தோற்றுவித்ததை ஐங்குறுநூறு,

**''மென்தோர் ஆய்கவின் மறைய**

**பொன்புனை பீர்த்து அலர் செய்தன்றே''**[139]

என்றும் ஐங்குறுநூறும் காட்டுகிறது. இது வீடுகளிலும், தோட்டங்களிலும் எல்லாப் பருவத்திலும் பயிர் செய்யப்படுகிறது. புதர் மேல் படரும் தன்மை கொண்டதாகும். மஞ்சள் நிறத்தில் பூங்கொத்துக்களையும், பூக்களையும் கொண்டுள்ளது.

**முண்டகம்**

நீல நிறமுடைய மலர் கடற்கரைக் கழிகளில் மிகுதியாக மலர்ந்திருக்கும். 'கழிமுள்ளி', 'நீர்முள்ளி' என்றும் கூறுவர். நீல நிறத்துடன் விளங்கும் இம்மலரின் பின்புறம் முட்கள் இருப்பதால் முண்டகம் எனப் பெயர் பெற்றது. இம்மலர் வயல்வெளிகளிலும் காணப்படும். சேறு நிறைந்த கழிகளில் இம்மலர் அதிகமாகப் பூக்கும். இதனை,

**“முண்டகம் தாஅய் சேறு புலர்ந்து**

**இருங்கழிச் சேறு”** **(நற்-311)**

என்ற அடிகள் குறிக்கின்றன. இதன் இதழ்கள் நீண்டு வளைந்து காணப்படும். இதனை,

**“முட்சினை**

**முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்**

**கொடுங்கால் மாமலர்”**[140]

என்றும்,

**“மணிப்பூ முண்டகத்து மணல் மலிகானல்”**[141]

என்றும் கூறுகின்றனர். முண்டக மலருக்கு மணமும் உண்டு. பூவின் காம்பின் மேல்பகுதி வெண்மை நிறமாக இருக்கும்.

**“மீன் முள்ளன்ன வெண்கால் மாமலர்”**[142]

என்றும் அறியப்படுகிறது. இதனை முள்ளிச் செடி எனவும் கூறுகிறனர். இது கடற்கரையில் சிவந்த காம்பில் நீலமணி போன்ற வளமையான பேரரும்பைக் கொண்டிருக்கும், நல்ல மணமிக்கதாகவும் காணப்படுகிறது. இப்பூவைத் தலைமாலையாக்கிச் சூடுவர்.

**முல்லை**

திணை நோக்கில் முல்லை மலர் காரணமாகவே காடும் காடு சார்ந்த நிலமாகிய நிலம் ‘முல்லை’ எனப் பெயர் பெற்றது. ஆவணி புரட்டாசித் திங்களில் கார்ப்பருவத்தில் மாலைப்பொழுதில் முல்லைப் பூ நிரம்ப மலரும் என்பதையும், முல்லைப் பூவுக்கு அடுத்த நிலையில் இப்பருவத்தில் பீர்க்கம் பூவும், கொன்றைப் பூவும் சிறப்பாக மலரும் என்றும் இலக்கியங்களில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. முல்லை, காட்டுப் புறங்களில் வளரும் கொடி. இதனை,

**“முல்லை அரும்புவாய் அவிழும் பெரும்புன் மாலை”** **(நற்-369)**

என நற்றிணைப் பாடல் கூறுகின்றது. மேலும்,

**“கோடல் எதிர் முகைப் பசுவீ”**[143]

**“புறவில் பாசிலை முல்லை ஆசுஇல் வான்பூ”**[144]

**“சிறுவீ முல்லைக் கொம்பின் தாஅய்”**[145]

**“இருவிசேர் மருங்கிங் பூத்த முல்லை”**[146]

என முல்லையைப் பற்றி குறுந்தொகைப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. முல்லைச் செடியின் கிளைகள் மென்மையாக இருக்கும். முல்லைப்பூவை, ‘பசுவீமுல்லை’, ‘சிறுவெண்முகை’, ‘சிறுவீமுல்லை’ என்றும் கூறுவர். தமிழர் வாழ்வியலில் சிறப்பான மங்கல மலராகவும் காணப்படுகிறது. வெண்முல்லை, செம்முல்லை என்னும் இருவகை உண்டு. எனினும் வெண்முல்லையே அதிகமாக உள்ளது. முல்லை மலரினைத் தளவம், சாதிமுல்லை, பிச்சி என்றும் ஊசி முல்லையைத் தளவு, மாகதி, நைதிகை என்றும் கூறுவர். தலைவன் செயல் முடிந்து கார்காலத்தில் வருவேன் எனக் கூறிச் சென்றவன் வரவில்லை, தலைவி வருந்துகிறாள். இதனை,

**“............... பூங்கொடி முல்லைத்**

**தொகுமுகை இலங்கு எயிறு ஆக**

**நகுமே- தோழி! - நறுந்தண் காரே”** **(குறுந்-162)**

என்ற அடிகள் சுட்டுகின்றன. முல்லைப் பூ தொகுத்துக் காணப்படும் என்ற பொருளில் ‘தொகுமுகை’ என்றும் கூறுவர். ‘குறுமுகை’ என்பது முகைத்தல், முகை முற்றல், முகையவிழ்தல் என்று மூன்று பருவங்களில் எழுத்தாளப் பட்டுள்ளது. முல்லை அழகு நங்கையின் பற்கள் போல இருப்பதால் அவர்களின் புன்னகையையும் கார்பருவ முல்லை நகை காட்டி நிற்பதைப் புலவர்கன் அழகுறப் புலபப்டுத்தியுள்ளனர்.

**“முல்லை இலங் கெயிறுஈன நறுந்தண்கார்**

**மெல்ல இனிய நகும்”** **(கார்நாற்-14)**

என்பதில் தலைவியைப் பிரிந்த தலைவன் தான் மேற்கொண்ட செயல் முடிந்து மீள்கிறான், வரும் வழியே அரும்பியிருந்த முல்லைக் கொடியைப் பார்த்து,நீ

தனித்திருப் போரை நோக்கி அரும்பால் எள்ளி நகையாடுதல் அழகா? தகுமா? என்று வினவுவதாக,

**“முல்லை வாழியோ, முல்லை!- நீருன்**

**சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை**

**நடுவை போலக் காட்டல்**

**தகுமோ மற்று - இது தமியோர் மாட்டே!” (குறுந்-162)**

என்ற பாடல் அமைந்துள்ளது. காட்டிலுள்ள ஒரு புதரில் பூத்த முல்லைப் பூக்கள் யானை முகத்தில் உள்ள வரிகளும் புள்ளிகளும் போல தோன்றுவதை,

**“சிறுவீமுல்லை தேம்கமழ் பசுவீ,**

**பொறிவரி நன்மண் புகா முகம் கடுப்ப,**

**தண்புதல் அனிபெற மலர்” (நற்-248)**

என்று குறிப்பிடுகிறது. முல்லைக் கொடி அரும்பு ஈன்று பூத்தக் காட்சியானது காட்டுப் பூனை சிரித்தது போன்றிருந்தது என்று குறுந்தொகை பாடல் (220) குறிப்பிடுகிறது. பூனைக் குட்டியின் பல்லைப் போன்று பசிய இலைகளுக்கிடையே முல்லையின் அரும்பு மலரும் என்றும், வெண்மையான பூக்களைக் கொண்ட முல்லையை வேலியாகக் கொண்டது கோடைமலை என்றும் புறம் (117) குறிப்பிடுகிறது. மலருக்குரிய பல பெயர்களில் முல்லை மலரைக் குறிப்பிடும் போது ‘முல்லை வீ’ எனக் குறிப்பிடுவதை

**“வண்பெயற்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை**

**வீகமழ் நெடுவழி”**[147]

**“முல்லை வீ கழல்தாஅய், வல்லோன்**

**செய்கை அன்ன செந்நிலப் புறவு”**[148]

என்ற பாடல் வழியே அறியலாம். வண்டுகள் அப்பூக்களின் தேனைப் பருகுவதை,

**“கானமா முல்லைக் கழைக் கரும்பேறி வெண்குறுவல்**

**செய்து அலர்கின்ற தேனின் வாய் மலர்முருகு”**[149]

என்று சுட்டுகிறது. ஒல்லையூர் நாட்டு வள்ளல் சாத்தன் இறந்ததால் அவ்வூர் மக்கள் சாத்தன் பிரிவுக்கு வருந்தி முல்லை மலரையும் வெறுத்தனர். இதனை,

**“இளையோர் சூடார், வளையோர் கொய்யார்:**

**…………. பாணன் சூடான்: பாடினி அணியாள்:**

**………… வலவேற் சாத்தன் மாய்ந்த பின்றை**

**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே?”** **(புறநா.242)**

என்று ஆற்றாது கூறியுள்ளார். சாத்தன் இறந்ததால் பகைவர் அகம் மலர்வர்: ஆனால் முல்லையே நீ ஏன் மலர்ந்தாய் என்று கேட்பதாக இப்பாடல் அடிகள் அமைந்துள்ளன. கார்காலத்தில் அரும்புகள் கூர்மையாகச் சந்தன நிறத்தில் மணமிக்கதாகப் பூக்கும். இது மாலை நேரத்தில் மலரும். கற்பொழுக்கத்திற்குச் சிறந்த பூவாகச் சுட்டுகின்றனர்.

**மௌவல்**

முல்லை வகைகளில் ஓர் இனம் மௌவல். முல்லை போன்று மணமிகுந்த வெண்ணிற மலர். இதன் மொட்டு வெண்மை நிறத்துடன் கூரியதாகக் காணப்படும். கார்காலத்தில் மலரும், வீடுகளில் மிகுதியாகப் படர்ந்திருக்கும், நொச்சி மரத்திலும் படர்ந்திருக்கும். இதனை,

**“மனை நடு மௌவல்”** **(நற்-115)**

**“மனைய தாழ்வின் நொச்சி சூழ்வன**

**மலரும் மௌவல்”** **(அகநா.23)**

**“மௌவலொடு மலர்ந்த மாக்குரல் நொச்சி”** **(அகநா.117)**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. இதற்கு மகளிரின் வெண்பற்களை உவமையாகக் கூறியுள்ளனர்.

**“மாதரார் முறுவல் போல் மணமௌவல் முகை யூழ்ப்ப”** **(கலித்-27)**

என்று கலித்தொகை சுட்டுகின்றது. பெண்களின் பற்களை இக்காலத்தில் ‘அரிசிப்பல்’ எனப் பாராட்டுவர். இதனைச் சங்கப்பாடல் **“மணமௌவல் முகை அன்ன மாவீழ்வார் நிரை வெண்பல்”(கலி-14)** என்று மௌவலோடு ஒப்பிடுகிறது.

வீட்டுத் தோட்டத்திலுள்ள மரத்தின் மீது படர்ந்த மௌவல் மலரின் மணம் வீசும் கரிய கூந்தல் என்பதை,

**"மனை மரத்து**

**எல்லுறும் மௌவல் நாறும்**

**பல் இருங் கூந்தல்"** **(குறுந்-19)**

என்று குறுந்தொகை அடிகள் கூறுகின்றன.

**"மான் கறி கற்ற கூழைமௌவல் சூழ் மயிலைப்**

**பந்தர்"** **(சீவக-485)**

என்ற பாடல் மௌவல் பற்றி எடுத்துரைக்கிறது.

**தமலாக் கொடி**

இவற்றை முசுண்டைக் கொடி என்று கூறுவர். இது வீட்டு முற்றங்களில் படர்ந்திருக்கும். கார் காலத்தில் தழைத்துப் பூத்துக் குலுங்கும். இதன் பூ வெள்ளிபோன்று காட்சியளிக்கும். தேன் எடுக்க மரத்தில் ஏறுபவர்கள் அக்கொடியைக் களைந்து சொல்லும் வகையில் பின்னிக் காணப்படும் என்பதை,

**"பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலந்**

**தீந்தேன் கொள்பவர்"** **(நற்-292)**

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது. இதன் மலர்கள் நடு இரவில் மலர்ந்து விரிந்து இருக்கும் காட்சி, வானத்தில் விண்மீன்கள் நிறைந்ததைப் போன்று தோன்றுவதை,

**"முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிய**

**பந்தர் வேண்டாம் பழந்தூங்கு நீழல்"**[150]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. முல்லைக் கொடியும் முசுண்டையும் கலந்து பந்தலைப் போல இருப்பதை,

**"சுரிமுகிழ் முசுண்டைப் பொதியவிழ் வான்பூ**

**விசும்பின் மீனிற் பசும் புதலளிய"** [151]

என்ற பாடல் புதர் போல் படர்ந்து மலர்ந்த முசுண்டையை, விண்மீன்களுடன் ஒப்பிட்டுக் காட்சிப்படுத்தியுள்ளது. பசிய நிறம் பொருந்திய இலைகளையுடைய நறிய முசுண்டைக் கொடிகள் மணமுடையதாகவும் இருக்கும்.

**நறவம்**

நறுமணக் கொடியில் மலரும் வெண்மை நிறப் பூக்களோடு வளைந்த அக இதழின் முதுகில் சிவப்பு வரிக்கோடுகள் காணப்படும். அதிக அளவில் மணம் வீசும், நறவம் பூ கொத்துக் கொத்தாய் பூக்கும். 'நறவம்' என்ற சொல் மலரிலுள்ள தேனை உணர்த்துகிறது. நறவு, நறாஅ, நறா என்னும் சொற்கள் ஒரு வகை கள்ளைக் குறிப்பிடுபவையாகும். போர்க்களம் செல்லும் படைவீரர்களுக்குத்'தீந்தண் நறவம்' கொடுத்தனர் என்பதில் 'நறவம்' என்னும் சொல்லும் கள்ளை உணர்த்துகிறது. அழகிய சங்கின் முதுகில் அரக்கைத் தீற்றினால் போல் சிவந்த வலி பொருந்திய இதழை உடையதும், நெடுந்தூரம் மணங்கமழும் நறவம்பூ என்பதையும்,

**"அவ்வளை வெரிநி ரைக்கீர்த் தன்ன**
**செவ்வரி யிதழ் சேணாது நறவின்"** **(நற்-25)**

என்று மணக்கும் நறவம்பூ குறித்து நற்றிணை வழி அறிய இயலும். சேங்காரி எருது ஒன்று தன்னை அடக்க வந்தவரைக் குத்திக் கொன்றது. அதன் கழுத்தில் இருந்த மணி குருதியோடு பொருந்தி நறவம் பூப்போலத் தோன்றியதையும் அதன் மேல் வண்டுகள் வந்து படிந்ததையும்,

**"பாடு ஏற்றவரைப் படக்குத்தி செங்களரிக்**
**கோடுஎழுந்து ஆடும் கணமணி காணிகா**
**நுகைசால் அவிழ்பதம் நோக்கி நறவின்**
**முகைசூழும் தும்பி போன்ம்"**[152]

என்று கலித்தொகைப் பாடலடிகள் சுட்டுகின்றன. முறுக்கு அவிழ்ந்த மகளிரின் கண்ணைப் போன்ற நெய்தல் பூ, தேன் பொருந்திய நறவம் பூவோடு சேர்ந்து அரசரும், பிறரும் ஒன்று கூடிய பந்தர் முழுவதும் மணம் வீசியதை,

**“வண்பிணி அவிழ்ந்த கண்போல் நெய்தல்**

**நனைஉறு நறவின் நாடுடன் கமழ”**[153]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் அடிகள் கூறுகின்றன. முறுக்கு நெகிழ்ந்த முல்லைப் பூ, நறவம் பூ, கருநீல மலர், அல்லிப்பூ போன்ற பூக்கள் எல்லாம் சேர்த்துக் கட்டிய பூமாலையைச் சங்காலத்தில் மக்கள் சூட்டினர் என்பதை,

**“அரிநீர் அவிழ்நீலம், அல்லி, அனிச்சம்**

**புரிநெகிழ் முல்லை, நறவோடு வுமைந்த**

**தேரிமலர்க் கண்ணி”**[154]

என்ற கலித்தொகைப் பாடல் அடிகள் உணர்த்துகின்றன. குளத்தில் பூத்த நெய்தல் மலரையும், அரும்பு மணம் பரவுவதற்குக் காரணமான மலர்ச்சியினால் கண்டோர் விரும்பும் நறவ மலரின் இதழையும் ஒத்த தலைவியின் மையுண்ட கண்கள் என்பதாகக் கூறப்படுகிறது. இதனை,

**“கய வாய நெய்தல் அலர், கமழ்முகை மண நகை**

**நய வரு நறவு இதழ், மதர் உண்கண்”**[155]

என்று பரிபாடல் உணர்த்துகிறது. தலைவியின் கண்கள் குவளை மலரின் கரிய இதழ்களைப் போல நீர் ததும்புகின்ற கரிய இமைகளைக் கொண்டுள்ளதும், தலைவனின் பிரிவால் நறவம் பூவின் சிவந்த இதழினைப் போன்றும் காட்சியளித்ததை,

**“நறவின், சேயிதழ் அனைய ஆகி,**

**குவளை மாஇதழ் புரையும் மவிர்கொள் ஈர்இனம்” (அகநா.19)**

என்ற அகநானூறு சுட்டுகிறது. மணம் உள்ள பூவைக் கொண்டதாகும். பெண்களின் கண்ணுக்கும், குழந்தையின் விரலுக்கும் இப்பூவிதழ்கள் உவமையாகக் கூறப்படுகிறது.

**சிறுமாரோடம்**

இம்மலர் நறுமோரோடம், பசுமோரோடம், சிறு மாரோடம் என்ற பெயர்களில் வழங்கப்படுகிறது. இதனைச் செங்கருங்காலிப் பூ என நச்சினார்க்கினியர்

கூறுகிறார். நறுமணம் கமழும் செங்கருங்காலியை மற்ற மலர்களோடு சேர்த்து மகளிர் பறித்ததை,

**“நறுமோரோடமொடு, உடன் எறிந்த அடைச்சிய”** **(நற்-337)**

என்ற நற்றிணைப் பாடலும், எருமைக் கடாக்கள் பொழிலில் மேய்ந்து உண்டமையால் பசிய மோரோடமும், ஆம்பலும் அழிந்ததை,

**“எருமைநல் ஏற்றினம்மேயல் அருந்தென**

**பசுமோரோடமோடு ஆம்பல் ஒல்லா”** **(ஐங்-93)**

என ஐங்குநூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றன. இவ்வகைப் பூக்கள் இலக்கியங்களில் காணப்பட்டாலும் அரிதான ஒன்றாகவே உள்ளது.

**வயலைக்கொடி**

வீடுகளில் முற்றத்தில் கொடியாக வளர்த்து வந்துள்ளனர். நீர் ஊற்றுவார் இல்லாமையால், தலைவி பாதுகாத்து வந்த வயலைக் கொடி வாடியதைப் பாலைதிணைப் பாடல் குறிப்பிடுகிறது. இதனை,

**“வரியணி பந்தும் வாரிய வயலையும்”** **(நற்-305)**

**“இல்லெழு வயலை ஈற்று ஆதின்றென்ப”** **(நற்-179)**

என்ற நற்றிணைப் பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன. இது கொடி வகையாகும். மணமிக்கதாகவும் திகழ்கின்றது.

**சுரிதகம்**

இப்பூக்கள் முன் பணிக் காலத்தில் பூக்கும். அழகு பொருந்திய கைத் தொழிலில் வல்ல கம்மியன் இழைத்த பொன்னாலாகிய சுரிதகம் என்னும் அணி போன்ற வடிவினவாகி பெரிய கோங்க மரத்தினது குவிந்த முகைகள் மலர இருப்பதை,

**“கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தகக்**

**கைவன் தையுபு சொரிந்த**

**சுரிதக உருவின் வாகிப் பெரிய**

**கோங்கங் குவி முகை அவிழ”** **(நற்-86)**

என நற்றிணைப் பாடல் கூறுகிறது. இதனைத் திருகுப்பூ என்றும் கூறுவர். திருகு போன்றதோர் அணிவகை அமைப்பில் இப்பூக்கள் காணப்படுகிறது.

**வெண்காந்தள்**

சங்க இலக்கியத்தில் காந்தளில் இரண்டு வகைகள் பல்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ளன. வெண்காந்தள் என்பது கோடல் என்றும் அழைக்கப்படுகிறது. செங்காந்தளும், கோடலும் தனித்தனியாகவே கூறப்படுகின்றன. காந்தளும், தோன்றியும் கோடலும் முதற்பெயல் பெய்த உடன் தழைத்து, அரும்பு விட்டுக் கார்காலத்தை வரவேற்பதாக உள்ளன.

**"காந்தள் வள்ளிதழ் கவிகுளம்பு அறுப்ப" (நற்-161)**

எனச் சாரல் மலர் தலைகவிழ்ந்து பெரிய இதழ் விரிந்த காந்தளையுடையது என்பர். முல்லைப் பாடலில் தோன்றியும், கோடலும் எடுத்தாளப்பெற்றுள்ளன.

**"கோடற்குவி முகை அங்கை அவிழ்த**

**தோடுஆர் தோன்றி குருதி பூப்ப"[156]**

**"காலங் கருதித் தோன்றிகை குலைப்பக்**

**….. கோடல் வளைந்த வள்ள ளுகுப்ப"[157]**

என்பது பாடலடிகள். முல்லைப்பாட்டிலும், கல்லாடத்திலும் தோன்றியும், கோடலும் தனித்தனி இனமாகவே குறிப்பிடப்படுகின்றன. தோன்றி - செங்காந்தள் என்றும், கோடலுக்கு - வெண்காந்தள் என்றும் பொருள். காந்தள் பூவில் காணப்படும் மஞ்சள், சிவப்பு நிறங்களின் அளவைப் பொறுத்தே பூக்களின் வகையைப் பிரித்தனர். மஞ்சள் அதிகமாகக் கலந்துள்ள பூக்கள் வெண்காந்தள் என்றும், சிவப்பு உள்ள பூக்கள் செங்காந்தள் என்றும் சுட்டப்பட்டுள்ளது.

**"கோடலங் கூர்முகை கோன் அரா நேக்கருத்த**

**காடெலாங் கார்செய்து முல்லை அரும்பீன்"[158]**

எனும் பாடலில் கார்காலத்தில் காந்தள் மலர்வது சுட்டப்படுகிறது. இவ்வடிகளில் வெண்காந்தளின் இதழ்கள் சங்கு உடைந்து கிடந்தாற் போலக்

கிடக்குமாறு குதிரையின் கவிழ்ந்த குளம்பு மிதித்து அறுக்க நிற்கும் என்றும், இப்பாடல் எடுத்துரைக்கிறது.

**"உகவுங்கா ரன்றென்பா ரூரா ரதனைத்**
**தகவு தகவண்றென் றோரேன் - றகவே கொல்**
**வண்டுரு பபாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்**
**வெண் ருடையாந் தன்கோடல் வீத்து"[159]**

இப்பாடலில் வண்மை மிக்க துடுப்புப் போன்று விளங்கிப் பின்னர் பாம்பினைப் போன்று நீண்டு அரும்பு நீளும் காந்தள் குவிமுகை எனப்படும். பின்னர் முகை புரிய வீழ்ந்து விரல் போல விளங்கும். இதன் இதழ்கள் வளைமுறி போன்று வளைந்து இறுதியில் அவ்விதழ்கள் கீழ்நோக்கி வெண்மையான குடை போன்று காணப்படும்.

**நிலப்பூக்கள்**

பூக்களின் வகைகளில் மூன்றாவதாக அமைவது நிலப்பூ. நிலத்தில், தரையில் படரும் புல், பூண்டுகள் குற்றாய் வளர்ந்த சிறு செடிகளின் கொம்பே காம்பாகவும் தோன்றுவதாகும். இவை புதர்ப்பூ, செடிப்பூ, புல்லிப்பூ என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. புதர்களில் மலரும் பூ 'புதர்ப்பூ' எனவும் வழங்கப்படுகிறது. இவற்றில் செடியாக வளர்ந்து பூக்கும் மலர்களும் உண்டு. பூக்களின் தன்மைகளை அறியமுடிந்தாலும், எந்த இனம் என அறியமுடியாத பூக்களும் இவற்றுள் அடக்கிக் கூறப்பட்டுள்ளன. அகக்காழ் இன்றி புறக்காழ் உடையதும், கிளைகள் இன்றி நேராக வளர்ந்திருக்கும் பலவற்றையும் புல்வகையுள் அடக்கலாம். இதனை,

**"இலையே முறியே தளிரே தோடே**
**சினையே குழையே பூவே அரும்பே**
**நனையே உள்ளுறுத்து அனையவையெல்லாம்**
**மரனொடு வரூஉம் கிளவி என்ப"[160]**

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம். புறக்கால், அகக்கால் அன்றி ஊகம்புல், சீழகம் புல், பஞ்சாக் கோரை முதலியனவும் கூறப்பட்டுள்ளன. புதர்ப்பூக்கள்

உள்ளீரம் கொண்டது. நீர் வற்றிய பருவத்தில் வயல்களில் பூக்கள் நிறைந்து காணப்படும் என்பதனை,

**“வயலகம் நிறைந்த புதர்ப்பூ பூப்பது”**[161]

எனக் கூறப்படுகிறது. புதற்பூக்களாகக் கருவிளை, கூதளம், பிடவம், ஆவிரை, பூளை, செங்காந்தளும் கூறப்பட்டுள்ளன. செடிப்பூக்களாக எருக்கு, குறிஞ்சி, பித்திகம், வாடாமலர், குல்லை, எருவை போன்றவையும் கூறப்பட்டுள்ளன. புல்லிப்பூக்களாகக் காளா, கரும்பு, தாழை, வாழை, கைதை, பனங்குருத்து போன்றவை அடங்கும். புதராக வளர்ந்து நிற்கும் செடிகளும், கொடிகளும், மரங்களும் இவற்றுள் அடங்காதத் தாவர இனங்களின் பூக்களும் குறிப்பிடத்தக்கன. பனங்குருத்தும் மலர் போன்று நற்றிணையில் எடுத்தாளப்பட்டுள்ளது. நிலப்பூக்கள் பத்தொன்பதாக ஆக நற்றிணையில் குறிப்பிடப்படுகிறது.

**செடிப்பூக்கள்**

செடி என்பது “மெல்லிய தண்டைக் கொண்ட சிறு தாவரம் என்றும், மரமாவதற்கு முந்தைய நிலை என்றும் ஆங்கிலத்தில் young plant seedlingஎனவும்”[162] தமிழகராதி கூறுகிறது. இவற்றுள் பூக்கும் பூக்கள் செடிப்பூக்கள் என வழங்கப்படுகிறது.

**களாப்பூ**

இப்பூ கார்காலத்தில் பூக்கும். கூர்மையான நுனியைக் கொண்டது. களாச் செடி வகை ஆகும். இப்பூக்கள் ஒன்றாக மணம் கமழும்படியாகப் பூக்கும் பிடா மரம் தன் அரும்புகளை மலர்விக்கும் இதனை,

**“………………வைந் நுதிக்**
**களவு உடன் கமழ பிடவுத்தளை அவிழ**
**கார் செயல் செய்த”** **(நற்-256)**

என நற்றிணை எடுத்துரைக்கிறது.

**குறிஞ்சி**

நிலப்பூக்களில் சிறப்புமிக்க மலராக விளங்குவது குறிஞ்சிப்பூ. இந்தப் பூக்கள் மலையில் மட்டும் பூக்கும். இது 6000 அடி உயரத்தில் தகுந்த தட்ப வெப்பநிலையில் மட்டும் வளர்ந்து பூக்கும். இப்பூக்கள் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மட்டுமே பூப்பதாகும். பூக்கும் காலத்தில் விடியலில் பூத்துப் பெருகித் தழைத்து அதிக அளவிலும், ஐந்து வண்ணத்திலும் பூக்கும். இம் மலரின் காரணமாகவே மலைக்குக் குறிஞ்சி என்று பெயர் அமைந்தது. குறிஞ்சிப்பாட்டு என்று இம்மலரால் வந்தது என்பதை,

> **"நீள் மலை கலித்த பெருங்கோல் குறிஞ்சி**
> **நூள் மலர்"** **(நற்-301)**
> **"கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**
> **பெருந்தேன் இழைக்கும் நாடன்"**[163]
> **"கார் மலர் குறிஞ்சி"**[164]
> **"கருங்கால் குறிஞ்சி மதன்இல் வான்பூ"** **(நற்-268)**

என்றெல்லாம் சிறப்பித்துக் கூறப்படுகிறது. குறிஞ்சி மலரையும் குறிஞ்சி பூக்கும் மலை அடுக்கத்தையும், **"கருங்கோற் குறிஞ்சி அடுக்கம்பாட"**[165] என்று புறநானூறு கூறியுள்ளது. குறிஞ்சிப்பூ மணமிக்கதாய் இருப்பதையும், இனிமையான தேனைப் பருகிய வண்டுகள் குறிஞ்சிப் பண்ணைப் பாடுவதை,

> **"நறுந்தண் தீந்தேன் உண்ட வண்டு**
> **குறிஞ்சி பாடும்"**[166]

என்று குறிப்பிட்டுள்ளதையும் அறியமுடிகிறது. "குறிஞ்சி இனங்களில் பூக்களின் நிறம் மாறுபடுகிறது. மிக அழகிய பூக்களையுடைய இனங்கள் பல ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கின்றன என்பது அறிஞர்களின் கருத்தாகும். அறிவியல் அறிஞர்கள் இச்செடியை'மலைவாழ் புதர்ச்செடி' என்பதை"[167] இரா. இராமகிருட்டிணன் கூறுகின்றார். குறிஞ்சிப் பூவின் நிறங்களில் நீல நிறத்தைத் தமிழர் போற்றினர். நீலக் குறிஞ்சிப் பூவையே கறுங் குறிஞ்சியாகக் கருதினர். நீலகிரி என்று நீலக் குறிஞ்சி வளர்வதால் வந்த பெயர் எனவும் கூறுவர். ஒரு

சில நீலப்பூக்களுடைய இனங்கள் நீலகிரியில் மட்டுமே இருப்பதாகச் செடி நூலறிஞர்கள் கூறுகின்றனர். நீலகிரியில் கிழக்குச் சாரலிலும், மேற்குச் சாரலிலும் சில இனப் பூக்கள் நீலநிறத்திலேயே காணப்படுகின்றன.

**எருக்கு**

நிலப் பூக்களில் எருக்கம்பூ புதர்களில் கொத்துக்கொத்தாகப் பூக்கும். எனவே எருக்கு ஒரு புதராக வளரும் சிறு செடியாகும். தலைவன் தான் கொண்ட காமம் மடல் மாவைத் தந்ததாகவும் ஊரர் எடுக்கும் அலர் எருக்கின் பூமாலையைத் தந்ததாகவும் கூறினான். இதனை,

> **“குறுமுகிழ் எருக்கங் கண்ணி சூடி”** **(நற்-220)**
>
> **“மடலே காமந் தந்தது அலரே**
> **மிடைபூ எருக்கின் அலர்தந் தன்றே”** **(நற்-152)**

என நற்றிணை சுட்டுகிறது. தலைவியைப் பெற மடலேர்தலே வழியெனக் கருதிய தலைவன் மடன்மாவிலே சூட்ட வேண்டி நூலாலே நீலமணி போன்ற பீலியையும், பூளைப் பூவையும், ஆவிரை மலரையும், எருக்கின் பூவோடு தொடுத்து ஊர்த் தெருவிலே தலைவியை எண்ணுவான் எனக் கலித்தொகை (138) கூறுகிறது. இது பாலை நிலத்தில் எல்லாப் பருவங்களிலும் பூப்பதாக இருந்தாலும் குறிப்பாகக் கோடைப் பருவத்தில் அதிக அளவில் பூக்கிறது. இப்பூவுக்கு மணம் இல்லை. ஆனால் அழகிய தோற்றம் கொண்டதாகக் காணப்படுகிறது. தீய பூக்கள் வகையில் சேர்த்தாலும் இதனை இறைவன் சிவன் ஏற்றுக்கொள்வதை,

> **“நல்லவும் தீயவும் அல்ல:குவியினர்**
> **புல்லிலை எருக்க மாயினும் உடையவை**
> **கடவுள் பேணேம் என்னா வாங்கு”**[168]

என்ற அடிகள் விளக்குகின்றன. எருக்கம்பூ மணமற்றதாயினும் இதன் அழகு, தோற்றம் கருதி இதனை,

> **“குவிமுகிழ் எருக்கல் கண்ணியும் சூடுப”**[169]

என்பதால் அறிய முடிகிறது. புழுகு, புன்முருங்கை, புன்முருக்கு என்றும் அழைக்கப்பட்டது.

**“அழுந்து பட்டு அலமரும் புழுகு அமல் சாரல”** [170]

என்ற அடிக்கு நச்சினார்க்கினியர் புழுகு என்பதற்கு மலையெருக்கு எனப் பொருள் கூறுகிறார். இச்செடிகள் நெருக்கமாக வளரும். வேர்க்கிழங்கு உண்டு என்பதை,

**“அரக்கு விரித்தன்ன பரு ஏர் அம்புழுகு”** [171]

என்பதால் பூ பருத்து பேரழகு உடையது என்பர். பூக்கள் அரக்குச் சிவப்புடையவை என்பதையும் அறிய முடிகிறது. இதனை ‘அகன்றலைப் புழுகு’ (பெருங்கதை 2:12:27) என்றும் கூறுவர். இது அகன்று விரிந்து தழைக்கும் என்பதை அறிய முடிகிறது. இதனை மலை எருக்கு என்றும் கோவை இளஞ்சேரன் கூறுகிறார். இதனையே செம்பூ என்கிறார் நச்சினார்க்கியர்,

**“செறி வினைப் பொலிந்த செம் பூங் கண்ணியர்” (பரி-22)**

என்ற அடிகள் செறிவுடன், வினைத்திறனோடு தொடுத்தமைந்த செம்மலர்க் கண்ணிகளை ஆடவர் சூடியிருந்தனர் என்ற கருத்தில் சுட்டப்பெற்றுள்ளது. எருக்கு எல்லாப் பருவத்திலும் பூக்கும் பூவாகும். இப்பூவைத் தலைவன் மடலேறும் போது தொடுத்து மாலையாகச் சூட்டியுள்ளதை அறிய முடிகிறது. வெள்ளெருக்கு விநாயகருக்கு ஏற்ற பூவாகவும் சுட்டப்பெறுகிறது.

**எருவை**

எருவை என்பது பஞ்சாயக் கோரை, கொறுக்கச்சி என்றும் அழைக்கப்படுகிறது. மலைப் பிளவில் கொறுக்கச்சியின் நல்ல பூ மலர்ந்திருக்கும் என்பதை,

**………..விடர்முகை**
**எருவை நறும்பூ நீடிய” (நற்-261)**

என்ற அடிகளின் வழியே அறிய முடிகிறது. ஒரு வகைக் கோரை, நாணற்புல் என்றும் அழைக்கப்படுகிறது.

**“எருவை நீடிய பெருவரைச் சிறுகுடி” (நற்-156)**

என நற்றிணையில் வரும் எருவை என்பதற்கு கொறுக்கச்சி, கொறுக்காத்தட்டை எனவும் நாராயணசாமி பொருள் கூறுகிறார். அருவி நீர் அடித்து வந்து புதிய பூங்கொத்தைக் கொண்ட கொறுக்கச்சியைக் குளத்தில் நீராடும் யானை கவளமாகக் கொண்டு தின்னும் என்பதை,

**"அருவி தந்த நாள் குரல் எருவை**

**கயன் நாடு யானை கவளம் மாந்தும்"**[172]

என்று குறுந்தொகை கூறுகின்றது. எருவை நல்ல மணமுள்ள பூ என்பதையும் நீர் நிலைகளை நாடிச் சென்ற யானைக்கு உணவாகவும் கிடைத்ததை குறுந்தொகை அடிகளில் காணலாம்,

**"அருவி தந்த நாட்குரல் எருவை"** **(குறுந்-170)**

கலப்பைக் கொண்டு உழுத நிலத்தில் பஞ்சாய்ககோரை உயர்ந்து வளர்ந்ததை,

**"கேழல் உழுதெனக் கிளர்ந்த எருவை"**[173]

**"எருவை நறுந்தோடு எரி இணர் வேங்கை"**[174]

என்ற பரிபாடலும், திருப்பரங்குன்றச் சுனையின் பக்கத்திலே எருவையின் நறிய மணமுடைய பூக்களும், எரியும் சுடர் போன்ற கொத்தாய் மலர்ந்த வேங்கையும் மலர்ந்திருந்த காட்சியை எடுத்துக்கூறுகிறது. சுனை நீரில் வளைந்திருந்த கொறுக்கச்சி மேல் மலர்கள் பூத்துக்கிடந்த தோற்றம் சுணையில் வானவில்லைப் போல இருந்தது என்பதை,

**"எருவை கோப்ப எழில் அணி திருவில்**

**வானில் அணித்த வரி ஊதும் பல்மலரால்**

**கூனி வளைத்த சுனை"**[175]

எனப் பரிபாடல் எடுத்துக்கூறுகிறது. இது பஞ்சாய்க்கோரை எனவும் அழைக்கப்படுகிறது.

**குல்லை**

குல்லை என்பது சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டிருந்தாலும், இதன் சரியான தாவரவியல் பெயர் தற்பொழுது கிடைக்கவில்லை. "நச்சினார்கினியர் இதைக் 'கஞ்சங்குல்லைப்பூ' என்று கூறுகிறார். கஞ்சாங்கோரை என்று கூறுவோரும் உண்டு. நற்றிணை உரையாசிரியர் இதனை 'மலைப்பச்சை' என்று குறிப்பிட்டுள்ளார். பிங்கல நிகண்டு 'புனத்துளசி' எனவும், சேந்தன் திவாகாரம் 'கஞ்சாச் செடி' என்றும், மருத்துவ நூலார் இதனை 'நாய்த்துளசி' எனவும்"[176] கபிலரின் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிட்டுள்ளது. குறிஞ்சி நிலத் தலைவன் குல்லை, காட்டு மல்லிகை, கூதாளி, குவளை போன்ற மலர்களால் புனைந்த மாலையை அணிந்ததை,

**"குல்லை, குளவி, கூதளம், குவளை**
**இல்லமொடு மிடைந்த ஈர்ந்தன் கண்ணியன்" (நற்-376)**

என நற்றிணை சுட்டுகிறது. இறைவழிபாட்டில் குல்லை இலை பூவோடு சேர்க்கப்பட்டு மாலையாகப் பயன்படுத்தப்பட்டதைத் திருமுருகாற்றுப்படை,

**"முடிந்த குல்லை, இலையுடை நறும் பூ" (முருகு-201)**

என்கின்றது. கஞ்சா செடியின் இலை நறுமணம் அற்றது, அதனைப் போன்றே நாய்த்துளசியின் இலையும் நறுமணம் அற்றது. எனவே குல்லையைக் காட்டுத்துளசி எனக் கூறலாம் என்கிறார் கு.வி. கிருஷ்ணமூர்த்தி (மு.நூ.ப.-115). இது சிறு செடியில் பூக்கும் பூ என்பதை,

**"குல்லை அம் புறவில் குவிமுகை அவிழ்ந்த"[177]**

என்று சிறுபாணாற்றுப்படையும்,

**"குல்லை கரியவும், கோடுளரிநைப் பவும்"[178]**

எனப் பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுகிறன. குல்லையின் இலை பொருந்திய நுனியையும், தளிரையும் குறமகளிர் அணிந்ததைத் திருமுருகாற்றுப்படை எடுத்துக்கூறுகிறது. கலித்தொகை, நற்றிணை, பரிபாடல் ஆகிய இலக்கியங்களில்

குல்லை மலரைப் பற்றிக் குறிப்புகள் இருப்பினும், பாண்டியனுடைய வையை ஆறு பலவகை மலர்களும் மணம் கமலும் மலரும் பெற்றிருந்ததைப் பரிபாடல்

**"குல்லை,வகுளம்,குருக்கத்தி,பாதிரி.....**

**எல்லாம் கமழும் இருசார் கரை கவிழ"**[179]

என்ற பாடலடிகளில் காணலாம். ஆநிரைகளை உடைய பொதுவர் கல்லிடத்தும், காட்டிடத்தும் மலர்ந்த கொன்றை, காயா, முல்லை, வெட்சி, குல்லை, குருந்து, கோடல், பாங்கர் முதலிய மலர்களைக் கண்ணியாகச் சூடி வந்ததை,

**"மெல் இணர்க் கொன்றையும்**

**குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும்,**

**.......கமழ்கண்ணி மலைந்தனர்"**[180]

எனக் கலித்தொகை கூறுகிறது. கஞ்சங்குல்லையைத் தலைமாலையாக வடுகர் அணிந்ததை,

**"குல்லை கண்ணி வடுகர் முனையது"**[181]

என்பதன் வழி அறியலாம். பொதுவர் குல்லை, குருந்து முதலான பல்வேறு மலர்களால் கமழும் கண்ணியைச் சூடி ஏறு தழுவியதாகவும் கலித்தொகைப் பாடல் (102) சுட்டுகிறது.

**எறுழ்**

'எரிபுரை எறுழம்' என்றும், நெருப்புப் போன்று தோன்றும் எறுழம்பூ என்றும் குறிஞ்சிப்பாடல் (66) கூறுகிறது. இது மழைக் காலங்களில் மிகுதியாகப் பூக்கும் பூவாகும். சிவப்பு நிறத்துடனும், மழைக்காலங்களில் மறைந்து நரை நிறத்துடனும் இருப்பதை,

**"வருமழைக்கு எதிரிய மணிநிற இரும்புதல்**

**நுறைதிறம் படுத்த நல் இணர்த்து எறுழ்வீ"** **(நற்-302)**

என்று நற்றிணை எடுத்துக்கூறுகிறது. முருகன் வீற்றிருக்கும் மலையில் எறுழ் பூங்கொத்துகளின் காம்பில் உள்ள மலர்கள் கழன்று வீழ்ந்து பரவிக்கிடப்பதை,

**“........விரி இணர்**

**கால் எறுழ ஓள்வீ தா அய**

**முருகு அமர் மாமலை”**[181]

என்று ஐங்குறுநூறு சுட்டுகிறது. எறுழம் குளிர் காலத்தில் பூப்பதாகவும் தண்டு மற்றும் இலைகள் மருத்துவப்பயன் கொண்டதாகவும் கூறப்படுகிறது. இது மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும் குறைந்த வெப்ப மண்டல பசுமை மாறா காடுகளிலும மட்டும் காணப்படுகிறது.

**வாடாப்பூ**

“இயற்கை மலர்களைக் கண்டு மகிழ்ந்த மாந்தர், இவை போன்ற செயற்கை மலர்களையும் படைத்தனர் - படைத்துச் சூடினர். இச் செயற்கை மலர்கள் வாடா மலர்கள் என்றும், நாறா மலர்கள் என்றும்,பறியா மலர்கள் என்றும் பெயர் பெற்றன. சிறப்புக் காரணமாகச் சூட்டப்படுவன. இது வாடா மலர்கள் என்று பெயர் பெற்றன”[183] தமிழ் இலக்கியத்தில் மலர்கள் என்ற நூல் சுட்டுகின்றது. இதனை,

**“வாடாப் பூவின் பொய்கைநாப்பன்” (நற்-16)**

என்கிறது நற்றிணை. வாடாத மலரையுடைய பொய்கையிடத்து ஓடுகின்ற மீன் செல்லும் நெறியப் போல நிலையில்லாதது என எடுத்துக்கூறுகிறது. இமையவர்கள் இப்பூச் சூடியிப்பதால், அப்பூ வாடாத் தன்மை வாய்ந்தது. இதனை,

**“வாடாப் பூவின் இமையா நாட்டத்து வானோர்”**[184]

என்ற புறநாநூற்றுப்பாடல் கூறுகிறது. குவளை மலர் இயற்கையில் பூக்கும் வண்ணமலர், மாந்தர் விரும்பிப் பறித்துச் சூடி மகிழும் மணமலராகும். குன்றுகளிலுள்ள சுனைகளில் பூத்த குவளை மலர் மாந்தர்கள் பறிப்பதில்லை. இதனால் ‘பறியாக்குவளை’ எனப்பட்டது.

**“கடவுட் கற்சுனை அடையிறந்**

**தவிழ்ந்த பறியாக் குவளை மலர்” (நற்-34)**

எனக் கோடைக் காலத்தில் வாடாக் குவளையாகக் கூறப்பட்டுள்ளது.

**“நீர்கால் யாத்த நிறையிதழ்க் குவளை**

**கோடை ஒற்றினும் வாடா தாகும்”**[185]

செயற்கை மலர்கள் பொன்னினால் உருவாக்கப்பட்டன. பரிசிலருக்கு வழங்கப்படும் வாடாமலர்களுள் குவளை மலரும் ஒன்றாகும். பொன்னால் செய்யப்பட்ட குவளை மலர் ‘பூவாக் குவளை’ என்று கூறப்பட்டது.

**“பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை**

**வால்நாத் தொடுத்த கண்ணியும் கலனும்”**[186]

என்பதில் பொன்னால் செய்யப்பட்ட குவளை மலரை வெள்ளி நாரில் கட்டித் தலையில் கண்ணியாகக் சூடிக்கொண்டனர். பொற்குவளை மலரை வெள்ளி நாரில் மாலையாக்கி அணிகலனாகவும் வழங்கினர் என்பதை அறியமுடிகிறது. மேலும் கட்டடங்களிலும், சிற்பங்களிலும், வாயிற் கதவுகளின் பிடியாகவும் குவளை வடிவம் அமைக்கப்பட்டது என்பதை,

**“புதுபோது அவிழ்வுகளைப்**

**பிடிகள் அமைத்து”**[187]

என்பதில் அறியலாம். பாணர் முதலிய கலைஞர்கட்குப் பொன்னால் செய்யப்பட்ட தாமரைப் பூவினை வாடாமலரினைப் பரிசிலாக அளித்துச் சிறப்பித்துள்ளதை,

**“இழைபெற்ற பாடினிக்குக்**

**என்குரலபுணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே**

**எனவாங்**

**கொள்ளழல புரிந்த தாமரை**

**வெள்ளி நாராய் பூப்பெற் றிசினே”**[188]

எனக் கூறப்படுகிறது. வாடாப்பூ சிறிய உருண்டையாக வெள்ளை, ஊதா நிறத்தில் காணப்படும். இது பூளைப் பூவைப் போன்று வாடாமல் நீண்ட நாள்

இருக்கும். மணம் அற்றதாகக் காணப்படும். மாலையில் கலந்து கட்டி சூட்டுவதை அறிய முடிகிறது.

**பித்திகம்**

இப்பூவை ‘பிச்சி’ என்று கூறுகின்றனர். ஆண்கள் நறுமணம் கமழும் சந்தனத்தை அரைத்துப் பூசி, மார்பில் குளுமையான பித்திகைப்பூ மாலையையும் அணிவது வழக்கம். இதனை,

**“மாரிப் பித்திகத்து ஈர்இதழ் அலரி**
**நறங்காழ் ஆரமொடு மிடைந்த மார்பின்”** **(நற்-314)**

என்று நற்றிணை அடிகள் கூறுகின்றன. உழத்தியர் பித்திக மலரைப் பறித்துப் பனையின் பச்சை மடலால் பின்னியப் பூக்கூடையில் சேகரித்துக் குருக்கத்திப் பூவையும், பித்திகப் பூவையும் கலந்து கட்டி அகன்ற வாயுள்ள பனையோலைப் பெட்டியில் வைத்துக் கொண்டு தெருவில் கூவி விற்பனை செய்ததை,

**“துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு**
**பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோவென**
**வண்டு சூழ் வட்டியன் திரிதரும்**
**தண்டலை உழவர் தனிமட மகளே”** **(நற்-97)**

என்ற பாடல் வழி அறிய முடிகிறது. இது மழைக்காலங்களில் மிகுதியாகப் பூக்கும் மணமுடைய மலர்களில் ஒன்றாகக் கூறப்படுகிறது.

**“மலிபெயத் கலிதத் மாரிப் பித்திகத்துக்**
**கொயலரும் நிலைய பெயலேர் மணமுகை”**[189]

என அகநானூறு விளக்குகிறது. பித்திகம் மாலை நேரத்தில் மலரும், அதன் புற இதழில் மெல்லிய செவ்வரிகள் படர்ந்திருக்கும். இதனைக் கலக்கமுற்றிருக்கும் கண்ணிற்கு உவமையாகக் கூறுவர்.

**“மாரிப் பித்திகத்து ஈரிதழ் புரையும்**

**அங்கலும் கொண்ட செங்கடை மழைக்கண்''[190]**

என்று அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. பித்திகம், பித்திகை, பிச்சிப்பூ, செம்முல்லை என்றும் வழங்குகின்றனர். பூவின் முதுகுப் பகுதி சிவப்பாக இருக்கும், மாலையில் மலரும் தன்மை கொண்டது. மகளிரின் கடைக்கண் மழையின் நனைந்த பித்திக அடும்பின் முதுகுப் பகுதி சிவந்திருப்பது போல இருக்கும் என்று குறுந்தொகைப் (94) பாடல் குறிப்பிடுகிறது. கூதிர்ப் பருவத்தில் பொழுதை அறிய பூந்தட்டில் பச்சைக் காம்பைக் கொண்ட பிச்சியின் மலரும் பக்குவத்தில் உள்ள போதுக்களையும், பேரரும்புகளையும் இட்டு வைத்தனர். அவை விரிந்து மணம் வீசுவதை மாலை நேரம் என அறிந்து, விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவி தெய்வத்தை எண்ணிக் கைகூப்பி வணக்கியதை,

**''மடவரல் மகளிர் பிடகை பெய்த**
**செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து**
**அவ் இதழ் அவிழ்பதம் கமழப் பொழுது அறிந்து**
**இத தருஞ்செய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ**
**நெல்லும் மலரும் தூஉய்ச் கைதொழுது''[191]**

என நெடுநெல்வாடை குறிப்பிடுகிறது. தலைவன் பச்சை நிறக் காம்பைக் கொண்ட பிச்சியின் ஆராய்ந்து எடுத்த மலரால் அழகாகத் தொடுக்கப்பெற்ற ஒரு வடத்தைத் தலையில் சுற்றி, செந்தீ போன்று ஒளி கொண்ட அசோகந் தளிரை ஒரு காதில் சொருகிக் கொண்டான். அவனுடைய மார்பில் வழக்கமாக அணியும் நல்ல மலர் மாலையைப் பூவோடு அணிந்திருந்தான் என்பதை,

**''பைங்கால் பித்திகத்து ஆய்இதழ் அலரி**
**அந்தொடை ஒருகாழ் வளை இச்செந்தீ**
**ஒன்பூம் பிண்டி ஒருகாது செரீஇ'' [192]**

என்றும்,

**''.........அகலத்து**

**தொன்றுபடு நறுந்தார் பூனொடு பொலிய''[193]**

எனக் குறிஞ்சிப் பாடல் எடுத்துரைக்கின்றது. செவ்வரியுடன் மிகச் சிவப்பாகப் பூக்கும். பூக்களைப் பெண்களின் கடைக்கண்ணுக்கு உவமையாகக் கூறப்படுகிறது.

**புதற் பூக்கள்**

புதர்ச்செடி என்பது "அதிக உயரம் இல்லாத தாவரங்கள் அடர்த்தியாகவும், பல தண்டுகளுடனும், பின்னிப் பிணைந்தும் வளர்ந்திருக்கும் நிலை (bush ; shrub) என்று"[194] அகராதி எடுத்துரைக்கிறது. புதறாக வளர்ந்து நிற்கும் செடிகளும் பூக்களும், மரம், கொடி இவற்றுள் அடங்காதத் தாவர இனங்களின் பூக்களும் இதனுள் அடங்கும்.

**கருவிளை**

இதனைக் 'கருங்காக்கணம்' என்று பின்னத்தூர் நாராயணசாமி கூறுகிறார். புறவுகளில் இப்புதர் வளர்ந்து நிற்கும். புதரில் கருவிளைப் பூ நிறைந்து நிற்கும் தோற்றம் மயிலானது தனது தோகையை விரித்ததைப் போன்றிருக்கிறது என நற்றிணை நவில்கிறது.

**''தண்புனக் கருவிளைக் கண்போன் மாமலர்**
**ஆடுமயில் பீலியின் வாடைடியாடு துயல்வர''** **(நற்-262)**

என்பதில் கருவிளை மலரைத் தற்பொழுது சங்குப்பூ என்று கூறுகின்றனர். வாடைக் காலத்தில் அதிகமாகப் பூக்கும் என்பதை,

**''கருவிளை மலரத்**
**துய்த்தலைப் பூவின் புதல் இவர் ஈங்கை**
**நெய் தோய்த்தன்ன நீர் நனை அந்தளிர்**
**இரு வகிர் இருளின் ஈரிய துயில் வர**
**ஆவரைப் பைம்போது பயில அகல்வயிற்**
**குதிர்வார் காய்நெல் கட்கினிது இறைஞ்சச்**
**சிதர் நனை தூங்கும் அற்சிர அரைநாள்''** **(அகநா.294)**

என்று அகநானூற்றுப் பாடல்வழி அறியமுடிகிறது. கருவிளைப் பூவின் மேல் பொறிகள் காணப்படும். இதனை,

**“பீலி ஒன் பொறிக் கருவிளை”** **(குறுந்-110)**

எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. தோற்றத்தில் சங்கின் விரிவாய் போலத் தோற்றம் இருப்பதால் இப்பெயர் வழங்கப்பட்டது. “இதனை ‘மணிப்பூங் கருவிளை’ என்று கபிலர் அடைமொழியிட்டுக் கூறுகிறார். இதனை உரையாசிரியர் நீலமணி போலும் பூக்களை உடைய கருவிளைப் பூ”[195] என இரா.இராமகிருட்டிணன் குறிப்பிட்டுள்ளார். கருவிளை என்பதற்கு “காக்கஞ்செடி, காக்கட்டான், காக்கனாங் கொடி”[196] என்று தமிழ் அகராதிகள் கூறுகின்றன.

**“கருவிளை முரணிய தண்புதல் பகன்றை”** **(அகம்-255)**

என்ற அகநானூற்று அடி கருவிளை மலர் பகன்றை மலருக்கு நிறத்தால் மாறுபட்டது என்பதை அறியமுடிகிறது. தம் காதலரைப் பிரிந்து வாடும் செயலற்ற மகளிரது நீர் சொரியும் கண்களைப் போலக் கருவிளைப் பூக்கள் மலர்ந்ததை,

**“காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்**
**நீர்வார் கண்ணின் கருவிளை மலர்”** **(அகநா.294)**

என அகநானூற்றுப் பாடல் சுட்டுகிறது. நீல மணியால் செய்தது போன்ற கரிய நிறமுடைய காக்கணம் பூ என்பதை,

**“மணி கண்டன்ன மா நிறக் கருவிளை”** **(நற்-221)**

என நற்றிணை உணர்த்துகிறது. கார்கோடப் பூ, சங்குப் பூ எனக் கூறப்படும் நீல நிறக் கருவிளை மலர்கள் ஆண்டாளின் பாசுரங்களில் இடம் பெற்றுள்ளன.

**தோன்றி**

இம் மலர் காந்தள் மலரின் வகையாகும். செங்காந்தள், வெண்காந்தள் என இரு வகையில் உள்ளன. இரு நிறமும் கலந்த மலர். “குறிஞ்சிப்பாட்டு இதனைச் ‘சுடர்ப் பூள் தோன்ற’ எனக் குறிப்பிடுகிறது. மலையாளத்தில் ‘தோன்றிப்பூ’ மேந் தோன்றிப் பூ என்றும் நாட்டுப் பகுதியில் கூறுகின்றனர்.

‘மேல் தோன்றி’ என்பதே ‘மேந் தோன்னி’ ஆயிற்று. தரையில் கிழங்காகக் கிடந்த இச்செடிகள் கார்காலத்தில் மேலே அழகிய பூவோடு தோன்றியதால் ‘தோன்ற’ என்றும் ‘மேல் தோன்றி’ என அழைக்கப்பட்டது”[197] இரா.இராமகிருட்டிணன் கூறியுள்ளார். இதை மற்ற பூக்கள் போன்று எல்லாக் காலத்திலும் காண முடிவதில்லை. மழைக் காலத்தில் தீடீரென தோன்றுவது சிறப்பான தன்மையாகும். புதர்களில் தோன்றிப்பூ தழைத்துத் தன் மலரை விளக்கென ஏற்றி நின்றதை,

**“………பல்லயின்**

**தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ” (நற்-69)**

என்ற பாடல் விளக்குகிறது. நீண்ட காம்புடன் கூடிய பூவிதழ்கள் தலைகீழாகத் தொங்குவது போலிருக்கும், அந்நிலையில் பூவிதழ்கள் பச்சை, மஞ்சள், வெண்மை கலந்த சிவப்பு நிறமாக மாறிமாறித் தோன்றும். இதழ்கள் நிறைந்த தோன்றி மலர்கள் உதிரம் போலப் பூத்திருப்பதையும் கொத்துக்களை உடைய கொன்றை பொன் போன்ற மலர்களைப் பூக்கச் செய்வதையும்,

**“முறி இணர்க் கொன்றை நனபொன் கால்**

**…தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப” (முல்லை-94)**

என முல்லைத்திணை குறிப்பிடுகிறது. நச்சினார்கினியர் விளக்குப் போல் பூவினையுடைய தோன்றிப் பூ என்றும், செங்காந்தள் மலர் என்றும் குறிப்பிடுகிறார். தோன்றிப் பூ தீச்சுடர் போன்று இருப்பதால்

**“ஒண் சுடர்த் தோன்றி”[98]**

என்றும்

**“தாய தோன்றி தீயென மலரா” (பரி-11:21)**

**“சுடர் புரை தோன்றி” (அகநா.364)**

**“வாடையொடு சிவந்த ஆய்இவழ் தோன்றி**

**சுடர் கொள் அகலின் சுடுங்குபினி அவிழ்” (அகநா.235)**

எனவும் சுட்டப்பட்டுள்ளன. நெருப்புப் போன்று மலரும் தழைத்த தோன்றியை வாடைக் காற்றால் உயர்ந்த அழகிய இதழ்களையுடைய தோன்றியின் சுருங்கிய அரும்புகள் சுடர் கொண்ட அகல் விளக்குகள் போல் விரிந்து மலர்ந்தன என்று தோன்றி மலரைச் சிறப்பித்துக் கூறுகின்றனர். பூ முதிர்ந்த பருவத்தில் இதழ்கள் செங்குத்தாக மேல் நோக்கித் தோன்றும். மேல் நோக்கியிருக்கும் இதழ்கள் வளைந்து காணப்படும் போது சேவலின் கொண்டை போலக் காட்சியளிக்கும்.

**"குவியிணர்த் தோன்றி ஒண்பூ அன்ன**

**தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்"** **(குறு-107)**

என்று சுட்டுகின்றனர். ஒளியுடன் தோன்றும் மலர் என்பதை,

**"ஒண்பூந் தோன்றி"** **(நற்-221)**

என்றும், தோன்றி மலர்கள் மலர்ந்து காணப்படுவது கார்த்திகைத் திருவிழா விளக்கினைப் போல உள்ளது என்பதை,

**"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட**

**துலைநாள் விளக்கின் தகையுடைய ஆகிப்**

**புலமெலாம் பூத்த தோன்றி"** **(கார்நாற்-26)**

என்றும் எடுத்துரைக்கின்றன. பாம்பின் படம் சுருங்கிக் குறைந்தாற் போன்று கீழ்க் காற்றால் வீழ்த்தப் பெற்ற செங்காந்தள் மலர் குவிந்து பாறையின் மேல் கவிழ்ந்து கிடந்தது,

**"..பல்வரி**

**பாம்புபை அவிழ்ந்தது போலக் கூம்பிக்**

**கொண்டலின் தொலைந்த ஒண் செங் காந்தள்"** **(குறுந்-185)**

எனக் குறுந்தொகை எடுத்துரைக்கின்றது. மலையிலுள்ள செங்காந்தள் மலர்களைக் கொய்து முருகவேள் போர்க்குச் சூடும் கண்ணியாக அமைத்துச் சார்த்தி வழிபாடு செய்தனர் என நற்றிணை (173) குறிப்பிடுகிறது. யானையின் முகத்திலுள்ள கோடுபோல அரும்புகள் பொதித்தனவெல்லாம் மலர்ந்த ஒள்ளிய

செங்காந்தள், வாழையையடைய சிலம்பின்கண் மணம் கழழ்ந்தது என நற்றிணை (176) புலப்படுத்துகிறது.

**ஆவிரை**

ஆவிரை ஆவாரம்பூ எனவும் அழைக்கப்படுகிறது. விரிந்த இதழ்களையுடையதும், அனைத்து வகை நிலங்களிலும் தானே வளரும் தன்மை உடையது. பளிச்சிடும் மஞ்சள் நிறத்தில் கொத்துக்கொத்தாக பூத்துக் குலுங்கும் புதர்த் தாவர வகையாகும். தமிழர் தை முதல் நாள் பொங்கல்பண்டிகைக்குக் காப்புக் கட்டுகையில் இம் மலரையும் சேர்த்துக் கட்டி வைப்பர். விலைக்கு விற்றற்கியலாத பூளை மலரையும், உழிஞைப் பூவையும், எருக்கம் பூவையும், ஆவிரம் பூவோடு கலந்து கட்டிய மாலையைச் சூடியவன் என்பதை,

**"வில்லாப் பூவின் கண்ணி சூடி" (நற்-146)**

என்பர். பனை மடலால் செய்யப் பெற்ற மடல் குதிரைக்குப் பொன்னிற ஆவாரம் பூவாகிய மாலையைச் சூட்டினர் என்பதை,

**"பொன்நேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த**
**பல்நூல் மாலை பனைபடு கலிமா" (குறுந்-173)**

என்று குறுந்தொகை எடுத்துரைக்கிறது. "ஆவாரைப் பூத்திருக்க சாவாரைக் கண்டதுண்டோ" என்ற பழமொழியின் மூலம் ஆவாரம் பூ உயிர் காக்கும் மருத்துவத் தன்மையை உடைய பூ என அறியமுடிகிறது.

**"அடர்பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங் கண்ணி" (கலித்-140)**

பொன் போன்ற மஞ்சள் நிறமுடைய ஆவிரை மலரைப் பொன்னாவிரை என்று இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது.

**பிடவம்**

பிடவூர் என்பது சங்க காலத்தில் ஊர்ப் பெயராகவும், பிடவ மலரைப் பற்றிய குறிப்புகள் இருந்ததாகவும் கூறப்படுகிறது. கோடை வெப்பத்தால் காட்டில் உள்ள பிடா மரங்கள் சில பூக்கள் சூடும் மகளிர் போல இருந்தததையும்,

கார்காலத்தில் வண்டுகள் வாய்த் திறந்ததால் பல மலர்கள் பூத்தன என்பதையும்,

**“வறங்கொல வீந்த கானத்துக் குறும்பூம்**

**கோதை மகளிர் குழூஉநிரை கடுப்ப**

**வண்டுவாய் திறப்ப விண்ட பிடவ”** **(நற்-238)**

எனும் நற்றிணைப் பாடல் எடுத்துக்கூறுகின்றது. மேகம் மழை பெய்யாமல் பருவம் வந்த நிலையில் பொன் போன்ற மலரையுடைய கொன்றையும், பிடவும் மலரா நிற்பதை,

**“பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை அவிழ**

**இன்னிசை வானம் இரங்கு மவர்”** **(நற்-246)**

என்ற பாடல்வழி அறியலாம். கார்கால மாலை நேரத்தில் காடுகளில் செந்நிலப் பகுதிகளில் மிகுதியாகப் பூக்கும் மலராகும். அரும்பு விடும் நிலையில் அதன் இலையாவும் உதிர்ந்து காணப்படும். இவற்றை,

**“பிடவம் மலர தவளம் நனைய**

**கார் கவின் கொண்ட காலம்”** **(ஐங்-493)**

என்ற ஐங்குறுநூற்றின் பாடல் வழி அறியலாம். அற்சிரக் காலத்து மாலைப் பொழுதில் வண்டுகள் மூசும் போது, இம்மலர் வாய்திறக்கும் என்பதை,

**“மாலைக் குளிர்கொள் பிடவின் கூர்முக அலரி**

**வண்டு வாய்திறக்கும் தண்டா நாற்றம்**

**கூதிர் அற்சிரத்து ஊதை தூற்ற”**[199]

என்ற அடிகள் வழியும் இப்பூக்கள் மலைக்காட்டில் பூக்கும் என்பதை,

**“ஓங்குமலைச் சிலம்பில் பிடவுடன் மலர்ந்த வேங்கை” (அகநா.147)**

என்ற அடி வழியும், மணல் வெளியில் பூப்பதை,

**“வார்மணல் ஒருசிறைப் பிடவு அவிழ் கொழுநிழல்”**[200]

என்ற அடி வழியும் அறிய முடிகிறது. பிடவ மலரின் காம்புகள் நீண்டிருக்கும். இதனை,

**“குறும் புதற் பிடவின் நெடுங்கால் அலரி”**[201]

என்ற அடி வழி உணரலாம். பிடவம் பூக்கள் வெண்மையாகவும், மிகுதியாகவும் பூத்திருக்கும் காட்சி கண்ணியினைப் போலத் தோன்றுகிறது என்பதை,

**“சிறுகரும் பிடவின் வெண்தலைக் குறும்புதல்**
**குண்ணியின் மலரும்”**[202]

என்பதில் காணலாம். புதர்களின் மீது படர்ந்து செம்முல்லையின் சீவல் முள்ளைப் போன்று சிவந்த அரும்புகள், நெருங்கிய குலையினை உடைய பிடாவினது அரும்புகளோடு ஒரு சேர தலையவிழ்ந்து மலர்ந்ததை,

**“புதல்மிறைத் தளவின் இதல்முட் செந் நனை**
**நெருங்கு குலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழ”  (அகநா.23)**

என அகநானூறு சுட்டுகிறது. கார்காலத்தில் தோன்றும், பிடவு அரும்பு காற்றால் அசையும் துடுப்பில் தீக்கடைக் கோலால் தீமுட்டியது போன்று காணப்படும். ஆயர்குல இளைஞர் ஏறு தழுவுமுன் செங்காந்தள் பூ, நீலமணி போன்ற காயாம்பூ இவற்றோடு பிற பூக்களையும் கலந்து தலைமாலையாகச் சூடினர். இதனை கலித்தொகையில்,

**“தளிபெறு தண்புலத்துத் தலைப் பெற்ற அரும்பு ஈன்று**
**முளிமுதல் பொதுளிய முள்புறம் பிடவமும்**
**குளிப்பட்டான் நிலையே போல் தடவுபு துடுப்பு ஈன்று**
**ஞெலியுடன் நிரைத்த ஞெகிழ் இதழ்க் கோடலும்**
**மணிபுரை உருவின காயாயும் பிறவும்**
**அணிகொள மலைந்த கண்ணியர்”**[203]

எனக் குறிப்பிட்டுள்ளனர். வண்டுகள் ஒலிக்கும்படி முல்லை நிலத்தில் பிடா தன் வெண்மையான பூக்களை மலர்ந்து மணம்கமழச் செய்வதை,

**“சுடும்பு இமிர் மலர கானம் பிற்பட**

**வெண்பிடவு அவிழ்ந்த வீகமழ் புறவில்''** **(அகநா.184)**

எனும் அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. கூரிய நுனியையுடைய காளா மலர் ஒருங்கே மலர்ந்தது. மணம் கமழா நிற்க பிடாமலர் முறுக்கு வாய் நெகிழ்ந்து மலர மேகம் மழை பெய்தலைச் செய்ய தொடங்கிய அழகிய கார்பருவத்தை,

**"……வைந்துதிக்**
**களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்**
**கார்செயல் செய்த''** **(நற்-256)**

என்ற நற்றிணைப் பாடல் சுட்டுகிறது. பிடவு கருமையாக மூடப்பட்ட கூரிய அரும்பையும், கொம்புகளைக் கொண்டது. இப்பூக்கள் குளிர்ச்சியும் மணமும் கொண்டதாகும். மலரின் காம்பு நீளமாக வெண்மையான பூக்களாகப் பூக்கும்.

**பூளை**

நிலப்பூ வகையிலுள்ள பூக்களுள் பூளைப்பூ குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இது புதர்ச் செடி இனத்தைச் சேர்ந்ததாகும். பாழ்பட்ட இடங்களிலெல்லாம் எருக்கஞ்செடி முளைப்பது போன்று வேலிப்புதர்களில் பூக்கின்றன. இப்பூக்கள் வேனிற் காலத்தில் பூப்பதால் 'கோடைப்பூளை' எனவும் அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. சிறுபீளை, சிறுகண்பீளை, கண்பீளை என்றும் அழைக்கப்படுகிறது. தலைவன் விலைப்படுத்தப்படாத பூளை, ஆவிரை, உழிஞை, எருக்கம் பூக்களைக் கலந்து கட்டிய மாலையைச் சூடியவன் என்பதை,

**"வில்லாப் பூவின் கண்ணி சூடி**
**நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரும்''** **(நற்-146)**

என நற்றிணை நவில்கிறது. இவற்றில் வெள்ளை நிறப் பூக்கள் கொண்ட கதிர்கள் பூத்திருக்கும். இப் பூ மணம் இல்லாத மலர், எத்தனை நாட்கள் ஆனாலும் வாடாத நிலையிலேயே இருக்கும். காய்ந்த வரகு அரிசிச் சோறு போன்று காணப்படும். இதனை,

**"நெடுங் குரல பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறள் அவிழ் சொன்றி''** **(பெரும்பாண்-192)**

என்னும் பாடல்வழி அறியலாம். பூளைப்பூ இதழாக விரியாது, பஞ்சு போன்ற அமைப்பில் நீண்ட கொத்தாகப் பூப்பது பிறவிப் பிணிக்கு உவமையாகக் கூறப்படுகிறது.

**“வேறுபல் பூளையொடு உழிஞை சூடி”** **(பட்டின-255)**

எனவும் புறத்திணையில் சூடும் பூவாக இருந்துள்ளது. பூனையின் குட்டிகள் உடலிலுள்ள மயிர்கள் பூளைப் பூவினைப் போன்று உள்ளதை

**“பூக்கள் அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை”** **(அகநா.297)**

என அகநானூற்றுப் பாடல் சுட்டுகிறது. மடல் ஊர்ந்த தலைவன் அழகிய பூளைப்பூ, ஆவிரம்பூ, எருக்கம்பூ மலர்களைக் கொண்டு மாலையைத் தொடுத்ததை,

**“அணிப்பூளை, ஆவிரை, எருக்கொடு,**
**பிணித்து யாத்து”** **(கலித்-138)**

எனக் கலித்தொகை கூறுகிறது. பாழிடங்களில் பூளைச்செடி வளர்ந்துள்ளதை,

**“பூளை நீடிய வெருவகு பறத்தலை”** **(புறநா-23)**

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. சிவபெருமானுக்கு உகந்த மலர் பூளைப் பூவாகும். திருமாவளவன் தன் பகைவருடைய மதிலை வளைத்துப் போரிடும் போது தானும் தன் படை வீரரும் பெரும் பூளைப் பூவையும், உழிஞை என்னும் சிறு பூளைப் பூவையும் சூடிக்கொண்டு போர் செய்தான். இதனால் அவர் தம் தலைகள் புதர் படிந்த மலைகள் போல் தோன்றின. இவற்றை,

**“தூறு இவர் துறுகல் போல போர்வேட்டு**
**வேறுபல் பூளையொடு உழிஞை சூடி”**[204]

எனப் பட்டினப்பாலைக் கூறுகிறது. செந்நாய் துரத்தியதால் காற்றில் அகப்பட்ட பூளைப்பூப் போல ‘ஓய்’ என்ற ஒலியோடு அலறித் தறிகெட்டு ஓடியது மான் கூட்டம் என்பதை,

**“……..செந்நாய் எடுத்தலின்**

**வளிமுளைப் பூளைவின்‘ஓய்’என்று அலறிய**

**கெடுமான் இன நிரை’’ (அகநா.199)**

என்ற அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது. பூளைப்பூ, உழிஞைப்பூ, ஆவிரம்பூ, மயில் பீலி, மணி ஆகியவற்றைக் கோத்துக் கட்டிய மாலையை மடல் ஏறுவோன் சூடுவான் என்பதை,

**“……பூளை, உழிஞையோடு யாத்து’’ (கலித்-23)**

எனக் கலித்தொகை புலப்படுத்துகிறது. பெண்மான் பூளைச் செடி நிறைந்த பாழ் இடத்தில் உள்ள வேளைச் செடியின் வெண் பூவைக் தின்னும் என்பதை,

**“……பினை**

**பூளை நீடிய வெருவரு பறந்தலை**

**வேளை வெண்பூ கறிக்கும்’’[205]**

என்கிறது புறநானூறு. பாழ் இடத்தில் இச்செடிகள் இருக்கும். சிறுபூளை உழிஞை என்றும் அழைக்கப்படுகிறது. பெரும் பூளைப்பூ வரகு அரிசிச் சோறு போலக் கொத்தாகப் பூக்கும். பூளையின் சிலிர்த்த மயிர்போலும், இப்பூ மிக மெல்லியதாகக் காணப்படுகிறது.

**கூதளம்**

கூதளம், கூதாளி எனவும் வழங்கப்படுகிறது. இதனை நற்றிணை தாளிக்கொடி என்று கூறுகிறது. இது மலைப் பகுதியில் வளர்ந்து நிற்கும், குளிர்காலத்தில் வெண்மை நிறத்தில் குலைகுலையாகப் பூக்கும். இதனை,

**“விழுந்த மாரிப் பெருந்தண் சாரல்**

**கூதிர்க் கூதாளத்து அலரி’’ (நற்-244)**

**“வன்பினி அவிழ்ந்த வெண்கூதாளத்து**

**அலங்கு குலை அலரி’’ (அகநா.178)**

**“………..சாரல்**

**கூதள நறும் பொழில் புலம்ப ஊர்வயின்’’ (நற்-313)**

என இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. கூதள மலர் மலைப்பகுதியில் மணங்கமளும் என்பதை, ‘கூதளம் கமழும் வெற்பு’ என்கிறது அகநானூற்றுப் பாடல் கூதளமும், குளவியும் சேர்ந்துள்ள காட்சியை,

**“கூதளம் கவினிய குளவி முன்றில்”** **(புறம்-168)**

என்று புறநானூற்றுப் பாடலில் காணலாம். கூதாளிப்பூ மணம் வீசுவதையும் பல்வேறு வகைகள் உள்ளதையும் கீழ்க்கண்ட பாடல்கள் சுட்டுகின்றன.

**“……..சிறுமலைக்**
**சிலம்பில் கூதளம் கமழும்”** **(அகநா.47)**

**“விசும்பு விசைத்து எறிந்த கூதளம் கோதையின்**
**பசுங்கால் டிவண்குருகு வாப்பறை வளைஇ”** **(அகநா.273)**

**“சிறுமலைச் சிலம்பிற் செங்கூ தாளமொடு”** **(சிலப்-14:88)**

**“செண்பகம் கருவிளம் செங்கூதாளம்”** **(சிலப்-22:40)**

கூதாளி மலரில் வெண்கூதாளம், செங்கூதாளம் என இரு வகையுண்டு என்பது புலப்படுகிறது.

**புல்லிப் பூக்கள்**

புல்லி என்பது “பூவிதழ்களின் அடியில் மெலிதான இலைபோல் வரிசையாக அமைந்திருக்கும். ஆங்கிலத்தில் sepal என்று”[206] அகராதி கூறுகிறது. கரும்பு, தாழை, வாழை, கைதை, தாழம்பூ போன்றவை புல்லினங்களாகக் கருதப்படுகின்றன. அகக்காழ் இன்றிப் புறக்காழ் உடையதாகவும், கிளைகள் இன்றி நேராக வளர்ந்திருப்பனவற்றையும் புல் வகையுள் அடக்கலாம். பொருளதிகாரத்தில்,

**“இலையே முறியே தளிரே தோடே**
**சினையே குழையே பூவே அரும்பே**
**நனையே உள்ளுறுத்து அனையவை யெல்லாம்**
**மரனொடு வருஉம் கிளவி என்ப”** **(தொல்.பொரு-642)**

என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர் ‘மரனொடு வரூஉம்’ என மிகை படக் கூறியுள்ளார். புறக்காழனவும், அகக்காழனவும் அன்றி அவற்றோடு தழீஇக் கொள்ளப்படுவனவும் எல்லாம் இவற்றில் பெயர் பெறும் என்று கூறியுள்ளார்.

**கரும்பு**

பனிக் காலத்தில் கோல் வடிவம் கொண்ட கரும்பின் அரும்பு வேல் வடிவில் தோன்றும். நீண்ட தண்டு வடிவப் பயிர் வகையும் கருவுற்ற பச்சைப் பாம்பு போன்று வெண்மையாகப் பூக்கும். வாடைக் காலத்தில் வெண்ணிற மலராக, மணமற்ற மலரும் என்பதை,

> **“......கரும்பின்**
> **வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி ஒற்றும்**
> **வடபுல வாடை”** **(நற்-366)**

என்கிறது நற்றிணை. குறுந்தொகையில்,

> **“தேம்பொதி கொண்ட தீங்கழைக் கரும்பின்**
> **நூறா வெண்பூ”** **(குறுந்-85)**

என்று பதிவாகியுள்ளது. முன்பனிப்பருவக் காலத்தில் பூக்கும் மலர்களுள் கரும்பின் பூவும் ஒன்று. இந்தப் பூவினை வடம வண்ணக்கன் தாமோதரனார்,

> **“உள்ளூர்க்குரீஇத் துள்ளுநடைச் சேவல்**
> **சூல்முதிர் பேடைக்கு ஈனில் இழை இயர்**
> **தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்**
> **நூறா வெண்பூக் கொழுதும்”**[207]

என உணர்த்துகிறார். நீர் வளமுள்ள இடத்தில் கரும்பு செழித்து வளரும். காட்டாற்றின் கரையிலும், வயல்களிலும் கரும்பு வளரும் என்று பட்டினப்பாலை கூறுகிறது. கரும்பின் மொட்டு வெண்மை நிறத்திலும் வேல் போன்றும் நீண்டிருக்கும். கரும்பு பாத்தியில் பூத்த நெய்தல் பூவை, எருமைக் கூட்டம் இரைக்காக வேறு எங்கும் செல்லாமல் இருக்கும் என்பதை,

> **“கரும்பின் பாத்தி பூத்த நெய்தல்**

**இருங்கன் எருமை நிரைதடுக்குநவும்''** **(பதிற்று-23)**

என்று பதிற்றுப்பத்து கூறுகிறது. கரும்பு எல்லாப் பருவங்களிலும் பயிரிடப்படுகிறது. எல்லாக் காலத்திலும் பூக்கும் தன்மையுடையது. இக்கரும்பு இருவகை உண்டு ஒன்று தின்பதற்கும் இனிப்பு தயாரிக்கவும் பயன்படும். மற்றொன்று தின்னப் பயன்படாத பேக்கரும்பு.

**தாழை**

தாழையின் நிறம் வெண்மையாகவும், யானையின் கொம்பு போலவும் இருக்கும். இவை கடற்கரைக் கழிகளின் ஓரங்களில் வளர்ந்திருக்கும். இப்பூக்கள் பெரும் பகுதி வேனிற் காலத்தில் பூக்கும் என்பதை,

**''தடந்தாள் தாழை முள்ளுடை நெடுந்தோடு**
**அகமடற பொதுளிய முகைமுதிர் வான்பூ**
**கோட வார்ந் தன்ன வெண்பூத் தாழை**
**எறிதிரை உதைத்தவிற் பொங்கித் தாது சோர்பு**
**சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலால் மறுக்கும்''** **(நற்-203)**

என நற்றிணை விளக்குகிறது. குறிஞ்சிப்பாட்டில் தலைவன் தன் நீலமணி போன்ற கரிய தலை மயிரில் மலை நிலத்திலும், கொம்பிலும், சுனையிலும் பூத்த வண்ணமலர்களை அணிந்தான். ஆராய்ந்து கட்டிய குளிர்ச்சியும் மணமும் கொண்ட தொடலையையும், மாலையையும், வெண்மையான தாழை மடலால் ஆகிய தலை மாலையையும் அழகாகச் சூடிக்கொண்டு முருகனோ என அஞ்சும்படி வந்தான் என்பதை,

**''மணிநிறம் கொண்ட மாஇருங் குஞ்சியின்**
**மலையவும், நிலத்தவும், சினையவும், சுனையவும்**
**வண்ணவண் ணத்த மலராய்பு விளங்கிய**
**தண்நறுந் தொடையல் வெண்போழக் கண்ணி**
**நலம்பெறு சென்னி நாம்உற மிலைச்சி''** **(குறிஞ்-112-116)**

என்கிறது குறிஞ்சிப்பாட்டு. தாழையின் மலர்கின்ற வளமையான மொட்டுகள் அன்னம் தன் சிறகினைக் கோதுவது போல மடல் பிரிந்து மலரும். இதனை,

**“வீழ்தாழ் தாழை ஊழ்உறு கொழு முகை**

**குருகு உளர் இறகின் விரிபுதோடு அவிழும்”** **(குறுந்-228)**

என்கிறது குருந்தொகை. வளைந்த தாழை மடலின்பூ நாரை அமா்ந்திருந்ததைப் போல மலா்ந்தது என நெய்தல்கலி காட்சிபடுத்தியுள்ளது.

**“……முடத்தாழை**

**பூமலா்ந் தவைபோல புள் அல்கும்”** **(கலித்-16)**

என்பதில் சுங்கம் வசூலிப்போா் கடையாமத்தில் தம் வீட்டிற்குச் செல்லாது, பெரிய காவிரியாறு பூ மணம் பரப்பும் தூய மணல் பரப்பில் தூங்கிவிடுவா். அவா்களின் அகன்ற தெருக்கள் வெண்மையான பூங்கொத்துக்களைக் கொண்ட மடலோடு கூடிய தாழை மரங்களையுடைய கடற்கரையில் இருந்தது. இவற்றை,

**“மாகாவிரி மணம் கூட்டும்**

**தூஉ எக்கா் துயில் மடிந்து**

**வேலாழி வியன் தெருவின்”** **(பட்டின -116)**

எனப் பட்டினப்பாலை கூறியுள்ளது. அலையும் நீரையும் கொண்ட கடற்கரையில் நின்ற தாழைப்பூ, அன்னப் பறவைகள் போன்று வெண்பூக்கள் பூத்திருந்தை,

**“அலைநீா்த் தாழை அன்னம் பூப்பவும்”**[208]

எனவும், நெய்தல் நிலத்தோட்டம் முள்ளைக் கொண்ட நீண்ட மடலைப் பெற்ற தாழை மணம் வீசும் ஞாழல் மரத்தோடு பொருந்தி நின்ற அடிமரத்தையுடைய புன்னை பொன் போன்ற நுண்ணிய பூந்துகளைக் கொண்டிருந்தது.

**“……முள் உடை நெடுந்தோட்டுத்**

**தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்**

**படப்பை நின்ற முடத்தாள் புன்னைப்**

**பொன்நேர் நுன் தாது”** **(அகநா.180)**

என அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. தாழையின் பூக்கள் கீழே விழுந்த துகள் உடைந்த வளையல் துண்டுகள் போன்று இருக்கும்.

**வாழை**

வாழை அறிவியல் வகைப்பாட்டில் பூண்டுத் தாவர இனத்துள் பேரினமாகும். இது அனைத்து இன வாழைகளையும் உள்ளடக்கியது. இலத்தீன் மொழியில் 'மியூசா'[209] (musa) என்று அழைக்கப்படுகிறது. தென்கிழக்கு ஆசியாவில் தோன்றிய வாழை முதன் முதலாக பப்புவா நியூகின்யில் பயிரிடப்பட்டது. இன்று அனைத்துப் பகுதிகளிலும் வாழை பயிரிடப்படுகிறது. இலக்கியத்தில் வாழையின் முகை நீண்டு மகளிரின் முடிந்த கூந்தலைப் போன்று இருந்ததை,

**"வாழை ஈன்றவை ஏந்து கொழுமுகை**
**மேல்இயல் மகளிர் ஓதி அன்ன"** **(நற்-225)**

என நற்றிணை கூறுகிறது. சோழ நாட்டின் சிறப்பைப் பட்டினப்பாலையில் கூறுமிடத்துக் குலைகளையுடைய தென்னை, வாழை, பாக்கு, மாமரங்கள் போன்றவை விளையும் நீங்காத வயல்களைக் கொண்டது என்பதை,

**"கோள் தெங்கின், குலை வாழை**
**காய்க் கமுகின் கமழ் மஞ்சள்,**
**இனமாவின்"** **(பட்டின-16)**

என்றும்,

**"நிரைத்த யானை முகத்துவரிகருப்பப்**
**போது பொதி உடைந்த ஒன் செங் காந்தள்**
**வாழையஞ் சிலம்பின்கன் வம்புபடக் குவைஇ"** **(நற்-176)**

எனவும் கூறுவதின் வழியே அறியலாம். வாழைப்பூ விரிந்த பின் அதன் உள்ளேயுள்ள பூக்கள் உதிர்கின்ற காட்சி வளைகள் உதிர்ந்து கிடப்பதைப் போலத் தோன்றும் என்பதை, **"மகளிர் பூவின் வளைமுறி சிதற"**[210] என்று

புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. பூ உதிர்ந்த பின் நிற்கும் அதன் தண்டு மானின் கொம்பு போலத் தோன்றும் இதனை,

**“குவிமுகை வாழை வான்பூ ஊழுறு புதிர்ந்த**

**ஓழி குலையன்ன திரிமருப் பேறு”** **(அகநா.134)**

என்று அகநானூற்றுப் பாடல் வருணிக்கின்றது. வாழைப் பூ அசைகின்றதையும், சேற்றில் கதிர்கள் அறுத்துப் போட்ட நிலையினையும்,

**“வாழைமென் தோடு வார்புறு ஊக்கும்**

**நெல்விலை களனி நேர்கண் செறுவின்”** **(நற்-400)**

என்று நற்றிணை கூறுகின்றது. வாழையில் முறைப்பட மலர்ந்த பூக்கள் தவிர உதிராத வாழையின் பூ அருகில் இருந்த மலைப் பாறைகளில் படர்ந்தன. அம்மலைப் பகுதியில் சோலையாக விளங்கும் வாழையின் காய்கள் நெருங்கிய குலைகள் மிகவும் நெகிழும்படி பழுத்ததை

**“காழ்மண்டு எஃகம் களிற்றுமுகம் பாய்ந்தன**

**ஊழ்மலர் ஒழிமுகை உயர்முகம் தோய**

**துறுகல் சுற்றிய சோலை வாழை**

**இறுகு குலை முறுகப் பழுத்த”** **(மலைபடு-129)**

எனவும், வாழையின் பெரிய பூவினது மடல்கள் முறையாக மலர்ந்து உதிர்ந்து, எஞ்சி குவிந்த மொட்டும் வீழ்ந்து விட்ட குலையைப் போன்று ஆண் மான்களின் முறுக்குடைய கொம்பு இருப்பதை,

**“வாழை வான்பூ ஊழுறுபு உதிர்ந்த**

**ஒழிகுலை அன்ன திரிமருப்பு ஏற்றொடு”** **(அகநா.134)**

என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது. மகளிர் கூந்தலின் முடிப்பு வாழைப்பூவின் தோற்றம் போலக் காணப்பட்டதை,

**“வாழைப்பூ எனப் பொலிந்த ஓதி”** **(சிறுபாண்-21)**

என்று சிறுபாணாற்றுப்படை கூறுகிறது. வாழை எல்லாப் பருவத்திலும் பூக்கும் தன்மை கொண்டதாகும்.

**பனங்குருத்து**

பனை மரம் புல்லின் வகையைச் சேர்ந்தது. இதனைப் பொது வழக்கில் மரம் என்று கூறுகின்றனர். இவற்றில் உள்ள குருத்தை மங்கல நிகழ்ச்சிகளில் தோரனமாகவும், மாலையாகவும் கட்டியுள்ளனர். இப்பனங்குருந்தும் சங்க காலத்திலிருந்து இன்றும் பயன்பாட்டில் உள்ளதை அறியமுடிகிறது. வெளிய பனங்குருத்தின் போழுடனே சேர்த்துத் தொடுத்த அசைகின்ற மாலையின் நறிய மணம் கமழ்வதை,

> **“……....பரீஇ**
>
> **வெண்போழ் ததைஇய அலங்கலந் தொடலை**
>
> **மதுகுடன் கமழும் மாலை”** **(நற்-169)**

என்ற நற்றிணைப் பாடல் எடுத்தியம்புகிறது. வெண்மையான பனங்குருத்தோடு கட்டிய நீல் நிற வாகைப் பூவின் தூய்மையப் போலப் பூத்த முல்லைப் புதரில் வண்டுகள் மொய்த்தன, அவை காட்டில் இருக்கும் பிடவ மரத்தின் பூக் குலையில் தங்கியதை,

> **“……போந்தொடு தொடுத்த**
>
> **கடவுள் வாகைத் துய்வீ ஏய்ப்ப**
>
> **பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை**
>
> **குடத்திடைப் பிடவின் தொடைக்குலைசேக்கும்”** **(கார்நாற்-28)**

என பதினெண்கீழ்க்கணக்கு எடுத்துரைக்கிறது.

**கைதை**

பூக்களில் சிலவற்றை இலைப்பூ என்றும், ஓலைப்பூ என்றும் கூறுவார். மரிக்கொழுந்து இலைப்பூவாகும். தாளம்பூ ஓலைப் பூவாகும். கைதை பூ தாளம்பூவின் இனம், இப்பூக்கள் முள்ளாகிக் கையில் தைப்பதால் கைதை எனப் பெயராயிற்று.

**"நீல் நிறப் புன்னைத் தமி ஒண்கைதை"** **(நற்-163)**

என்று நற்றிணை கூறுகின்றது. நீர் நிலைகளில் செழித்து வளரும் தாளம்பூவை மகளிர் சூடிக்கொள்வர். இதனை,

**"கைதைஅம் தண் புனல் சேர்ப்பனொடு"**[211]

என்ற அடிவழி அறியலாம். கழியருகினுள்ள அடும்பின் மலரைப் பறித்தும், தாழம்பூவைப் பறித்துத் தழையுடைய நெய்தல் மலரை கொய்தததை,

**"........அடும்பு மலர் கொயதும்**
**கைதை தூக்கியும் நெய்தல் குற்றம்**
**புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமோடு"** **(நற்-349)**

என்கிறது நற்றிணை. தாழையை வேலியாகக் கொண்ட அழகிய தோட்டங்களையுடைய ஆரவாரமிக்க ஊர் என்பதை,

**"கைதை அம் படப்பை எம் அழுங்கல் ஊரே"**[212]

என்ற அடி உணர்த்துகிறது. தாழையின் தாழ்ந்த கிளையின் மேலே விருப்பத்தை உடைய பெடையொடு துன்பத்துடன் வருந்தியிருக்கும் சிறிய கடற் காக்கையை,

**"கைதைஅம் படுசினை எவ்வமொடு அசாஅம்**
**கடற்சிறு காக்கை"** **(அகநா.170)**

என அகநானூறு எடுத்துக்கூறுகின்றது. தாழைகள் அருகில் மலர்ந்திருக்க அதைக் கண்டு கெண்டை மீன்கள் தம்மைப் பிடித்து உண்ண வந்திருக்கின்ற நாரைகள் என்று எண்ணி அஞ்சியதை,

**"அருகு கைதை மலர் கெண்டை**
**குரு கென்று அஞ்சும்"** **(பெரி.திருமொழி-529)**

எனப் பெரியாழ்வார் திருமொழி சுட்டுகிறது. ஞாழற் பூவும் புன்னை இதழ் விரியும் பூக்களை உடையனவாய தாழம் பூவும், செருத்திப் பூவும் கடற்கரை மணலிடத்தே சக்கரப் படையையுடைய திருமாலின் திருத்தோளில் கிடக்கின்ற மாலை போலத் திகழ்ந்ததை,

**"தெரி இணர் ஞாழலும், தேம்கமழ் புன்னையும்**

**புரி அவிழ் பூவின கைதையும், செருத்தியும்,**

**...செருமிக நேமியான் தார் போல"** **(கலித்-127)**

என்கிறது கலித்தொகை. இப்பூக்கள் பெரும் மணல் பரப்பில் தலையவிழ்ந்த தன்மை உடையதாகும் எனவும் புலப்படுத்துகிறது.

**நீர்ப்பூ**

நால்வகைப் பூக்களில் நான்காவது நீர்ப்பூவாகும். வாவி, குளம், பொய்கை, வயல், சுனை, ஆற்றோரம், ஓடை, கடல், அருவி முதலிய நீர் நிலைகளில் இப் பூக்கள் மலர்வதுண்டு. பொதுவாக நீர்ப்பூக்கள் குவிந்து புலர்ந்து சில நாட்கள் வரையில் இருக்கக் கூடியவை. அவ்வாறு நீர் நிலைகளில் தோன்றும் பூக்கள் வாவிப்பூ, பொய்கைப்பூ, வயற்பூ, கயப்பூ, ஓடைப்பூ, கேணிப்பூ, சுனைப்பூ, எரிப்பூ, தீப்பூ என்றெல்லாம் வழங்கப்படுகின்றன.

**"பொய்கைப் பூவின் நறுந்தண் ணியளே"**[213]

**"சுனைப்பூ நீத்து"**[214]

**"கயப்பூப் போல் முள்மலர்ந்து"** **(நாலடி-215)**

என்பதன் வழியே பொய்கை நீரில் பூத்தது, சுனை நீரில் பூத்தது, கய (குளம்) நீரில் பூத்தது கயப்பூ எனவும் அறியப்பெறுகின்ற நீர்நிலையில் பூத்து விளங்கும் நீர்ப்பூக்களாக நற்றிணையில் ஆம்பல், குவளை, தாமரை, நீலம், நெய்தல், செவ்வாம்பல்,வெள்ளாம்பல் போன்ற பூக்கள் இடம்பொற்றுள்ளன.

**தாமரை**

நீர்ப்பூக்களில் ஒன்றாகிய தாமரைப்பூ எல்லாவற்றிற்கும் தலைமைப் பூவாகத் திகழ்கிறது. இந்தியாவின் தேசிய மலர் என்ற மரியாதைக்குரியது தாமரை பார்க்க மிகவும் அழகான மலராகும். அளவில் பெரியது என்ற காரணத்தினால் மற்ற பூக்களைப் போல் தாமரையைப் பெண்கள் தலையில் சூடிக் கொள்வதில்லை. ஆனால் கோவில்களிலும், அலங்காரம் செய்வதற்கும் தாமரைப் பெரிதும் பயன்படுகிறது. இதன் பூவிதழ் பெரியது மட்டுமின்றித் தனி

முடி சூடித்திகழும் தகுதியும் கொண்டது. மருத்துவக் குணமும் உடையது, மணத்தால் நிறைந்தது என்பதை, ‘போதினுள் மிக்க பங்கயமாம்’ எனக் கந்தபுராணம் சிறப்பித்துக் கூறியுள்ளது. ‘பூவிற்குத் தாமரையே’ என்று திருவள்ளுவ மாலையும், ‘பூவிற்கு அருங்கலம் பொங்கும் தாமரை’ என்று அப்பர் தேவாரமும் குறிப்பிட்டுள்ளதை தழிழ் இலக்கியத்தில் மலர்கள் (ப-37) என்னும் நூல் எடுத்துக்கூறியுள்ளது. தாமரையின் பெயர்களாகப் புண்டரீகம், அம்போருகம், குசேசயம், முண்டகம், அரவிந்தம், முளரி, பங்கயம், வாரீசம், இண்டை, ஆம்புயம், சரோசம், சதபத்திரி, நளினம். கஞ்சம், வனசம் எனப் பதினைந்து பெயர்களைச் சூடாமணி நிகண்டு கூறுகிறது. பதுமம், கமலம் எனப் பரிபாடல் (5,2) கூறுகிறது. தாமரை வண்ணத்தால் வெண்டாமரை, செந்தாமரை என இரு வகையுண்டு. கல்விக்குரியவளாகிய கலைமகள் வெண்டாமரையில் வீற்றிருப்பவள். செல்வத்திற்குரிய திருமகள் செந்தாமரையில் வீற்றிருப்பவள். திருமகளை வள்ளுவர் **“தாமரையுனாள்”**[215] எனச் செந்தாமரை மலரைக் குறிப்பிட்டுள்ளார். புண்டரீகம் என்பது வெண்டாமரைக்குரியது. இதனை, “தவளத் தாமரை” எனக் குமரகுருபரர் குறிப்பிட்டுள்ளார்.

பொதுவாக மலர்களின் இதழ்கள் விரிதலை மலர்தல்- அலர்தல் எனக் கூறுவதுண்டு. அலர்வதால் மலருக்கு ‘அலரி’ என்னும் பெயர் உண்டு. அலரி என்னும் பெயரில் செவ்வலரிப்பூ காணப்படுகிறது. அலர்வதில் பேரழகைப் பெற்றுள்ள தாமரை மலர் நூற்றுக்குக் குறையாத அக இதழ்களைக் கொண்டது, இதனால் தாமரைக்கு நூற்றிதழ் அலரி என்னும் சிறப்புப் பெயர் அமைந்தது. விளக்கைப் போன்ற ஒளி விடுகின்ற மலர் பொருந்திய தாமரையினுடைய களிற்றியானைச் செவி என்பதை,

> **“விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்”** **(நற்-310)**
>
> **“நூற்றிதழ் அலரி”**[216]
>
> **“நூற்றிதழ் தாமரை”**[217]
>
> **“பல்லிதழ் தாமரை”** **(பெருபாண்-403)**

என்பதன் வழியே அறியப்படுகிறது. தாமரைப்பூ பூத்து நிற்கும் காட்சி விளக்கு ஒளி விடுவதையும், மிகுந்த ஒளியுடன் தோன்றுவதைப் போலக்

காணப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. தாமரை சேற்றில் பிறந்தாலும் உயர்ந்த பெருமையினைக் கொண்டது. இதனை விளக்கும் வகையிலே 'சேற்றிலே முளைத்த செந்தாமரை' என உலக வழக்கில் வழங்கப்பட்டு வருகிறது.

**"சேற்றுவார் தாமரை பயந்த ஒண் கேழ்**
**நூற்றிதழ் அலரி நிரைகண்டன்ன**
**வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து**
**வீற்றிருந்தோர்"** **(புறநா-27)**

என நற்குடிப் பிறப்பினை எடுத்துக்கூறுகிறது. இவ்வாறு சேற்றிலே பிறந்த செந்தாமரை வடிவத்தாலும், எழிலாலும், மணத்தாலும் பெரியதாகி பெருமை கொள்வதோடு தெய்வ மலராகவும் தனிப் பெருமையடைந்துள்ளது. தாமரையின் மொட்டு கழுவைப் போன்றிருப்பதாக,

**"கழுநிலந்தன்ன கொழுமுகை"**[218]

என்ற பாடலடி கூறுகிறது. நீண்ட கூர்மையாக இருக்கும் வெண்டாமரை மொட்டைக் கெண்டை மீன்கள் கொக்கென்று எண்ணி மயங்கி விழுகிறதை இலக்கியத்தில் குறிப்பிடுகிறது. தாமரை காலையில் மலந்து மாலையில் சூரியன் மறைந்தவுடன் கூம்பிவிடும் தன்மை கொண்டதை,

**"கன்னி விடியல் கனைக்கால் ஆம்பல்**

**தாமரை போல் மலரும்"**[219]

என்று ஆம்பலை முன் வைத்துக் கூறுவதால், ஆம்பலும், தாமரையும் காலையில் மலரும் பூக்கள் என்பதை அறிய முடிகிறது. தாமரையின் புற இதழ்கள், உள்ளிதழ்களைப் போல மிகுந்த சிவப்பாக இருப்பதில்லை. நிறம் வெளுத்துக் காணப்படும். இது முயலின் செவியை நினைக்கத் தூண்டுவதாக இருக்கிறது.

**"முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையும்**
**நெடுஞ் செவிக் குறு முயல்"**[220]

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார். தாமரை சேறு நிரம்பிய வயல்களில் மிகுதியாகக் காணப்படுவதால்

**“செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை”** **(புறநா-397)**

என்று புறநானூறு கூறுகிறது.

**“செந்தா மரைஇரவி சேர் உதயம் பார்க்குமே”**[221]

என நீதிவெண்பா கூறுகிறது. தாமரைத் தாது மஞ்சள் நிறமுடையது. மகளிரின் மேனியில் உள்ள மாமை நிறத்திற்கு,

**“குண்டு நீர்த் தாமரைக் கோங்கின் அன்ன**
**நுண்பல் தித்தி மாயோன்”** **(குறுந்-300)**

என உவமையாகக் கூறப்பட்டுள்ளது. தாமரை மலரில் உள்ள குளிர்ச்சி நிறைந்த பூந்துகள்களை எடுத்து, சந்தன மரத்தில் தேனடை கட்டியது. அத்தேன் அடையுலுள்ள தேனைப் போல தலைவன், தலைவியருடைய தொடர்பு மிகமிக இனிமையும் உயர்வும் உடையது என்பதை,

**“தாமரைத் தண்தாது ஊதி மீமிசைத்**
**சாந்தின் தொடுத்த தீந்தேன் போல**
**புரைய மன்ற புரையோர் கேண்மை”** **(நற்-1)**

என நற்றிணை உயர்வாக எடுத்தியம்புகிறது. தலைவன் தெளிந்த நீரில் பூத்த தாமரைப்பூப் போன்றவன் என்பதை,

**“……தென்னீர்ப்**
**போது அவிழ் தாமரை அன்னநின்**
**காதலம் புதல்வன்”** **(ஐங்-424)**

என்ற பாடல் சுட்டுகிறது. பொன்னை நெருப்பில் உருக்கி தாமரைப்பூ செய்து, அதைப் பொன் கம்பியால் கோர்த்து மாலையாக்கி, அம்மாலையை உலர்ந்த கரிய தலை மயிரில் பாணர் சூடுவர் என்பதை,

**“அழல் புரிந்த அடர்தாமரை**
**ஐது அடர்ந்த நூல் பெய்து**

**புனை வினைப் பொலிந்த பொலன் நறுந்தெரியல்**

**பாறுமயிர் இருந்தலை பொலியச் சூடி**

**பாண்''** **(புறநா-29)**

எனப் புறநானூற்று வழியே அறிந்து கொள்ளலாம்.

**''முற்றிஇழை மகளிர் முகிழ்முலை திளைப்பவும்**

**செஞ்சாந்து சிதைந்த மார்பின்''** **(பட்டின-296)**

எனவும்,

**''புனைதார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்**

**மலர்போல மழைக்கண் மங்கையர் கணவன்''** **(மலைபடு-56)**

எனவும் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. வளமான இதழைக் கொண்ட தாமரைப் பூவையும், நெய்தல் பூவையும் பறித்துச் சூடிக்கொண்ட பெண்கள், அடுத்துள்ள முல்லை நிலம் சென்று கிளிகளை ஓட்டிவிட்டுப் பாடுவதை,

**''வள் இதழ்த் தாமரை நெய்தலொடு அரிந்து**

**மேல் இயல் மகளிர் ஒல்குவனர் இயலி**

**கிளிகடி மேவலர் புறவுதொறும் நுவல''** **(பதிற்று-88)**

எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

**இலக்கியங்களில் அறிவியல் கருத்துக்கள்**

"உலகம் வியக்கும் நிலையில் பல்துறை அறிவியலாளரால் ஆய்வு செய்யப்பட்டு 'நேச்சர்' இதழில் வெளிவந்த நுட்பமான கண்டு பிடிப்பினை 2000 ஆண்டுகளுக்கு முன்பே நம் சங்ககாலத் தமிழர்கள் அறிந்திருந்தனா"[222] எனக் கூறப்பட்டுள்ளது. தாமரையின் தாவரச் சூழல் தன்மை மனித மன நுட்பத்தினையும், உடல் நுட்பத்தினையும் விளக்கும் தன்மையையும் நோக்கும் பொழுது சங்கப் புலவர்கள் இயற்கை அறிவியலை மிக நுட்பத்துடன் அறிந்திருந்தனர் என்பதை,

**''மன் உயிர் அறியாத் துன் அரும் பொதியில்**

**சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப,**

**வேனிலானே தண்ணியன் : பனியே,**

**வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி, ஐயென**

**அலங்கு வெயிற் பொதிந்த தாமரை**

**உள்ளகத்தன்ன சிறு வெண்மையளே'' (குறுந்-376)**

என்ற இப்பாடல் விளக்குகின்றது. தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறியதாக அமைந்த இப்பாடலில் மக்கள் அணுக முடியாத உயரமான உள்காட்டினுள் வளர்ந்த சந்தனத்தின் குளிர்ச்சி போல், வேனிற் காலத்திலும் குளிர்ச்சியுடையவளாகத் தலைவி இருக்கிறாள். பொய்கையில் மலர்ந்த தாமரை பனிக்காலத்தில் சூரியக் கதிர்கள் மறைந்த பின்பு வெப்பத்தை உள் வாங்கிக் கொண்டு பொதிந்து திகழும். தலைவியும் மேனியினுள் சிறு வெப்பத்தைக் கொண்டவளாகக் காணப்படுகிறாள். இதில் தாமரைக் குளம் மிகுந்த குளிர்ச்சியைப் பெற்றிருந்தாலும், குளிர்ச்சியின் தாக்கம் தாமரையைச் சூழ்ந்த போதிலும், அதற்கு மாறாக உட்புறத்தில் சிறு வெண்மையுடன் வெதுவெதுப்பை எப்போதும் தாமரை தன்னகத்தே பொதிந்துள்ளது என்பது சங்ககாலத் தமிழரின் அறிவியல் நுட்பத்தை தெளிவுபடுத்துகிறது.

**தமிழர் பண்பாட்டில் தாமரை**

"தாமரையின் தனித்தன்மை தானும், தன்னோடு சேர்ந்தவற்றையும் தூய்மையாக்கும் பண்பாகும். எனவே தெய்வங்கள் தங்கும் இடமாகத் தாமரை சுட்டப்பெறுகிறது. தமிழரின் அறிவியல் பூர்வமான அடிப்படையிலே மெய்யியல் குறியீடாகத் தாமரையைப் பயன்படுத்தினார்கள்"[223] என செ. வைத்தியலிங்கன் குறிப்பிட்டுள்ளார்.

**''தூமலர்த் தாமரைப் பூவின் அம்கன்'' (அகநா.361)**

**''வரிநுதல் எழில்வேழம் பூ நீர் மேல் சொரிதர,**

**புரிநெகிழ் தாமரை மலர் அம்ன் வீறு எய்தி,**

**திருநயத்து இருந்தன்ன தேம்கமழ் விறல் வெற்ப'' (கலித்-44)**

இச்சங்கப் பாடல்களின் அடிப்படையில் வழிபாட்டு இடங்களுக்கு முன்பு நீர்நிலைகளை அமைப்பது தமிழர் மரபாக அமைந்துள்ளது. ஆந்நீர் பல்வேறு பண்பாட்டு நிலையிலும் தூய்மையாக இருக்க வேண்டும் என்று எண்ணித் தாமரை மலர்களைக் கோயில் குளங்களில் வளர்த்து வந்துள்ளனர். நீரிலே உண்டாகப் பூத்த கடவுள் சூடுதற்குரிய ஒள்ளிய தாமரைப்பூ என்றும், நான்முகங்களையுடைய நீல நிறத்தை உடைத்தாகிய வடிவினையுடைய திருமாலுடைய திருவுந்தியாகிய பல இதழ்களையுடைய தாமரை மலர் என்றும் இலக்கியங்கள் கூறுகின்றன. இவற்றை,

**“நீல்நிற உருவின், நெடியோன் கொப்பூழ்**

**நானமுக ஒருவற் பயந்தபல் இதழ்த் தாமரை”** [224]

எனப் பெரும்பாணற்றுப்படையும் எடுத்துக் கூறுகிறது.

**ஆம்பல்**

ஆம்பல் பொய்கையிலும், கழனியிலும் மிகுதியாக மலர்ந்திருக்கும். சுனைகளிலும் சில இடங்களில் காண முடிகிறது.ஆம்பல் மொட்டுக் கூம்பியிருக்கும் கொக்கைப் போல காட்சியளிப்பதாக,

**“கொக்கின் கூம்பு நிலையினனமுடைய**

**ஆம்பல்”** **(நற்-28)**

என நற்றிணை கூறுகிறது. இது நீரில் வளரும் ‘கொடி’கொடியில் முள் போன்ற அமைப்பு இருப்பதனை,

**“அம்முள் நெடுங்கொடி அருவி ஆம்பல்”** **(அகநா.96)**

எனக் கூறுகிறது. கார் காலத்தில் மழை பெய்து, நீர்நிலைகள் நிறைந்திருக்கும் போது மிகுதியாக மலரும். அதனால் **“மாரி ஆம்பல்” (குறுந்-117)** என்றும் அழைக்கப்படுகிறது. காலையில் நெய்தல் மலர்களுடன் மலர்ந்து மாலையில் குவியும் என்பதை,

**“நீரார் செறுவில் நெய்தலொடு நீடிய**

**நேரிதழ் ஆம்பல் நிரையிதழ்”** **(கலித்-75)**

என்று கலித்தொகையும்,

**“குண்டு நீர் ஆம்பலும் கூம்பின இனியே**

**வந்தன்று வாழியோ மாலை”** **(குறுந்-122)**

எனக் குறுந்தொகையும் கூறுகின்றன. இரவில் மலரும் ஆம்பல் இனங்களும் உள்ளன என்பதை,

**“ஆம்பல் ஆயிதழ் கூம்புவிட வளமனைப்**

**பூங்கொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி”** **(குறிஞ்சி-223)**

என்றும்,

**“மதிநோக்கி அலர் வீத்த ஆம்பல் வான்மலர்”** **(கலித்-72)**

என்றும் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. ஆம்பல் குளிர்ச்சியுடைய மலர் அதனால் **“ஆம்பல் மலரினும் தான தண்ணியன்” (குறுந்-84)** என்று அதன் தன்மை தலைவியின் மேனித் தன்மையுடன் உவமித்துக் கூறப்படுகிறது.

மாலை வேளையில் மலரக் காத்திருக்கும் போது, நீரில் சிறு அசைவு ஏற்பட்டவுடன் அதன் பிணி அவிழ்ந்து விடும் என்பதை,

**“சிறு வெண் காக்கை அவித்தன்ன**

**வேளிய விரியும்”** **(நற்-345)**

என்கிறது. ஆம்பற்பூ வாடிய பிறகு அதன் வனப்பும் மாறி விடுகிறது. பூவின் வாடலை குருவியின் இறகின் தோற்றத்துக்கு உவமையாக்கி,

**“ஆம்பற் பூவின் சாம்பலன்ன**

**கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ”** **(குறுந்-46)**

எனக் குறுந்தொகை எடுத்தியம்புகிறது. தலைவி, நீரில் வளரக் கூடிய அல்லியின் உள்துளை பொருந்திய தன்டினுடைய நாரை உரித்தாற் போன்ற அழகு குறைந்த மாமை நிறம் உடையவள் என்பதை,

**“நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரர்கால்**

**நார் உரித் தன்ன மதன்இல் மாமைக்”** **(நற்-6)**

என்ற நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது. பொய்கையில் உயர்ந்த அழகிய உள்துளை கொண்ட திரண்ட தண்டில் உள்ள ஆம்பல் மலரைப் பறிப்போர் நீர் வேட்கை கொண்டது போல, தலைவன் தலைவியோடு இருந்தும் வருந்தினான் என்பது,

**“……பழனத்து**

**ஏந்து எழில் மலர தூம்புடைத் திரள்கால்**

**ஆம்பல் குறுநர் நீர்வேட டாங்கு இவள்”** **(குறுந்-178)**

**“பொய்கை பூத்த புழைக்கால் ஆம்பல்”** **(ஐங்-34)**

**“மதிநோக்கி அலர் வீழ்த்த ஆம்பல்வான்”** **(கலித்-27)**

எனச் சங்க இலக்கியப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. அரும்பாக இருந்து மலர்ந்த ஆம்பல் பூவைப் போன்றது மது உண்ணும் கலம் என்பதை,

**“கூம்புவிடு மென்பினி அவிழ்ந்த ஆம்பல்”** **(புறம்-383)**

எனவும், துணங்கைக் கூத்து ஆடிய இடத்தில் சிந்திய ஆம்பல் பூக்களை முதிய பசு தின்பதை,

**“கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**

**வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்”** **(பதிற்று -23)**

எனவும் பாடல்கள் வழியே காணலாம்.

**செவ்வாம்பல்**

ஆம்பலில் செவ்வாம்பல், வெள்ளாம்பல் என்ற இருவகை உண்டு. இவற்றில் செந்நிறம் உடையது செவ்வாம்பல்.

**"செவ்வாய் ஆம்பல்"** **(பரி-8)**

என்று செவ்வாம்பலையும், இனிய மொழிகளைப் பேசும் புதல்வனது சிவந்த வாயினின்றொழுகும் நீரால் சிதைந்த சந்தனப் பூச்சுடன் இருந்ததை,

**"......தேமொழிப் புதல்வன்**

**செவ்வாய் சிதைந்த சாந்தமொ டவ்வாய்க்"** **(நற்-250)**

எனவும் செவ்வாம்பல் மலர் போலத் தோன்றுகின்றது என்பதையும் நற்றிணை வழியே அறியமுடிகிறது.

**"வெள்ளாம்பல் சேதானம்பல் என்றிரு விசுற்பம்"** **(பிங்.நிக-3021)**

எனப் பிங்கல நிகண்டு கூறுகிறது.

**"நாற்ற நாட்டத்து அறுபாற் பறவை,**

**சிறு வெள் ஆம்பல் ஞாங்கர் ஊதும்"**[225]

எனப் புறநானூறு புலப்படுத்துகிறது.

**வெள்ளாம்பல்**

ஆம்பலில் வெண்மையாகக் காணப்படுவது வெள்ளாம்பல். இதனை,

**"வயல் வெள்ளாம்பல் உருவ நெறித்தழை"** **(நற்-39)**

என்ற அடி உணர்த்துகின்றது. வயலிலுள்ள வெளிய ஆம்பலின் அழகிய நெறிப்பையுடைய தழையை அழகுபெற உடுத்தியதை,

**"வயல் வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்**

**கன்னுடைப புனிற்ற தின்ற மிச்சில்"** **(நற்-290)**

**"சிறு வெள்ளாம்பல் அல்லி உண்ணும்"** **(புறநா-280)**

எனும் அடிகள் சுட்டுகின்றன. நெல்தாளோடு அறுபட்ட வயலில் பூத்த வெள் ஆம்பலின் புதுப்பூவை கன்று ஈன்ற பசு தின்னும், மீதியைப் பிணையில் இருந்து அவிழ்த்து விடப்பட்ட ஓய்ந்து போன எருதுகள் தின்னும் என்பதை நற்றிணை கூறுகிறது.

**நீலம்**

இது சுனையில் மிகுதியாக மலரும் பூ. இது நீல நிறமும், நீண்ட இதழ்களையும் உடையது. மலையில் உள்ள சுனைகள் தோறும் கண்போலக் கருங்குவளைப் பூக்கள் மலர்ந்தன. இதனை,

**"கண்போல் நீலம் சுனைதொறும் மலர"** **(நற்-161)**

என்ற நற்றிணைப் பாடலும்,

**"நீடிதழ்த் தலைஇய கவின் பெற நிலம்**

**கண்ணென மலர்ந்த சுனை"** **(அகநா.38)**

என்ற அகநானூற்றுப் பாடலும் கூறுகிறது. வாடைக்காலத்தில் நீலப் பூக்கள் மிகுதியாகப் பூக்கும் என்பதை,

**"ஊதை அவிழ்த்த உடையிதழ் ஒண்நீலம்"** **(பரி-11)**

என்ற அடி குறிப்பிடுகின்றது. நீல மலர்கள் பல இதழ்களைக் கொண்டுள்ளதை,

**"பல்இதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்**

**தண் துறை"** **(ஐங்-2)**

என்ற அடிகளும்,கழி, பொய்கை இவைகளிலும் இது மலர்ந்து காணப்படும் என்பதை,

**"இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்"**[226]

என்ற அடியும்,

**"தீ, நீர்ப் பொய்கை**

**ஆடையிறந்து அவிழ்ந்து தண்கமழ் நீலம்"**[227]

என்ற அகநானூற்று அடிகளும் கூறுகின்றன. மலர்ந்த மழைத்துளி தங்கிய நீலமலர்களை ஒத்த கை விரல்கள் என்பதையும்,

**“……..மலர்ந்த**

**பெயலுறு நீலம் போன்றன விரலே”** **(நற்-379)**

என்றும், நீண்டுற்று என் கண்போல் நின்ற நீல மலர் தண்ணியவாய் மணம் மிகும் மலை நாடானை நினைக்கும் நிலையை,

**“……வார்ந்துறைந்தென்**

**கண் போல் நீலக் தண்கமழ் சிறக்குங்”** **(நற்-273)**

எனவும் நற்றிணைப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. வாடைக்காற்று நீரில் உள்ள கருங்குவளையின் புதிய பேரரும்பை அசைத்ததை,

**“………நீர**

**நீலம் பைம்போது உளரி”** **(குறுந்-110)**

எனவும் தாமரைப் பூவில் இருந்த வண்டு, பூ விற்பவர் பறித்த நீலப் பூவிற்குத் தாவியதை,

**“வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயல் கொண்ட”** **(கலித்-1)**

எனக் கலித்தொகையும், சுனைகளில் திருமாலின் மேனியைப் போன்ற நீலப்பூக்கள் உள்ளதை,

**“சுனையெலாம் நீலம் மலரச் சுனைசூழ்”** **(பரி-15)**

எனப் பரிபாடலும் எடுத்துரைக்கின்றன..

**குவளை**

குவளை மலர் மலைப் பக்கத்திலுள்ள சுனைகளில் மிகுதியாகப் பூத்திருக்கும். **“பறியாக் குவளை மலலோடு காந்தள்” (நற்-34)** குவளை மலரைப் பறித்து அவற்றோடு குருதி போன்ற காந்தள் எனக் கூறுகிறன. கழி, பொய்கை போன்றவற்றில் வளர்ந்திருக்கும் என்பதை,

**“பைஞ்சுனைப் பாசடை சிவந்த பனிமலர்க் குவளை”** **(பரி-15)**

**“கயத்துவளர் குவளை”** **(ஐங்-277)**

என்று ஐங்குநுறூற்றில் கூறப்படுகிறன. குவளை சிவப்பு நிறமும், நீல நிறமும் உடையதை,

**“அரக்கிதழ்க் குவளை”** **(பெரும்பாண்-293)**

என்றும்

**“மயிரிதழ்க் குவளை”** **(பட்டின-341)**

என்றும் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இது மணம் நிறைந்தது என்பதை,

**“பெரும்பல் குவளைச் சுரும்புட்டு பன்மலர்**
**திறந்து மோந்தன்ன சிறந்து கமழ்**
**நாற்றத்துக் கொண்டல் மலர்ப் புதல்”**[228]

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. குவளை மலர் மையுண்ட கண்களுக்கு உவமைபடுத்தப்படுகிறது. குவளை மலர்கள் காலையில் மலர்ந்து, மாலையில் கூம்பும். இதன் மொட்டுகள் கூம்பு போன்ற அமைப்பில் இருப்பதை,

**“குவளை கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து**
**அரில்படு வள்ளை ஆல் கொடி மயக்கித்**
**தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது**
**கயிற்றெற கதச்சே”** **(அகநா.36)**

என்ற அடிகள் சுட்டுகிறன. குவளை மலர் காலை நேரத்தில் மலரும் என அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. இம் மலர் மிகவும் மென்மைத் தன்மை வாய்ந்தது வண்டு உழக்கச் சிதைத்து விடும் தன்மையுடையது என்பதை,

**“குவளை வண்டுபடு மலரிற் சா அய்த்**
**தமியேன் மன்ற அளியேன்”** **(குறுந்-30)**

என்ற குறுந்தொகை அடிகள் விளக்குகின்றன. குவளை மலர் மிகுதியான இதழ்களை உடையது. குவளையைப் **"பல்லிதழ்"**[229] என்று அழைத்தனர். வீடுகளிலும் குவளை மலரைத் தாழி போன்ற பூந்தொட்டிகளில் வைத்து வளர்த்தனர். அதனைத் **"தாழிக் குவளை வாடு மலர் சூட்டி" (அகம்-165)** என்று அறியப்படுகிறது. குவளையில் செங்குவளை, நீலக் குவளை ஆகிய இரு இனங்கள் உள்ளன. சங்கப் பாடல்களில் உவமையாக இம்மலர் பயன்படுத்தப்படுகிறது. பெண்களின் கூந்தலில் குவளை மலரின் மணம் வீசுவதை,

**"குவளை நாறும் குவை இருங்கூந்தல்" (குறுந்-300)**

எனக் குறுந்தொகை எடுத்துக்கூறுகின்றது. தம்முடைய கரிய கூந்தலின் வெண்மையான தலையில் மாலையைச் சூடிக்கொண்டனர். ஆடவரோடு கூடிய பிறகும் வளையல் ஒலிக்க கைவீசி நடந்து செல்லும் போது தலையில் இருந்த மலர்கள் சிதறின. அதனால் பெரிய வண்டுகளால் மலர்த்தப்படுவதைப் போலவும், குவளை மலர்களைக் கையால் முகரும் போது மிகுந்த மணம் வீசியதும் உணரப்படுகின்றன. அப்பூக்களை மழையில் பூத்த பூக்களைப் போல தம் தலையில் சூடிக் கொண்டனர். இதனை,

**"ஆய்கோல் அவிர்தொடி விளங்க வீசிப்**
**போது அவித் புதுமலர் தெருவுடன் கமழ**
**மேதகு தகைய புதுநலம் எய்திப்**
**பெரும்பல் குவளைச் சுரும்புபடு பன்மலர்**
**திறந்துமோந் தன்ன சிறந்துகமழ் நாற்றத்துக்**
**கொண்டல் மலர்ப்புதல் மானப்பூ வேய்ந்து" (மதுரை-563-568)**

என மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கிறது. இளமையையுடைய காதலியின் குவளை போன்ற மையுண்ட கண் மகிழ்ச்சியையுடையது என மைதீட்டிய பெண்களின் கண்களுக்கு இப்பூ உவமையாக் கூறப்படுகிறது. கதவுகளை மூடுவதற்கும் திறப்பதற்கும் அவற்றில் கைப்பிடிகள் வைத்தனர். அப்பிடிகள் மலர்ந்த செங்கழுநீர்ப்பூ வடிவத்தில் செய்யப் பெற்றிருந்ததை,

**"போது அவிழ் குவளைப் புதுப்பிடிகால் அமைத்து" (நெடுநெ-83)**

எனவும், பறம்பு மலையின் சுனையில் அரும்பாக இருந்து பூத்த முழு செங்கழுநீர்ப் பூக்களைத் தழையாடையில் கொண்டு தம் இடையில் கட்டி இருப்பர் அம்மலைவாழ் பெண்கள் என்பதை,

**"......சுனைப்பூத்த குவளைக்**

**கூம்பு அவிழ் முழுநெறி புரள் வரும் அல்குல்**

**........மகளிர்" (புறம்-116)**

எனும் இவ்வடிகள் குறிப்பிடுகின்றன. ஆண்டு முழுவதும் பூக்கும் குவளைப்பூ, அம்முழுப் பூவுடன் மலர்ந்த ஆம்பல் பூவையும் அகப்படும்படித் தொடுத்த தழையாடையே உடுத்தியவர் சிறு பெண்கள் என்பதை,

**"தொடர்ந்த குவளைத் துநெறி அடைச்சி**

**அலர்ந்த ஆம்பல் அகமடி வையர்" (பதிற்று-32)**

என்கிறது பதிற்றுப்பத்து. மகளிர் குவளை மலருடன் கூடிய தழையாடையைச் சூடினர் என்பதும் புலப்படுகிறது

**நெய்தல்**

நெய்தல் மலர் கடற்கரைகளில் மிகுதியாகப் பூக்கும். இதன் சிறப்பினால் நெய்தல் நிலம் என்றழைக்கப்பட்டது. கருநீலமுடைய நெய்தல், மணிக் குலைக் கள் கமழ் நெய்தல் என இரு வகையில் நெய்தல் காணப்படுகிறது. அவற்றுள் கரு நீள் நறு நெய்தல் நீண்ட வாசனையுடைய நெய்தல் பூவாகும். இதன் காம்பு நீண்டது, சுனைகளிலும், குளங்களிலும் பூக்கும் எனக் குறிஞ்சிப்பாட்டில் (அடி79) ,மணிக்குலைக் கள் கமழ் நெய்தல் குறுகிய காம்பினை உடையது. இது வயல்களில் பூக்கும் என்று (அடி84) தெளிவுபடுத்துகின்றது. கருநீலமுடைய நெய்தல் பெரும்பான்மையும் கழிகளிலே காணப்படும். கழனி, கயங்களிலும் ஆங்காங்கு உள்ளன. மணிப்பூ நெய்தல் என்பது நலம் பெற்ற அழகிய குளிர்ந்த கண்ணிற்கு நெய்தல் மலரை உவமையாக்கி மகிழ்வர் என்பதை இலக்கியங்களில்,

**"கண்நேர் ஒப்பின் கமழ் நறு நெய்தல்" (நற்-283)**

**"கண்போல் நெய்தல் போர்விற் பூக்குந்" (நற்-8)**

**“இருங்கழி நெய்தல்”** **(குறு-336)**

**“பெருந்தண் நெய்தல் மணியோர் மான்நலம் ஒரீஇ**

**பொன்னேர் வண்ணங் கொண்ட என்கண்”** **(அகநா.270)**

என்றவாறு காணலாம். நெய்தல் வைகறையில் மலரும் என்பதை,

**“வைகறைக் கட்கமழ் நெய்தல் ஊதி”** **(முருகு-74)**

**“வைகறை மலரும் நெய்தல்”** **(ஐங்-138)**

என ஐங்குறுநூறு கூறுகிறது. மாலை நேரத்தில் இம்மலர் கூம்புடன் மிகுதியாக மலர்ந்திருக்கும் காட்சி நீலமணி நிறைந்த பொதியை அவிழ்த்துவிட்டாற் போன்று காட்சியளிக்கும். இதனை,

**“ஆய் மணிப் பெறி அவிழ்ந்தாங்கு நெய்தற்**
**பல்லிதழ்ப் பொதிந்த பூத்த மிதிக்கும்**
**பரதவர்”** **(நற்-239)**

என நற்றிணைச் சுட்டியுள்ளது. நெய்தல் குலையாக மலர்ந்து மணம் வீசும் மணிக்குலைக் கட்கமழ் நெய்தல் எனச் குறிஞ்சிப் பாட்டு கூறுகிறது. நெய்தல் உட்துளையுடையது என்பதை,

**“நெய்தல் நீர்ப்படர் தூம்பின் மலர்”** **(ஐங்-109)**

என ஐங்குறுநூறு கூறுகிறது. ‘தூம்பின் பூ உட் துளையையுடைய பூ’ என்று உ.வே.சா. விளக்கம் கூறுகிறார். நெய்தலின் காம்பு திரட்சியுடையது. இதனை,

**“பாசடை நிவந்த கணைக்கால்”** **(குறுந்-9)**

என்ற அடி சான்று பகர்கின்றது. திரண்ட தண்டினை உடையது நெய்தல் மலர் என்பதை,

**“கணைக்கான் மாமலர் காப்ப மல்குகழித்”** **(நற்-67)**

**பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்”** **(நற்-11)**

**“கழியே, சிறுகுரல் நெய்தலோடு காவி கூம்ப”** **(அகநா.240)**

**“மணிப்பூ நெய்தல் மார்கழி நிவப்ப”** **(நற்-138)**

**“இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர**
**வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்”** **(நற்-117)**

**“……..கழிசேர்பு**
**கானல் பெண்ணத் தேறுடை அழிபழம்**
**வள்ளிதழ் நெய்தல் வருந்த முக்கிறுபு”** **(நற்-372)**

எனஇலக்கியஙகள் கூறுகின்றன. நெய்தற் செடியின் இலை ‘பாசடை’ என்று அழைக்கப்படுகிறது. நீரில் வாழும் தாமரை, ஆம்பல் கொடிகளின் இலைகள் ‘அடை’ என்று வழஙகப்படுகிறது. சங்க இலக்கியத்தில் நெய்தலின் இலை தாமரையைப் பார்க்கினும் சிறியதாக இருப்பதால் ‘சிறுபாசடைய நெய்தல்’ என நற்றிணை (27) கூறுகிறது. சேறு நிறைந்த செழிப்பான இடங்களில் நெய்தல் இடையறாது பூக்கும் தன்மையும், நறுமணமும், தேனும் நிறைந்தது. கரும்பைவிட இனிப்பான நெய்தல் மலரை எருமைகள் விரும்பி உண்கிறது என்பதைப் பதிற்றுப்பத்து கூறுகின்றது. தொண்டை நாட்டு உழவர்தம் பிள்ளைகள் நெய்தல் பூக்களைச் சூடிக்கொள்வர். செங்கரும்பின் சாற்றைக் காய்ச்சும் போது உண்டான வெப்பத்தால் நீர் நிரம்பிய வயலில் உள்ள உயர்ந்த நெய்தல் பூக்கள் தம் அழகு கெட்டு வாடியதை,

**“தார்க் கரும்பின் கமழ் ஆலை**
**தீத் தெறிவின் கவின்வாடி**
**நீர்ச் செறுவின் நீள் நெய்தல்**
**பூச் சாம்பும்”**[230]

எனப் பட்டினப்பாலை உணர்த்துகிறது. பெண்களின் மைதீட்டிய கண்கள் குளத்திலுள்ள நெய்தலின் அரும்புகள் மலர்ந்து மனம் பரப்பினாற் போன்றது,

**“கயவாய நெய்தல் அலர் கமழ்முகை மணநகை”** **(பரி-8)**

எனப் பரிபாடல் நயம்படக் கூறுகிறது. நெய்தல் பூத்திருக்கும் பகுதியை **"நெய்தற் படப்பை" (திணைமொழி-41)** என்பர். இம்மலர்களைக் கண்ணியாகக் கட்டி அணிந்து கொள்வர் எனக் குறுந்தொகை உணர்த்துகிறது.

**"……...நெய்தல் குற்றும்**

**புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு" (நற்-249)**

என நற்றிணையில் நெய்தல் தளிரையும் மலரையும் கொய்து கொடுத்தனர். அழகிய நீலமணிகளின் குவியலை விரித்துப் பரப்பியது போன்றன நெய்தலின் புறவிதழின் முடிய மலர்கள் என்கின்றது.

**"…….நெய்தற்**

**புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்" (நற்-239)**

என்று சுட்டப்பட்டுள்ளது. நெய்தல் பூவின் இதழ் வேல் வடிவில் இருக்கும். சங்க இலக்கியத்தில் மிகுதியாகப் பேசப்பட்ட மலர்களுள் நெய்தல் மலரும் ஒன்றாகும். குறிஞ்சிப் பாடலை நெய்தல் நிலப் பரதவர் பாடினர். அப்பரதவர் சூடிய நெய்தல் பூத் தலைமாலையைக் குறிஞ்சி நிலக் குறவர் சூடினர். இவ்வாறு வேறுபாடற்ற சமுதாயங்களைப் பூக்கள் வழி அறிய முடிகிறது.

**"குறிஞ்சிப் பரதவர் பாட நெய்தல்**

**நறும்பூங்கண்ணி குறவர் சூட" (பொரு.ஆற்-218)**

உழத்தியர் வயலில் பயிர்களுக்கிடையில் களையாக இருந்த நெய்தல் செடிகளை அவற்றின் பூக்களோடு களைந்து அறிந்தனர். அப்பூக்கள் தேன் மணம் வீசின என்பதை,

**"களைஞர் தந்த கணைக்கால் நெய்தல்**

**குள் கமழ் புதுப்பூ" (பெரும்பாண்-219)**

என பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது. உழவர்கள் களை எடுக்கும் போது வண்டுகள் உண்டதால் மலர்ந்த மணம் நிலத்தில், நீண்ட வரப்பில் வாடாவிட்டாலும், அக்கொடி மீண்டும் பிடுங்கிய வயலிலேயே பூக்கும் நெய்தல் பூ என்பதை,

**“கைவனை மாக்கள் தம் செய்வினை முடிமார்**

**கரும்புஉண மலர்ந்த வாசம் கீழ்ப்பட**

**நீடின வரம்பின் வாடிய விடினும்**

**கொடியர்ஓ நிலம் பெயர்ந்து உறைவேம் என்னாது**

**பேயர்த்தும் கடிந்த செறுவில் பூக்கும்**

**. . . . . நெய்தல்”** **(குறுந்-309)**

எனக் குறுந்தொகை கூறுகிறது. கோதை என்னும் தலைமாலை அணிந்தவர் என்றும், கரிய உப்பங்கழியில் நெய்தல் மலர்ந்திருந்தது. கோதை மன்னனின் தொண்டித் துறைமுகம் தேன் மணம் பெற்றதை.

**“கோதை மார்பின் கோதை யானும்**

**கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்**

**மாக்கழி மலர்ந்த நெய்த லானும்**

**கள்நா றும்மே கானலந் தொண்டி”**[231]

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. செந்நெல்தாள் அறுக்கின்றவர் தம் அரிவாளால் நெய்தல் செடி புண்ணுறும்படி அறுத்தனர். நெல்தாளோடு கட்டிக் களத்திற்குக் கொண்டு வந்தனர். அந்நெய்தல் அரும்பு அரிவாளோடும், நெற்கதிரோடும் களத்தில் கிடந்தது. தனக்குற்ற துன்பத்தை அறியாத அச்செடி எறிக்கும் வெயில் வந்தபோது மெல்ல மெல்லத் தன் இனிய தூக்கத்தியிருந்து விடுபட்டுத் தன் அரும்பை மலர்த்தியது அது அறிவற்ற நெய்தல் என்பதை,

**“செந்நெல் அரிநர் கூர்வாள் புண்ணுறக்**

**காணாா முதலொடு போந்தெனப் பூவே**

**படையொடும் கதிரொடும் மயங்கிய படுக்கைத்**

**தன்உறு விழுமம் அறியா மென்மெலத்**

**தெறுகதிர் இன்துயில பசுவாய் கிறக்கும்**

**பேதை நெய்தல்”** **(நற்-275)**

என நற்றிணை விளக்குகிறது.

**“காதலர் சென்ற ஆறே**

**நிலன் அணி நெய்தல் மலரப்''** **(ஐங்-435)**

என ஐங்குறுநூறும்,

**''எறிசுறா வான்மருப்புக் கோத்து நெறிசெய்த**

**நெய்தல் நெடுநார்ப் பிணித்து கை ஊர் வினை''** **(கலித்-14)**

எனக் கலித்தொகையும் எடுத்துரைக்கின்றது. நெய்தல் பூக்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து கட்டிய நிலையில் சுட்டப்பெற்றுள்ளன.

**பூக்களின் அடிப்படையில் அட்டவணை**

| வ.எண் | கோட்டுப்பூ | கொடிப்பூ | நிலப்பூ | நீர்ப்பூ |
|---|---|---|---|---|
| 1. | இருப்பை | அதிரல் | **செடிப்பூக்கள்** எருக்கு(புழுகு) | தாமரை |
| 2. | கடம்பு | அடும்பு | குறிஞ்சி | குவளை |
| 3. | காயா(காசா) | ஈங்கை | எருவை(நாணல்) | ஆம்பல் |
| 4. | குருந்து (புனவெலுமிச்சை) | உழிஞை | குல்லை(கஞ்சங்குல்லை) | செவ்வாம்பல் |
| 5. | கொன்றை(சரகொன்றை) | காந்தள் | களாப்பூ | வெள்ளாம்பல் |
| 6. | கோங்கம் | குருக்கத்தி(மாதவிக்கொடி) | வாடாமலர் | நீலம் |
| 7. | ஞாழல் | குளவி(மரமல்லிகை) | பித்திகம் (சிறுசென்பகப்பூ) | நெய்தல் |
| 8. | நொச்சி(சிந்துவாரம்) | துளவம(மஞ்சள் முல்லை) | **புதர்ப்பூக்கள்** பூளை(சிறுபூளை) | |
| 9. | பாலை | பகன்றை(சிவதைக்கொடி) | பிடவம் | |
| 10. | பாதிரி | பீர்க்கு(பீரம்) | எறுழ் | |
| 11. | புன்னை | முண்டகம்(கடன்முள்ளி) | ஆவிரை | |
| 12. | மருதம் | முல்லை | கருவிளை | |
| 13. | மாம்பூ | மேளவல் (காட்டுமல்லிகை) | தோன்றி(செங்காந்தள்) | |
| 14. | வெண்கடம்பு(மராஅம்) | தமலாக்கொடி | கூவளம்(கூதாளி) | |
| 15. | ஆசினிப்பூ | நறவம் | **புல்லிப்பூக்கள்**கரும்பு | |
| 16. | செம்முருங்கு | நறுமோரோடம் (செங்கருங்காலி) | கைதை(தாழம்பூ) | |
| 17. | ஆத்தி | வயலைக்கொடி | பனங்குருத்து | |

| | | | | |
|---|---|---|---|---|
| 18. | கூவிழளம்(வில்வம்) | வெண்காந்தள (கோடல்) | வாழை | |
| 19. | சந்தனப்பூ | | தாழை | |
| 20. | குரா(குரவம்) | | | |
| 21. | குமிழம்பூ | | | |
| 22. | வேங்கை | | | |
| 23. | சுரிதகம்(திருகுப்பூ) | | | |

**தொகுப்புரை**

- பூவிற்கு ‘மலா்’ என்ற சொல் பயன்படுத்தப்பட்டாலும் பூ என்ற சொல்லே பெரு வழக்காக உள்ளது. மலா் என்பதற்கு மலா்ச்சியானது, தோன்றுதல், நிறைதல், விரிதல், மொட்டுவிழ்தல் என்று பல பொருள்கள் உள்ளன.

- பூ என்பது பொதுப் பெயராகும். பூவிற்கு மலா், போது, அலா், தாா், தாமம், வீ, இணா், துணா், சமணம், குசுமம் என்றும், மலருக்கு வீ, மலா், அலா், பூ, புழல் என்றும் சுட்டப்படுகின்றன.

- வகை என்பதற்கு ஒரே ரகம், இனம், பிரிவு என்று தமிழகராதி விளக்கமளிக்கிறது.

- ஆய்விற்குறிய நற்றிணையில் பூக்கள் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீா்ப்பூ என நான்கு வகைகளில் இடம்பெற்றுள்ளன. அலா், அலாி, பூ என்பன கொடிப்பூ, கோட்டுப்பூ, நீா்ப்பூ ஆகிய எல்லா இன மலா்களையும் குறிக்கும் பொதுச் சொல்லாகும். நீாில் மலா்ந்த மலா்களைக் குற்றி என்று வழங்கியுள்ளனா்.

- நால்வகைப் பூக்களும் நால்வகை நிலத்தின் அடிப்படையில் மலை-குறிஞ்சி, காடு-முல்லை, வளநிலம்-மருதம், நீா்-நெய்தல் என்று சிறப்பிக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி நிலத்தில் பூக்கும் மலா்களைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப்பாட்டில் மலைப்பூ, நிலப்பூ, சினைப்பூ என்று சுட்டப்பட்டுள்ளன.

- சங்க இலக்கியம் சுட்டும் மலா்களைப் பொதுவாக நிலப்பூ, நீா்ப்பூ என இருவகைகளால் கூறலாம். நிலப்பூக்களைக் கோட்டுப்பூ, கொடிப்பூ, செடிப்பூ, புதற்பூ, புற்பூ என்றும் வகைப்படுத்தியுள்ளனா். நற்றிணையில் அறுபத்தி ஏழு பூக்கள் கோட்டுப்பூ. கொடிப்பூ பதினெட்டும், நிலப்பூ பத்தொன்பதும், நீா்ப்பூ ஏழு என இடம் பெற்றுள்ளன. கோடு என்பது கிளை, சினை எனப்படும். மரங்களிலும், செடிகளிலும் கிளைகள் காணப்படும். இவற்றில் இருக்கும் பூ கோட்டுப்பூ எனப்படுகிறது.

- இவை இருப்பை, கடம்பு, காயா, குருந்து, கொன்றை, கோங்கம், ஞாழல், நொச்சி, பாதிாி, புன்னை, மருதம், வெண்கடம்பு, மாம்பூ,

வேங்கை, ஆசினி, செம்முருக்கு, ஆத்தி, கூவிளம், சந்தனம், குரா, குழிழம்பூ என்பவையாகும்.

❖ இருப்பைப் பூவின் மொட்டுப் பூனையின் பாதத்தைப் போன்று வெண்மையாகக் காணப்படும். கடம்பு முருகக் கடவுளுக்கு உகந்ததாகவும் மிகுந்த மணமுள்ள பூவாகவும் உள்ளது.

❖ காயா மயில் கழுத்தைப் போன்று நிறமுடையதாகக் காணப்படுகிறது. கொன்றைப் பூவை கடுக்கை என்று அகத்திணை கூறுகிறது. இவற்றுள் மஞ்சள் நிறம் கொண்ட கொன்றையே பாடப்பட்டுள்ளது. ஞாழல் பொன்னிறமாகப் பூக்கும், புலி நகக்கொன்றை என்றும் கூறப்படுகிறது. பாதிரிப்பூ பஞ்சு போன்ற மென்மையுடையது.

❖ மருதப்பூ பறவைகள் பறக்கும் வேகத்தில் உதிரும் தன்மையுடையது.

❖ மாம்பூ இணராக மலரும். மணம் உடையதாகவும் கிளைகள் புதையும் படி தீயைக் கக்குவது போலும் உள்ளது.

❖ வேங்கை மலர்கள் உதிர்வது கொல்லன் உலையில் தெறிக்கின்ற கதிர் போன்று காணப்படுவதை நற்றிணை கூறுகிறது. செம்முருக்கு கொத்துக் கொத்தாகச் சிவந்த புலி நகங்களைப் போன்று காணப்படும்.

❖ சோழர்கள் 'ஆர்' என்ற ஆத்திப் பூவை அடையாள மாலையாகக் கொண்டவர்கள். இம்மரம் ஆத்தி, தாத்தி, நல்லகி எனவும் கூறப்படுகிறது. கொடிப் பூக்கள் வன்மையான தண்டுகளைக் கொண்டவை.

❖ அதிரல் என்பது புனலிக்கொடி, காட்டு மல்லிகை என்றும் கூறப்படுகிறது. ஈங்கைப்பூ தூய் என்ற பஞ்சு போன்ற அமைப்புடன் காணப்படுகிறது

❖ உழிஞைப்பூவை வீரர்கள் முற்றுகையிடுவதின் அடையாளமாகச் சூடுவது போர் மரபாகும். காந்தள் தமிழகத்தின் தேசியப் பூவாகும். கார்த்திகை விளக்குப் போன்று இளஞ்சிவப்பாகக் காணப்படும்.

❖ பகன்றைப் பூக்கள் வெண்மையான ஆடை போன்று பெரிய பூக்களாகக் காட்சியளிக்கும். 'கள்' விற்கும் பெண்டிர் பகன்றைப் பூமாலையைத் தலையில் சூடியுள்ளனர்.

❖ முண்டகப்பூவைக் கழிமுள்ளி, நீர்முள்ளி என்றும் கூறியுள்ளனர். இது பெரும்பாலும் வயல்வெளிகளில் காணப்படும்.

❖ முல்லை வெண்முல்லை, செம்முல்லை என இருவகைப்படும். தளவம், சாதிமுல்லை, பிச்சி, ஊசிமுல்லைத்தளவு, மாகதி, நைதிகை என்ற பெயரில்களிலும் வழங்கப்படுகிறது. முல்லைப்பூ மாலை நேரத்தில் மலரும். மௌவலும் முல்லை இனத்தைச் சார்ந்தாகும்.

❖ சிறுமரோடம் இதனைச் செங்கருங்காலி என நச்சினார்கினியர் கூறுகிறார்.

❖ நிலத்திலும் தரையிலும் படரும் புல், பூண்டுகள் குற்றாய் வளர்ந்து சிறு செடிகளின் கொம்பே காம்பாகவும் தோன்றுவது நிலப்பூவாகும். இது புதற்பூ, செடிப்பூ, புல்லிப்பூ என்றும் வழங்கப்படுகிறது. புதற்பூக்கள் உள்ளீரம் கொண்டவை, இனம் புரியாத எண்ணற்ற பூக்களும் இவற்றுள் அடங்கும். அகக்காழ் இன்றி புறக்காழ் உடையதாகக் காணப்படும். அதிக உயரமின்றி பின்னிப்பினைந்திருக்கும்.

❖ செடிப்பூக்கள் மெல்லிய தண்டினைக் கொண்ட சிறு தாவரமாகும். புல்லி என்பது பூவிதழின் அடியில் மெலிதான இலை போல் வரிசையாகக் காணப்படும்.

❖ செடிப்பூக்களாகக் குறிஞ்சி, பித்திகம், எருக்கு, எறுழ், வாடாமலர், குல்லை, எருவையும், புதற்பூக்காளாகக் கருவிளை, கூதளம், பிடவம், ஆவிரை, பூளை, செங்காந்களும், புல்லிப்பூக்களாகக் கரும்பு, தாழை, வாழை, கைதை, போன்றவையும் வெளிப்படுகின்றன.

❖ நீர் நிலைகளில் பூக்கள் மலர்வதுண்டு. நீரில் குவிந்து புலர்ந்து சில நாட்கள் வரையில் இருக்கக் கூடியவையாகும். அவ்வாறு தோன்றும் பூக்கள் வாவிப்பூ, பொய்கைப்பூ வயற்பூ, ஓடைப்பூ, சுனைப்பூ என்று பல்வேறு பெயர்களில் வழங்கப்படுகின்றன. தாமரை, ஆம்பல், குவளை, நெய்தல், நீலம் செவ்வாம்பல் போன்றவையும் இவ்வகையில் அடங்கும்.

## சான்றெண் விளக்கம்


1. அ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி தமிழ்க் கலைக்களஞ்சியம், ப-727.
2. க்ரியாவின் தற்காலதமிழ் அகராதி, ப-1000.
3. நர்மதா தமிழகராதி, ப-1023.
4. V. Murugan, Oxford English – English – Tamil Disctionary, Pg -796.
5. மேலது, ப-249.
6. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம் மரபியல், நூற்பா-1585.
7. மேலது, நூற்பா-1586.
8. மேலது, நூற்பா-1587.
9. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம், அகத், நூற்பா-967.
10. சூடாமணி நிகண்டு-48.
11. பரிபாடல், பா-20.
12. புறநானூறு, பா-21.
13. பதிற்றுப்பத்து, பா-34.
14. திருவள்ளுவர், திருக்குறள், அடி-1227.
15. அகநானூறு, பா-229.
16. சிறுபாணாற்றுப்படை, பா-22.
17. மேலது, பா-5.
18. மதுரைக்காஞ்சி, பா-685.
19. குறுந்தொகை, பா-46.
20. புறநானூறு, பா-42.

21. சிலப்பதிகாரம், அழற்படு காதை- வரி:93-94.

22. பெரிய புராணம், பா-30.

23. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, பா-375.

24. குறிஞ்சிப்பாட்டு, பா-113-114.

25. வெற்றிச்செல்வன், சங்க இலக்கியத்தில் மலர்கள், ப-25.

26. புறநானூறு, பா-117.

27. கலித்தொகை, பா-54.

28. மேலது, பா-28.

29. இரா. இராமகிருட்டிணன், கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் 99 பூக்கள், ப-272.

30. அகநானூறு, பா-9.

31. மலைப்படுகடாம், பா-498.

32. மேலது, பா428.

33. பரிபாடல், பா-5.

34. திருமுருகாற்றுப்படை, பா-11.

35. குறிஞ்சிப்பாட்டு, பா-70.

36. ஐங்குறுநூறு, பா-412.

37. முல்லைப்பாட்டு, பா-91.

38. பொருநராற்றுப்படை, பா-201.

39. அகநானூறு, பா-133.

40. கலித்தொகை, பா-108.

41. குறுந்தொகை, பா-148.

42. அகநானூறு, பா-393.

43. ஐங்குறுநூறு, பா-432.

44. மேலது, பா-420.

45. மதுரைக்காஞ்சி, பா-277.

46. கலித்தொகை, பா-106.

47. பதிற்றுப்பத்து, பா-67.

48. பரிபாடல், பா-8.

49. அமுதசுரபி, தீபாவளி மலர், 1986.

50. புறநானூறு, பா-321.

51. அகநானூறு, பா-240.

52. ஐங்குறுநூறு, பா-367.

53. கலித்தொகை, பா-33.

54. பரிபாடல், பா-19.

55. குறுந்தொகை, பா-254.

56. ஐங்குறுநூறு, பா-343.

57. மதுரைக்காஞ்சி, பா-338.

58. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், பொரு, நூற்பா-18.

59. அகப்பொருள் விளக்கம், நூற்பா-22.

60. திணைமாலை நூற்றைம்பது, பா-58.

61. குறுந்தொகை, பா-397.

62. ஐங்குறுநூறு, பா-144.

63. மேலது, பா-146.

64. மேலது, பா-142.

65. திணைமொழி ஐம்பது, பா-49.

66. தேவாரம், பா-391.

67. புறநானூறு, பா-271.

68. அகநானூறு, பா-191.

69. மேலது, பா-261.

70. பெருங்காதை உஞ்சைக் காண்டம், காதை-42:204-205.

71. சீவகசிந்தாமணி, பா-1650.

72. நாலடியார், அடி-139.

73. அகநானூறு, பா-30.

74. மேலது, பா-360.

75. மேலது, பா-170.

76. திருமுருகாற்றுப்படை, பா-34.

77. மேலது, பா-28.

78. குறுந்தொகை, பா-50.

79. திருமுருகாற்றுப்படை, பா-27-28.

80. மலைப்படுகடாம், பா-498.

81. குறுந்தொகை, பா-21.

82. மலைப்படுகடாம், பா-428-431.

83. திருமுருகாற்றுப்படை, பா-10-11.

84. மேலது, பா-59-60.

85. குற்றாலக்கோவை, பா-241.

86. சிறுபாணாற்றுப்படை, பா-22.

87. மலைப்படுகடாம், பா-305-306.

88. பதிற்றுப்பத்து, பா-41.

89. சிறுபாணாற்றுப்படை, பா-254.

90. மதுரைக்காஞ்சி, பா-296.

91. புறநானூறு, பா-372.

92. இரா. இராமகிருட்டிணன், மேலது, ப-70.

93. மேலது, ப-70.

94. மேலது, ப-209.

95. குறுந்தொகை, பா-286.

96. அகநானூறு, பா-97.

97. மேலது, பா-237.

98. கார்நாற்பது, பா-28.

99. குறுந்தொகை, பா-243.

100. மேலது, பா-243.

101. பட்டினப்பாலை, பா-65.

102. முல்லைப்பாட்டு, பா-51.

103. சிலப்பதிகாரம், 13. புறஞ்சேரியிருந்த காதை-150.

104. புறநானூறு, பா-269.

105. முல்லைப்பாட்டு, பா-51.

106. குறிஞ்சிப்பாட்டு, பா-36.

107. அகநானூறு, பா-125.

108. குறுந்தொகை, பா-110.

109. பதிற்றுப்பத்து, பா-43.

110. புறநானூறு, பா-76.

111. அய்யனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை, காஞ்சித்திணை-நூற்-9.

112. பதிற்றுப்பத்து, பா-63.

113. மேலது, பா-56.

114. புறநானூறு, பா-76.

115. பதிற்றுப்பத்து, பா-22.

116. அகநானூறு, பா-312.

117. புறநானூறு, பா-144.

118. பரிபாடல், பா-19.

119. சிறுபாணாற்றுப்படை, பா-167.

120. பட்டினப்பாலை, பா-152.

121. மலைப்படுகடாம், பா-519.

122. முல்லைப்பாட்டு, பா-96.

123. சிலப்பதிகாரம், 13. புறஞ்சேரியிருந்த காதை-52.

124. மேலது, காதை-51

125. இரா. இராமகிருட்டிணன், மேலது, ப-207.

126. சிலப்பதிகாரம், 13. புறஞ்சேரியிருந்த காதை-18.

127. பரிபாடல், பா-12.

128. புறநானூறு, பா-18.

129. குறுந்தொகை, பா-59.

130. மலைப்படுகடாம், பா-330-333.

131. ஐங்குறுநூறு, பா-447.

132. சிலப்பதிகாரம், 13. புறஞ்சேரியிருந்த காதை-153.

133. புறநானூறு, பா-393.

134. அகநானூறு, பா-24.

135. கலித்தொகை, பா-73.

136. மலைப்படுகடாம், பா-459.

137. நெடுநெல்வாடை, பா-14.

138. குறுந்தொகை, பா-98.

139. ஐங்குறுநூறு, பா-452.

140. பெரும்பாணாற்றுப்படை, பா-216.

141. மதுரைக்காஞ்சி, பா-96.

142. ஐங்குறுநூறு, பா-177.

143. குறுந்தொகை, பா-60.

144. மேலது, பா-108.

145. மேலது, பா-348.

146. மேலது, பா-220.

147. அகநானூறு, பா-124.

148. மேலது, பா-134.

149. பெரியாழ்வார் திருமொழி, பாசுரம்-5-3-5.

150. புறநானூறு, பா-320.

151. அகநானூறு, பா-235.

152. கலித்தொகை, பா-105.

153. பதிற்றுப்பத்து, பா-51.

154. கலித்தொகை, பா-91.

155. பரிபாடல், பா-8.

156. முல்லைப்பாட்டு, பா-95.

157. மேலது, பா-96.

158. திணைமொழி ஐம்பது, பா-29.

159. திணைமாலை நூற்றைம்பது, பா-119.

160. இளம்பூரணர் (உ.ஆ), தொல், பொரு, நூற்பா-642.

161. புறநானூறு, பா-117.

162. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப-624.

163. குறுந்தொகை, பா-3.

164. மதுரைக்காஞ்சி, பா-613.

165. புறநானூறு, பா-374.

166. பெரியாழ்வார் திருமொழி, பாசுரம்-5-2-2.

167. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-63.

168. புறநானூறு, பா-106.

169. குறுந்தொகை, பா-17.

170. மலைப்படுகடாம், பா-219.

171. குறிஞ்சிப்பாட்டு, பா-96.

172. குறுந்தொகை, பா-170.

173. ஐங்குறுநூறு, பா-269.

174. பரிபாடல், பா-19.

175. மேலது, பா-18.

176. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-123.

177. சிறுபாணாற்றுப்படை, பா-29.

178. பொருநராற்றுப்படை, பா-234.

179. பரிபாடல், பா-12.

180. கலித்தொகை, பா-103.

181. குறுந்தொகை, பா-11.

182. ஐங்குறுநுர்று, பா-308.

183. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப-164.

184. புறநானூறு, பா-62.

185. குறுந்தொகை, பா-388.

186. புறநானூறு, பா-153.

187. நெடுநெல்வாடை, பா-81.

188. புறநானூறு, பா-11.

189. அகநானூறு, பா-42.

190. மேலது, பா-295.

191. நெடுநெல்வாடை, பா-39.

192. குறிஞ்சிப்பாட்டு, பா-17.

193. மேலது, பா-121.

194. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப-985.

195. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-77.

196. ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழகராதி, ப-338.

197. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-200.

198. ஐங்குறுநூறு, பா-440.

199. அகநானூறு, பா-147.

200. மேலது, பா-439.

201. மேலது, பா-154.

202. மேலது, பா-34.

203. கலித்தொகை, பா-101.

204. பட்டினப்பாலை, பா-234.

205. புறநானூறு, பா-23.

206. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப-99.

207. குறுந்தொகை, பா-85.

208. சிறுபாணாற்றுப்படை, பா-146.

209. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-127.

210. புறநானூறு, பா-237.

211. குறுந்தொகை, பா-304.

212. அகநானூறு, பா-100.

213. ஐங்குறுநூறு, பா-97.

214. அகநானூறு, பா-71.

215. திருக்குறள், அடி-617.

216. புறநானூறு, பா-27.

217. ஐங்குறுநூறு, பா-20.

218. அகநானூறு, பா-176.

219. ஐங்குறுநூறு, பா-68.

220. பெரும்பாணாற்றுப்படை, பா-115.

221. நீதிவெண்பா, பா-96.

222. இரா. இராமகிருட்டிணன்,மேலது, ப-147.

223. செ. வைத்தியலிங்கன், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, முதல் பாகம், ப-151.

224. பெரும்பாணாற்றுப்படை, பா-289.

225. புறநானூறு, பா-70.

226. அகநானூறு, பா-270.

227. மேலது, பா-357.

228. மதுரைக்காஞ்சி, பா567.

229. குறுந்தொகை, பா-291.

230. பட்டினப்பாலை, பா-9-12.

231. புறநானூறு, பா-48.

# இயல் - 3

## நற்றிணையில் பூக்களின் இயல்பும் பயன்களும்

தாவர இனங்கள் பூவுள்ள தாவரம், பூவில்லாத் தாவரம் என இரு வகைப்படும். பூக்கும் தாவரங்கள் பூக்கும் நிலையில் நின்றுவிடாமல் காய்த்து, கனி கொடுப்பவை. மணம் பூக்களுக்கு உரித்தான முக்கியத் தன்மையாகும். குளிர்ச்சியைக் குறிப்பது ‘தண்மை’. பூக்களைக் காண்பதும், தொடுவதும், அணிவதும், நுகர்வதும் குளிர்ச்சியைத்தரும். குளரி என்ற நீர்ச்சேம்பு மலர் தன்மையினாலேயே இப்பெயரைப் பெற்றது. ‘தண்’, ‘நளிர்’, ‘நளி’ போன்ற சொற்கள் குளிரைக் குறிக்கும் சொற்களாகத் தமிழ் இலக்கியத்தில் பயன்படுத்தபட்டுள்ளன. இவ்வியல் பூக்களின் காலம், மணம், தன்மை, வண்ணம், மென்மை, தூய்மை, சுவை, ஒளித் தன்மை போன்றவற்றை நற்றிணை தெளிவுபடுத்துகிறது.

### பூவின் இயல்புகள்

இயல்பு என்பது “ஒன்று இப்படிப்பட்டது என்பதை வெளிப்படுத்தும் பண்பு, தன்மை என்றும் கூறுவர். ஆங்கிலத்தில் quality, property”[1] என்று அகராதி கூறுகிறது. இதனைப் பேரகராதி “தன்மை (quality), சுபாவம் (nature), நற்குணம் (good nature)”[2] எனக் கூறுகிறது. மெய்யப்பன் அகராதி ‘தன்மை, இலக்கணம், ஒழுக்கம், நற்குணம், முறை’ எனச் (ப-136) சுட்டுகிறது.

சங்க காலம் முதல் பூக்களுக்கிருந்த சிறப்பை எடுத்துக்கூறும் நிலையை இலக்கியங்களில் அறிய முடிகிறது. தழிழர் அந்தந்த நிலங்களில் விளங்கிய பூவைக் கொண்டே ஐந்திணைகளின் பெயர்களும், புறத்திணைத் துறைகளின் பெயர்களும் அமைத்துள்ளனர். அரசர்களின் சின்னங்களாகப் பூக்கள் சிறப்பிக்கப்படுகின்றன. சோழர்-ஆத்திப்பூ, பாண்டியர்-வேப்பம்பூ, சேரர்-பனம்பூ என்றும் தங்களுக்குக்கென அடையாளப்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு நாடுகளுக்கும் பூக்களுக்கெனத் தனிக் கவர்ச்சியும், சிறப்பும் இருந்ததை அந்நாட்டுப் பண்பாடு, வரலாறு மூலம் அறிந்து கொள்ளலாம்.

பூக்களில் சில பகலிலும், சில இரவிலும் மலர்கின்றன. பொதுவாக இயற்கை அமைப்பில் தாவரங்களின் வழிவழியாக உற்பத்தி அடிப்படையில் மகரந்தச் சேர்க்கைக்காகப் பூக்கள் மலர்கின்றன. மலர்கள் மலர்வதை உணர்ந்த வண்டு, தும்பி போன்றவை தேன் உண்பதற்கு மலர்களில் அமர்கின்றன. இதனால் அயல் மகரந்த சேர்க்கை என்னும் அறிவியல் வினை நிகழ்கிறது. இதிலிருந்து உற்பத்திக்கு மலர்கள் அடிப்படையாக அமைவதைச் சங்கப் புலவர்கள் உணர்ந்து நற்றிணையில் பதிவு செய்துள்ளனர் என்பதை உணரமுடிகிறது. மகரந்தத்துடன் பூக்கள் பூக்கின்றன. பகலில் சூரியன் வெளிச்சம் இருப்பதால் அவற்றின் ஈர்ப்புக்கேற்ப தாமரை, நீலோத்பலம், சூரியகாந்தி, செம்பருத்தி போன்ற வண்ண மலர்கள் மலர்கின்றன. இரவில் இருள் கவிவதால் வண்டுகளை ஈர்க்கும் நிலையில் வெள்ளை நிறத்திலான அல்லி, முல்லை, மல்லிகை போன்ற மலர்கள் பெருமளவில் மலர்கின்றன. பகலை விட இரவில் நறுமண மலர்கள் அதிகமாக மலர்கின்றன என்பதை அறியமுடிகிறது.

இதனை உணர்ந்தே மாலை வேளைகளில் முன்னிறவுக் காலத்தில் பூங்காக்களில் தங்கி இளைபாறினர் என்பதும் புலப்படுகிறது. புலவர்கள் இவ்வாறான உணர்வுகளைப் புரிந்து கொண்டு தம் படைப்புகளில் அழகனுபவத்தையும், சூழல்களையும் அறிவியல் நோக்கிலும் நன்கு பயன்படுத்தியுள்ளனர். "மனிதன் பிறப்பிலிருந்து இறப்பு வரை பல்வேறு காலக் கட்டங்களில் தன் வாழ்க்கையில் மலர்களைப் பயன்படுத்த வேண்டிய சூழ்நிலையில் அமைத்துள்ளனர். பூக்களுக்கு வண்ணமும், வடிவமும் சிறப்புடைய கூறுகளாகக் கருதப்படுகிறன. நறுமணமே சிறப்புடையது என்பதை இன்னா நாற்பது (7) 'நாற்றமிலாத மலரின் அழகின்னா' எனக் கூறுகின்றது. இது உலக நோக்கில் ஏற்றுக்கொள்ளப்படும் உண்மையாகும்"[3] என்று தமிழ்ப் பண்பாட்டு வரலாறு கூறுகிறது.

**பூக்களின் தன்மைகள்**

பூக்களின் தன்மைகளை மணம், மென்மை, வண்ணம், தூய்மை, சுவை, ஒளி, எழில், கவர்ச்சி, மங்கலம் என்று ஒன்பது வகையாகக் கூறலாம். இவை பூக்களின் உயர்வுத் தன்மைகளாகும். இந்தச் சிறப்புகளின் காரணமாகவே

மணமலர், நறுமலர், மென் மலர், சுவை மலர், ஒளி மலர், எழில் மலர், மங்கல மலர் எனறும் பெயர்பெற்றுள்ளன.

**மலராகும் தன்மை**

மலர் என்பது ஆறு உறுப்புகளைக் கொண்டு அமைகிறது. அவ்வுறுப்புகளாவன காம்பு, புறவிதழ், அகவிதழ், பொருட்டு, தாது, தேன் என்பவையாகும். எல்லாவற்றையும் உடையது தேமலராகும். இவை நிறை மலர், இவ்வுறுப்புகளில் சிலவற்றைப் பெறாதது 'குறை மலர்' ஆகும்.

காம்பு என்பது மலரைத் தாங்கி நிற்கும், ஏந்தி நிற்கும் ஓர் உறுப்பாகும். இது மலரைத் தாங்கிக் கால் போன்று ஊன்றி நிற்பதால் இதற்கு 'கால்' என்னும் பெயர் பெற்றது. இலக்கிய வழக்கில் 'கால்' என்னும் சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது.

**"அனிச்சப் பூக் கால் களையாள்"[4]**

**"காம்புடை விடரகஞ் சிலம்பப்"** **(நற்-51)**

**"காம்புதலை மணந்த"** **(நற்-55)**

என்பதிலுள்ள 'கால்' என்பது 'காம்பு' என்னும் உறுப்பினைக் குறிப்பதாகும். காம்பு என்னும் பொருள் தகும் வகையில் தண்டு, தாள் என்னும் சொற்களைப்பயன்படுத்துவதும் உண்டு. தாமரை மலரைத் தாங்கி நிற்பது தண்டு என்றும் நெல்லின் பூவைத் தாங்கி நிற்பது தாள் என்றும் வழக்கத்தில் கூறப்படுகிறது. புறவிதழ் என்பது மலரின் புறத்தே அமைந்திருப்பதாகும். இதற்குப்புல்லி என்னும் பெயர் உண்டு. புல்லி என்பது புறவிதழ் ஆகும். எனவே 'புறவிதழ்' எனக் கூறப்படுகிறது. இந்தப் புறவிதழ், வெயில் போன்றவற்றில் மலரைப் பாதுகாக்கும் உறுப்பாகும். புறவிதழ் மென்மையற்றது, லேசான பசுமை நிறமுடையது.

**"வேனிற் பாதிரிக் கூனி மாமலர்"[5]**

என்று கூறப்படுகிறது. பொருட்டு என்பது இனப்பெருக்கத்திற்காக மலரின் நடுவே உள்ள உறுப்பாகும். கருக் கொள்ளும் உறுப்பு என்றும் சொல்லப்படுகிறது. இதற்கு 'கன்னிகை' என்னும் பொருளுண்டு. கன்னிகை பூவினுளுள்ள கொட்டை

என்று சேந்தன் திவாகரம் குறிப்பிடுகிறது. பொருட்டு என்பதற்கு ‘வித்து’ என்னும் பொருள் உண்டு. இது மலரின் நடுவே அகவிதழ்களுள்ளே அமைந்திருக்கும். இதனை,

**“இதழகத்து அரும்பொருட்டனைத்தே அண்ணல் கோயில்”[6]**

**“வேனிற் கோங்கின் பூமணம் பொருட்டு”[7]**

என்னும் அடிகள் சுட்டுகின்றன. தாது என்பது கருக்கலப்பிற்குரிய துகள். இது மலரில் உள்ள மகரந்தத்தின் நுனியில் முனைப்பகுதியில் ஒட்டிக் கொண்டிருக்கும். இதனை மகரந்தம் என்றும் உலக வழக்கில கூறுவர். தாதும் மலரின் ஒரு தனி உறுப்பாகும். இது மலரிலிருந்து சிதறிப்பரவிய பிற தாதுக்களுடன் சேர்த்து கருக்கலப்பை உண்டாகும் என்பதை,

**“புதுமலர் கோங்கின் பொன்னெனத் தாது”[8]**

**“கமழ்தண்தாது உதிர்ந்துக ஊழுற்ற கோடல் வீ”[9]**

**“தண்கமழ் கோடல் தாது பிணி அவிழ”[10]**

**“புதுமணற் காணல் புன்னை நுண் தாது” (நற்-74)**

என்றெல்லாம் பதிவு செய்துள்ளனர். தேன் என்பது மலரில் சுவைமிக்கதாகும். மலரினுள் உள்ள தேன் ‘மலர்த்தேன்’ என்றும் கூறப்படுகிறது. தேனை உண்ணவே வண்டினங்கள் மலர்களை வட்டமிடுகின்றன. மலரிலுள்ள தேனுக்கு நறை, நறா, கள், தேறலி, மட்டு என்னும் பெயர்களும் இலக்கிய வழக்கில் காணப்படுகின்றன.

**“மெல்லிணர்த் தேன்பாய் மராஅம் அடைச்சி” (அகநா.262)**

என்பதும் இதற்குச் சான்றாகும்.

**மணம்**

மலரின் தன்மை, குணங்கள் போன்றவற்றில் தலையாயது மணம். மலரின் பெருமையை மணத்தால் அறியலாம். மணமே மலருக்கு உயர்வை, தனிப் பெருமையை அளிக்கிறது. மணம் உடைய மலர் எப்போதும் எங்கும் சிறப்பிடம் பெறுகிறது என்பது அறிந்து திருவள்ளுவர்,

**“இணரூழ்ந்தும் நாறா மலரனையர் கற்றது**

**உணர விரித்துரையாதவர்”**[11]

எனத் தாம் கற்றதைப் பிறர் மனங்கொள்ள விளக்கிச் சொல்லும் ஆற்றல் அற்றவர் கொத்தாக மலர்ந்தும் மணம் கமழாத மலரைப் போன்றவராவர் என்கிறார்.

**“……..பீரம் ஊதி வேறுபட**

**நாற்றம் இன்மையிற் பசலை ஊதாய்” (நற்-277)**

**“நாற்றம் உரைக்கும் மலர் உண்மை”**[12]

என உணர்த்தியுள்ளனர். மணமுடைய மலர்கள் மங்கலத் தன்மை, நன்மையைக் குறிக்கும் மலராகவும் காணப்படுகின்றன. மணமற்ற மலர் அமங்கல மலராகவும் தீமையைக் குறிக்கும் மலராகவும் கருதப்படுவது மரபு. இதனை,

**“நாற்றம் இல்லாத மலரின் அழகு இன்னா”**[13]

என்பதன் வழி அறியலாம். மணமுடைய மலர்கள் மங்கலச் சடங்குகளிலும், மங்கல வாழ்த்திலும் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. மங்கல வாழ்த்தில் ‘மலரும் மணமும் போல் வாழ்க!’ என்று கூறுகின்றனர். எனவே மலருக்கு மணமே உயிர். மலரிலிருந்து மணம் வீசுவதை,

**“நறுமலர் எழுதரு நாற்றம்”**[14]

என்கிறார் மாணிக்கவாசகர்.மலர் உடல் என்றால் மணம் மூச்சாகக் கருதப்படுகிறது. இறைவன் எங்கும் நிறைந்தவன் என்பதை,

**“பூவின் நாற்றம் போன் றுயர்ந்தெங்கும்**

**ஒழிவற நிறைந்து”**[15]

எனும் பாடலும் குறிப்பிடுகிறது. மலரில் நிறைந்து மணக்கும் மணத்திற்கு நாற்றம், விரை, கடி, வெறி, முருகு, நறு எனப் பல பொருள்கள் உள்ளதை,

**“பூவினுள் நாற்றம்”**[16]

**“கடி மலர்க் கண்ணி”**[17]

**"சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ முருகு"[18]**

**"நறும்பூக் கொய்யும்"[19]**

**"வெறிகமழ் சந்தனமும் வேங்கையும்"[20]**

என்றெல்லாம் பல்வேறு பெயர்களால் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**மென்மை**

மென்மை என்பது மலரின் இயல்புத் தன்மையாகும். மலர், முகை, அரும்பு, இதழ், பொருட்டு, மலர் அனைத்தும் மென்மையால் வந்தவையாகும். அதனை,

**"மெல் இதழ்" (நற்-48)**

**"மென் முகை" (குறுந்-254)**

**"மெல் அரும்பு" (அகநா.10)**

**"மெல் பொருட்டு" (பரி-11)**

**"மென் மலர்" (கலித்-103)**

என்று சிறப்பித்துக் கூறியுள்ளனர்.மென்மையால் விளங்கும் மலர்களுள்ளே முதன்மையிடம் பெற்று விளங்குவது அனிச்சமலர். இதனை, "மோப்பக் குழையும் அனிச்சம்" என்பார் வள்ளுவர். முகந்த அளவிலேயே வாடிவிடும் அளவிற்கு மென்மையானது அனிச்சமலர். மகளிர் மென்மையின் உருவாவர். மகளிரின் உறுப்புகள் மென்மேனி, மென்முகம், மெல்விரல், மெல்லடி என்றும் சிறப்பிக்கப்படுகின்றன. மகளிரின் மென்மைத் தன்மையை,

**"நீள்மலை கலித்த பெருங்கோல் குறிஞ்சி**

**நாள்மலர் புரையும் மேனி" (நற்-301)**

என்கிறது நற்றிணை. மலரினும் உயர்ந்த மென்மையுடையோர் என்பதை,

**"நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்**

**மேன்னீரள் யாம்வீழ் பவள்"[21]**

என்பதன் வழி அறியலாம்.

**வண்ணம்**

மலர் என்றாலே அதனின் வண்ணமே முன் நிற்கும். வண்ணம் என்பது நிறம், அழகு என இரு பொருள்படும். இவ்விரண்டும் அமைய வண்ணம் கூடித் திகழ்கிறது. மலர்கள் வண்ணமுடையதாக இல்லையென்றால் அதில் அழகில்லை என்றும் கூறலாம். மலரில் வண்ணம் அதன் நிறமாக அமைந்திருப்பது அதன் இயற்கைத் தன்மைகளுள் ஒன்றாக உள்ளது. வெண்மை, செம்மை, கருமை,பசுமை, மஞ்சள், நீலம், இளஞ்செம்மை, இளமஞ்சள், கருநீலம் என ஒன்பது வகையில் அமைந்துள்ளன.பசுமை ஒரே மலா் பல வண்ணங்களையும் கொண்டுள்ளது. வண்ணமலரான கமுக மலர் காட்சியளிப்பதை,

**"சிறுவீ முல்லைத் தேங்கமழ் பசுவீ"** **(நற்-248)**

**"கமுகின் பாளையம் பசும்பூ"** **(பெரும்பாண்-7)**

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. கருமை வண்ண மலர் தனி வண்ணமலராக இன்று கருதப்படுகிறது. கருமை வண்ண மலராகக் குறிப்பிடுவதை,

**"கருங்குரல் நொச்சி"**[22]

**"கருநனைக் காயா"**[23]

**"செறியிலைக் காயா அஞ்சனம் மலர்"**[24]

**"கானப் பாதிரி கருந்தகட்டு ஒள்வீ"**[25]

என்பதில் கருநொச்சி, காயா, பாதிரி கருநீல வண்ணமுடையவை. பல்வேறு வண்ணங்களில் ஒரு மலர், ஒரு வண்ணத்தில் பல மலர் என இரு வகை மலர்கள் உண்டு. தாமரை, குறிஞ்சி போன்றவை பல வண்ணங்களில் உள்ள மலர் வகைகளாகும். வெண்டாமரை, செந்தாமரை என இரு வண்ணங்களில் தாமரை மலர் பூக்கின்றது. குறிஞ்சியில் ஐந்து வகை வண்ணங்களைப் பிங்கல நிகண்டு எடுத்துரைகிறது. இதனை,

**பவளக் குறிஞ்சி - செம்மை**

**பெருங்குறிஞ்சி - வெண்மை**

**வாடாக்குறிஞ்சி - செந்நீலம்**

**மழை வண்ணக்குறிஞ்சி - நீலம்**

**பொன் வண்ணக்குறிஞ்சி - மஞ்சள்**

எனத் தமிழ் இலக்கியத்தில் மலர்கள் (பக்-72) எனும் நூலில் வெற்றிச்செல்வன் குறிப்பிட்டுள்ளார். ஒரு வண்ணத்தில் பன் மலர் என்பது ஒரே நிறத்தில் பல வகைப்பூக்கள் பூத்தலாகும். வெண்மை நிறத்தில் முல்லை, தாழை போன்றவையும், செம்மை வண்ணத்தில் குரா மலரும் இவ்வகையில் அடங்கும். பொதுவாக மலர்களுக்குப் பொலிவையும், சிறப்பையும் அளிப்பவை அவற்றின் வண்ணங்களாகும்.

**தூய்மை**

மலர் தூய்மைத் தன்மையுடையது. செடிகள், கொடிகள், மரங்களில் மலர்ந்துள்ளபோதும் கொய்யப்படுவதற்கு, தரையில் உதிர்வதற்கு, வண்டுகள் மொய்ப்பதற்கு முன்பு தூய்மையின் நிலைக்களமாகத் திகழ்கின்றது. மலர் தரையில் உதிர்ந்த பின்தூய்மை கெடுகின்றது. இதழ் விரிந்த எழில் மலர் தூய்மையுடையது. இம்மலரைக் கொண்டே இறைவனைப் பூசித்து வழிபட வேண்டும் என்பர். தூய்மை மிக்க மலர்களை 'தூய மாமலர்', 'தூமலர் மாலை' எனறெல்லாம் போற்றுகின்றனர்.

**"மாக்கொடி அதிரல் பூவோடு பாதிரித்**

**தூத்தகட்டு எதிர்மலர் வேய்ந்த கூந்தல்" (நற்-52)**

எனக் கரிய கொடியையுடைய காட்டுமல்லிகைப் பூவுடனே தூய பொற்றகடு போன்ற பாதிரி மலராச் சேர்த்து எதிரெதிர் வைத்துத் தொடுத்துக் கட்டிய மலர் மாலையைச் சூடிய மணங்கமழும் நாற்றத்தைப் பெற்றது இவளது கூந்தல் என்பது புலப்படுகிறது. எறிபத்தர் என்னும் சிவனடியார் வாய்க்காற்றுப் பட்டால் வழிபாட்டு மலரின் தூய்மை கெடும் என்று கருதி துணியினால்வாய்கட்டிக் கொண்டு செடிகளில் மலர் கொய்யச் சென்றார் என்பதை,

**"வைகறை உணர்ந்து போந்து**

**புனல்மூழ்கி வாயும் கட்டி"[26]**

எனப் பெரியபுராணம் குறிப்பிடுகிறது. இவ்வாறு மலரின் தூய்மை சுட்டப்படுகிறது.

**சுவைத்தன்மை**

மலர் ஒரு சுவைப் பொருளாகவும் விளங்குகிறது. மலரில் உள்ள தேன் ஒரு தனிச்சுவையுடையதாகும். இதனைப் ‘பூந்தேன்’ என்றும் ‘மலர்த்தேன்’ என்றும் கூறுவர். மலரிலுள்ள தேன் சுவைப்பது மட்டுமன்றி மலரும் சுவையுடையதாகும். சுவை என்பது சிறப்பாக இனிப்பைக் குறிக்கும். மலரில் இனிப்புடையது தேன். இது மலரின் சுரப்பு நீர். மலர் இனிப்புச்சுவையுடையதையும் அறியலாம். இருப்பைப் பூவை ‘ஆலையில்லா ஊருக்கு இருப்பைப்பூ சக்கரை’ என்பது பழமொழி.

**“தாமரைத் தண்டா தூதி மீமிசைச்**

**சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்”** **(நற்-1)**

என்பது மலர்கள் சுவையுடையப் பொருளாக இருப்பதைக் குறிப்பதாகும். ‘சுவைப்பூ’ என்று சுவை காரணமாக மலரை வகைப்படுத்தினர்.

**ஒளித்தன்மை**

வண்ணங்கள் ஒளியின் வடிவம் ஆகும். வண்ணங்கள் விளக்கைப் போன்று காட்சியளிக்கும் என்பதை,

**“பல்வயின்**

**தோன்றி தோன்றுபு புதல்விளக்கு உறாஅ”** **(நற்-69)**

**“நீல்நிறப் புன்னைத் தமியொண் கைதை**

**வானம் மூழ்கிய வயங்கொளி நெடுஞ்சுடர்க்”** **(நற்-163)**

என்னும் பாடல்கள் குறிப்பிடுகின்றன. தாழை மலரில் ஒளி பொருந்திய வெண்சுண்ணம் படிந்துள்ளது, கொன்றை மலர் பொன்னொளியை வீசுகின்றது. வண்ணங்களால் பொலிவு பெற்று விளங்குகின்ற மலர்கள் ஒளியுடையனவாகக் காட்சியளிக்கின்றன. இதனை,

**“நனை வேங்கை ஒள்ளினர் மலர”** **(பரி-15:32)**

என்பதன்வழி அறியலாம். செங்காந்தள் மொட்டுகள் நள்ளிரவில் மலரும், இதனை ‘ஒண்பூ’, ‘ஒள்ளிதழ்’ என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

**“எரிப்பூ இலவம்”**[27]

**“முள்ளரை இலவத்து ஒள்ளிணர் வான்பூ”**[28]

இப்பாடல்கள் நீலம் இலவமலரும் எரியும் நெருப்பைப் போல ஒளிவீசுகிறது என்பதில் அறியமுடிகிறது.

**ஈர்ப்புத் தன்மை**

பூக்களின் வண்ணங்களில் பளபளப்பில் எழில் தோன்றுகின்றது. பூக்களில் வண்ணம் ஈர்ப்புத் தன்மை இல்லையெனில் பூக்களைக் காணவோ, கண்டு மகிழவோ, கொய்து சூடவோ மாட்டார்கள். பூக்களின் ஈர்ப்புத் தன்மை பார்க்கச் செய்வதோடு, பார்பவரின் உள்ளத்தில் ஒரு மகிழ்ச்சியை உண்டாக்குகிறது. ஆம்பல் பூக்களைப் போன்ற ஈர்ப்புத் தன்மை உடையவன் தலைவன் என்பதை,

**“ஆம்பல்**

**…………………………**

**கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்”** **(நற்-200)**

**“பிடவுத்தளை அவிழக்**

**……….. ………….. …………….**

**கண்கவர் வரிநிழல்”** **(நற்-256)**

என்ற அடிகள் சுட்டுகின்றன. பிடாமலர் முறுக்குவாய் நெகிழ்ந்து மலர கார்பருவம் அமைந்துள்ளன. இத்தகைய நிலையில் இளைய பிணைமானைப் புணர்ந்த கரிய பிடரினையுடைய கலைமான் உள்ளே வயிரம் முற்றிய வேலமரத்தின் தாழ்ந்த கிளையைக் கவர்ந்து கொள்ளும் வரிப் பொருந்திய நிழல் என்பதைச் சுட்டுகிறது.வேனிற் காலத்தில் மழை இன்மையால் தழைகள் எல்லாம் உதிரப்பெற்ற இலவமரத்தில் செந்நிறப்பூக்கள் வரிசையாகப் பூத்திருந்தன. அவற்றைக் கண்ட பாலைபாடிய பெருங்கோ பெரிய கார்த்திகை விழாவிற்கு இடும் விளக்குகளைப் போல அம்மலர்கள் விளங்கின என்கிறார்.

**“வான் உலந்து**

**அருவி ஆன்ற உயர்சீமை மருங்கின்**

**பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**

**இலையில மலர்ந்த இலவம்''**[29]

என அகநானூறு சுட்டுகிறது.

**மங்கலம்**

பூ மங்கலப் பொருள்களுள் முதன்மை பெற்று விளங்குகிறது.

**''மங்கல மாகி யின்றி யமையாது**

**யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்**

**பொழுதின் முகமலர் வுடையது பூவே''**[30]

என்பதில் மங்கலச் சடங்கிற்கு உரியதாகக் கண்டோர் மகிழ்ந்து சூடிக்கொள்ளும் மெல்லிய குணமுடையதாகிய முகம் விரிதலைத் தருவது பூவாகும் என்பது புலப்படுகிறது.

**பூக்களின் பயன்கள்**

பூவின் பல்வேறு வாழ்வியல் பயன்களைக் கருதிப் பண்டைய தமிழர்கள் மலர்த் தாவரங்களை வளர்த்தனர். தாழிகளில் மலர்ச் செடிகள், கொடிகள் வளர்க்கும் வழக்கம் இன்றும் பரவலாக இருந்து வருகிறது. மலர் சம்பந்தமான மலர்க் கொய்தல், மலர்மாலை தொடுத்தல், மலர் விற்றல், வாசனைத் திரவியங்கள் போன்ற சிறப்பான கலைகள் உலகில் இருந்து வருகின்றன. பூக்கள் இறைவழிபாட்டில் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். மருத்துவப் பண்புடைய பூக்கள் ஆயுர் வேதத்திலும், சித்த மருத்துவத்திலும் பலவாகக் கூறப்படுகின்றன. அகராதி பயன் என்பதற்கு "பலன், உபயோகம், நன்மை"[31] என்று குறிப்பிடுகிறது. பூக்கள் அன்றாட வாழ்வில் சிறப்பிடம் பெற்றுள்ளன. இயற்கை மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு ஒன்றாகக் கலந்துள்ளன. மக்களுக்குச் சிறுபொழுது, பெரும்பொழுது போன்ற காலங்களை உணர்த்தின. மங்கலப் பொருளாகவும், உணவாகவும் பூக்கள் பயன்படுகின்றன. சங்க இலக்கியங்களில் பலநிலைகளில் மலர்கள் பயன்பட்டதைக் காணமுடிகிறது.

**மலர்க் கொய்தல்**

பூக்கள் மரம், செடி, கொடி, நீர்நிலைகளிலும் பூத்துக் குலுங்குவதுடன் முற்றுப்பெற்று விடுவதில்லை. மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் ஒன்றும்

போதுதான் சிறப்படைகின்றன. பூக்கள் நிறைந்த கா, பொதும்பு, சோலை ஆகிய இடங்களில் பூக்களைப் பறிக்க மகளிரே பெரும்பாலும் செல்கின்றனர் என இலக்கியத்தில் சுட்டப்பெற்றுள்ளது. வளைகள் ஒலிக்க, இழைகள் அசைய, உள்ளத்தில் களிப்புப் பொங்க, மகளிர் பூக்கொய்யச் செல்லும் காட்சி கண்ணிற்கு விருந்தாக அமைகிறது. நீர்ப்பூவான நெய்தல், குவளை போன்ற மலர்களைத் தழையாடையாகவும், அரும்பு, முல்லை போன்ற மலர்களைத் தலையில் சூடுவதற்காகவும், சிலர் விற்பனைக்காகவும் பறிக்கின்றனர். சிறுமியர் மலர் கொய்து, கடற்கரையில் பாவை செய்து விளையாடும் காட்சியை,

**"சிறுவீ ஞாழல், தேன் தோய் ஒள்ளிணர்**
**நேரிழை மகளிர் வார் மணல் இழைத்த**
**வண்டற் பாவை வன முலை முற்றத்து**
**ஒண் பொறிச் சுணங்கின் ஐது படத் தாஅம"** (நற்-191)

என்று நற்றிணைப் பாடல் கூறுகிறது. மரங்கள் அடர்ந்த காட்டிற்கு மகளிர் பூப்பறிக்கச் செல்வர். இருப்பைப்பூப் போன்ற கீழே உதிர்ந்து கிடக்கும் மலர்களைப் பொறுக்கி வருவர். வேங்கை மலர்களைப் பறிக்க அருகில் சென்று புலி, புலி என்று பூசல் எழுப்புவது புலி பன்றியைக் கொல்லும் ஆரவாரத்தைவிட அதிகமாக இருக்கும் என்பதை,

**"கருங்கால் வேங்கை இருஞ்சினைப் பொங்கர்**
**நறும்பூக் கொய்யும் பூசல் இருங்கேழல்**
**ஏறுஅடு வயப்புலிப் பூசலொடு அனைத்து"**[32]

என்று மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. அப்பூசல் கேட்டு வேங்கை மரம் சாய்ந்து கொடுக்கும். எளிதாக மகளிர் அதிலுள்ள பூக்களைப் பறித்துக் கொள்வர். இதனை,

**"தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை**
**மலைமார் இடூஉம் ஏம்ப் பூசல்"**[33]

**"மன்ற வேங்கை மலர்பதம் நோக்கி**
**ஏறாது இட்ட ஏமப் பூசல்"** (குறுந்-214)

என்பவற்றால் அறியலாம். 'ஏமப் பூசல்' என்பது பாதுகாப்புக்குரிய ஆராவாரம் என்று பொருள்படும். மலர்க் கொய்தலைக் 'குற்றல்', 'குறுதல்' எனக் குறிப்பிடுவர். இச்செய்தியை,

**"குவளை குறுநர் நீர் வேட் டாங்கு"** **(நற்-332)**

**"கழிய காவி குற்றும்"** **(குறுந்-144)**

**"ஆம்பல் குறுநர் நீர் வேட் டாங்கு"** **(குறுந்-178)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

**"அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து"** **(பதிற்று-71)**

என்பது அருவியில் மலர்க் கொய்தலை விளக்குகிறது.

**மலர் விற்றல்**

குன்றத்தில் வாழும் குறமகள் வேங்கைப் பூவினைப் பறித்துச் செல்கின்றாள் (அகம்-152). தாமரை, ஆம்பல், பித்திகம், குருந்து போன்ற மலர்களை வட்டியில் வைத்து விற்பனை செய்ததையும், சிலர் மாலைகளாகத் தொடுத்தும் எடுத்துச் செல்வர் என்பதையும் காண முடிகிறது. உழவர் இளமகள் ஒருத்தி, பூக்குடலையோடு வீதியில் பூவிற்கும் காட்சியை,

**"துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு**
**பித்திகை விரவு மலர் கொள்ளீரோ என**
**வண்டு சூழ் வட்டியன் திரிதரும்**
**தண்டலை உழவர் தனிமடமகள்"** **(நற்-97)**

என்னும் பாடல் காட்சிப்படுத்துகிறது. நீர்ப்பாங்கான குளிர்ந்த இடத்தில் உழவரது இளமகள், அழகிய இனிய பஞ்சு போன்ற புறவிதழ்களையுடைய பசிய குருக்கத்திப் பூவுடன் விரவிய பித்திகைப் பூவையும் விலைக்குக் கூறிய வண்ணம், வண்டினம் சூழ்ந்து வட்டமிட்டுக் கொண்டிருக்கும் பூக்குடலையோடு தெருவில் சென்றதை நற்றிணை வழியே அறிய முடிகிறது.

**மலர் அணிகள்**

காதிற்குக் குழையாகவும், கைக்கு வளையாகவும் தங்களை அழகு செய்ய மலர்களைப் பயன்படுத்தியுள்ளனர். பார்ப்பனப் பெண்கள் காட்டில் முல்லையின் இதழ் விரிந்த பூக்களைச் சூடி மகிழ்ந்தனர் என்பதை,

> **“கான முல்லைக் கயவாய் அலரி**
>
> **பார்ப்பன மகளிர் கார்புறத் தணிய”** (நற்-321)

என்னும் பாடல் உணர்த்துகின்றது. ஆடவரும் ஒப்பனைக்காகப் பூச்சூடி மகிழ்ந்தனர் என்பதை,

> **“சிறுவீ முல்லைத் தண்கமழ் அலரி**
>
> **தானும் சூடினன் இளையரும் மிலைந்தனர்”** (நற்-361)

என்பதன்வழி அறிய முடிகிறது. தலைவன் சிறிய இதழ்களையுடைய முல்லையின் தண்ணிய மணம் கமழும் பூவினைச் சூடிக்கொண்டான், இளையரும் சூடிக்கொண்டனர். **“ஆம்பல், குவளை, தாமரை, கொன்றை, காயா, வெட்சி, பிடவு, தளவு, குல்லை, குருந்து, கோடல், காந்தள், ஞாழல், முல்லை, கூதளம், குரவம், வேம்பூ, எருக்கு, நெய்தல், வேங்கை, மரா போன்ற பூக்களை கண்ணியாகவும், தாராகவும் ஆண் மக்கள் அணிந்தனர்”**[34] எனச் சங்க இலக்கியங்கள் மலர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றன. அழகிய புதிய குவளை மலரைக் காதிற் குழையாக அணிந்துள்ள காட்சியை,

> **“குவளைக் குழைக்காதின் கோலக் செல்லின்**
>
> **இவள் செரீஇ நான்கு விழி படைத்தான்”** (பரி-11)

என்ற பரிபாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. “இந்தோனேசிய நாட்டில் கன்னிப் பெண்கள் தலையில் மல்லிகைப் பூவைச் சூடிக் கொள்ளக்கூடாது. திருமணமான பெண்கள் மட்டுமே மல்லிகைப் பூவைச் சூடலாம் என்பது அங்குள்ள வழக்கமாக உள்ளது”[35] என்பதை நாகராசன் குறிப்பிடுகிறார். கையில் அழகிற்காகச் செங்குவளை மலரையும், தாமரைப் போதினையும் பிடித்திருப்பர் என்பதைப் பதிற்றுப்பத்து (52:20) எடுத்துக்கூறுகிறது. குவளை, ஆம்பல் இவற்றில் தண்டினைக் கையில் வளையாக அணிவதை.

**“ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்”**[36]

**“பவள வளை செறித்தாள் கண்டு அணிந்தான் பச்சைக்**

**குவளைப் பசுந்தண்டு கொண்டு”**[37]

என இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. “**பெண்கள் ஞாழல், பாதிரி, அதிரல், மரா, வேங்கை, நெய்தல், தாழை, குவளை, ஆம்பல் காஞ்சி போன்ற மலர்களைத் தலையில் சூடியுள்ளனர்**. கணவன் உடனிருக்கும் போது பூக்களை விரும்பி சூடினர் என்பதை அறிய முடிகிறது. மற்ற நேரங்களில் சில பூக்களையே அணிந்திருப்பதாகவும், மணமாகாதப் பெண்கள் எப்போதும் பூக்களைச் சூடுவார்கள்”[38] எனவும் குறிப்பிடப்படுகிறது. உடன் போகும் காலத்தில் தலைவி தலையில் பலவிதமான பூக்களை அணிந்து செல்வாள் என்பதைஅறிய (அகம்-261) முடிகிறது. இளம்பெண்கள் தும்பைப் பூவாகிய மாலையை விரும்பி அணிவார்கள் என்று உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார்.

**“கண்டிரும் அல்லமோ கொண்க நின் கேனே**

**தும்பை மாலை இள முலை**

**நுண் பூண் ஆகம் விளங்குவோளே”** **(ஐங்-127)**

என மகளிர் மாலை அணிந்த செய்தியை விளக்குகிறது. மகளிர் ஒப்பனையில் மலருக்குச் சிறப்பான இடம் உண்டு. மகளிர் தலையில் சூடிய மணமுடைய மலர்களை,‘தலைவேய் கான்மலர்’ (அகம்-391) எனக் குறிப்பிடுகிறது. மகளிர் தம் கூந்தலில் பூச்சூடிக் கொள்வதை,

**“சாய்குழை பிண்டித் தளிர்காதில் தையினால்**

**பாய்குழை நீலம் பகலாத் தையினாள்**

**குவளை குழைக்காதின் கோலச் செலியின்**

**இவள் செரீஇ”** **(பரி-1195-98)**

என்பதன் மூலம் அறியலாம்.

**மாலை வகைகள்**

பூக்களால் கட்டப்பட்ட மாலைகள் பலவிதமாக அமைந்துள்ளன. ஆண்களும், பெண்களும் தனித்தனியாக மாலை வகைகளைத் தொடுத்துப் பயன்படுத்தினர். அவை கண்ணி, கோதை, தாமம், தார், தெரியல், தொடலை, தொடை, பிணையன், புடையல், மாலை என்பனவாகும். இவற்றை,

**"தாருங் கண்ணியுங்"** **(நற்-150)**

**"சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்**
**மலைச்செங் காந்தள் கண்ணி தந்தும்"** **(நற்-178)**

**"இரும்பனம் புடை யல்"**[39]

**"பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்"**[40]

**"செவ்வரும்பு இணைப்புறு பிணையல்"**[41]

**"சூடும் நறவொடு தானம் முகிழ் விரிய"**[42]

போன்றப் பாடல்களின்வழி அறியலாம். ஆண்கள் சூடும் தலை மாலைகள் தெரியல்,கண்ணி எனப்படும். மார்பில் அணிவது 'தார்' எனப்பட்டது. பெண்கள் தலையில் சூடுவதும், மார்பிலும் அணிவதும் கோதை என்றும், மாலையென்றும் கூறப்படுகின்றது. பெண்கள் கண்ணி சூடியதும், ஆண்கள் கோதை புனைந்தையும்,

**"கண்ணி கட்டிய கதிர அன்ன**
**ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி"** **(நற்-200)**

**"அணிமலர் முண்டகத்து ஆய்பூங் கோதை"** **(நற்-245)**

**"குவளையொடு தொடுத்த நறுவீ முல்லைத்**
**தளையவிழ் அலரித் தண்நறும் கோதை"** **(நற்-367)**

**"காரிகையாகத் தன் கண்ணி திருத்தினாள்**
**கோதை மார்பிற் கோதையானும்,**
**"கோதையைப் புணர்ந்த கோதையானும்"**[43]

போன்ற பாடல்களால் அறிய முடிகிறது. சிறு குழந்தைகளுக்கும் மலர்களைத் தலையில் சூடியுள்ளனர் என புறப்பாடல் (48) கூறுகிறது. தாமரை, நொச்சி, கடம்பு, வேம்பு, பகன்றை, உழிஞை 'தெரியல்' பூக்களில் மாலைகளைச் செய்தனர். இதனை,

**"கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்" (அகநா.5)**

என்ற அடி வழி அறியலாம். நெய்தல், ஆம்பல் இவற்றால் 'தொடலை' எனப்படும் ஒரு வகை மாலையைத் தொடுத்தனர் என்பதை,

**"வள்ளிதழ் நெய்தல் தொடலை" (நற்-155)**

**"அரி பெய் சிலம்பின் ஆம்பலம் தொடலை" (அகநா.6)**

என்ற இலக்கிய குறிப்புக்கள் காட்டுகின்றன. சேரனுக்குரிய பனம் பூவிலான மாலையினைப் புடையல் என்ற பெயரால் வழங்கினர். "நேபாளத்தில் மணமக்கள் மூன்று விதமான மாலைகள் அணிந்தனர். வாடாத ஒரு புல்லைக் கொண்டு கட்டிய முதல் மாலை வாழ்க்கை பசுமையாக இருக்க வேண்டும் என்பதற்காக அணியப்படுகிறது. இரண்டாவது மல்லிகைப் பூக்களால் தொடுக்கப்பட்ட மாலை. இது பண்புக்கு அடையாளமாகும். மூன்றாவது சந்தனக் கட்டைகளை வெள்ளிக் கம்பியினால் கட்டிய மாலை. இது ஆரோக்கியத்தையும், நீண்ட ஆயுளையும் கொடுக்கும்"[44] என நாகராசன் குறிப்பிடுகிறார்.

மலர் தொடுத்தலை ஒரு வகைக் கலையாகப் போற்றிவருகின்றனர். வண்ண நறுமலர்களைக் காட்சிக்கினியவையாகக் கோத்து அமைப்பதால் கோவை எனவும், சுருட்டிக் கட்டுவதால் கிண்டை எனவும், இணைத்துக் கட்டுவதால் தார், மாலை எனவும், தண்டில் கட்டுவதால் கண்ணி எனவும், பிணைத்துப் பின்னிக் கட்டுவதால் பிணையல் எனவும், தொகுத்துத் தொடுத்துக் கட்டுவதால் தொடையல் எனவும் கூறுவர். இவற்றிற்குச் சிறப்புப் பெயராகப் பூமாலை என்றும் கூறப்படுகிறது. பல்வேறு வண்ண நறுமலர்களைக் கொண்டு கலந்து தொடுப்பதால் கதம்பம் என்று கூறப்படுகிறது. இவ்வாறு பல்வேறு மாலைகளையும் தெய்வங்களுக்கு அலங்காரங்களையும் செய்து மக்கள் இன்புற்று வணங்குகின்றனர். தமிழ்ப் பண்பாட்டில் மலர்கள் தொண்டு தொட்டும்

இன்றும் சிறப்புற்று வாழ்வியலை மையப்படுத்தி சிறந்தப் பொருளாகக் காணப்படுகின்றன.

**வழிபாட்டில் பூக்கள்**

வழிபாடு என்பதற்கு வழியிற் செல்லுகை, வழியைப் பின்பற்றுகை, வணக்கம், பூசனை எனப் பல பொருள்கள் உள்ளன. கடவுளையோ, கடவுள்களையோ, உயிருள்ளவற்றையோ, உயிர் இல்லாதவற்றையோ வழிபாட்டிற்குரியச் சொற்களைக் கொண்டு வழிபடுவதே வழிபாடு எனப் 'பிரிட்டானிகா கலைக்களஞ்சியம்' குறிப்பிடுகிறது. மனிதகுலம் தோன்றிய நாள்முதல் இன்றுவரை பல்வேறு வகைப்பட்ட நம்பிக்கைகளின் அடிப்படையில் பல்வேறு வகையான வழிபாட்டு முறைகள் நடைமுறைப்படுத்தப்பட்டு வழக்கில் இருந்து வருகின்றன. அவற்றில் பல வழக்கொழிந்தும் சில பரிணாம வளர்ச்சிப் பெற்றும் இருந்து வருகின்றன. தொன்மையான வழிபாட்டு முறைகளில் இயற்கைப் பொருட்களும் நிகழ்ச்சிகளும் ஆற்றல் மட்டுமல்லாது உயிரும் உண்டு எனக் கருதி அவற்றை வழிபடுவதும் வழக்கில் இருந்துள்ளது. பண்டைய தமிழர் தம் வழிபாடுகளுக்குப் பூக்களையும், மாலைகளையும் பயன்படுத்தியுள்ளனர்.

இறைவனைப் பூக்களைக் கொண்டு வழிபாடு செய்யப்படுவதால் 'பூ செய்' என்பது 'பூசெய்' என்ற பொருளில் வழங்கப்பட்டது. பின்னர் அதுவே பூசை என்றும் பூஜை என்றும் மருவிவிட்டது. "இறைவனை வணங்கும் முறை திராவிடர் சிறப்பு முறை என்பதும், வைதிக வழிபாட்டில் மலர் வழிபாடு இடம் பெற்றிருக்கவில்லை என்றும், ஆரியர் திராவிடரிடமிருந்தே மலர் வழிபாட்டு முறையைக் கற்றனர். 'பூஜை' என்னும் வடசொல் 'பூ செய்' என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. வேதகால ஆசிரியர் இறைவனுக்கு வேள்வியயிற்றி அதில் மிருகங்களின் தசை முதலியவற்றைப் போட்டு வழிபாடியற்றினர் என்றும், திராவிடரே தொன்னெடுங் காலந் தொடங்கி மலர் வழிபாட்டு முறையினை மேற்கொண்டொழுகினர்"[45] என்றும் எஸ்.சுநீதகுமார சட்டர்ஜி குறிப்பிகிறார். தெய்வங்களுக்கு வண்ண நறுமலர் தூவி வழிபடும் செயல் மிகத் தொன்மையானதாகும். வண்ண மலர்கள் தூவி வழிபட்டால் வாழ்வில்

பெறுதற்குரிய பேறாகிய வீடுபேற்றினை, முத்தியின் பத்தினை அடையலாம் என்பதைத் திருஞானசம்பந்தர்,

**“சித்தந் தெளிவீர்காள்**

**அத்தன் ஆரூரைப்**

**பத்தி மலர்தூவி**

**முத்தி யாருமே”** **(பதிகம்-91:1)**

எனப் பாடியுள்ளார். “திருவிரிஞ்சைப் புராணத்துள், மார்க்க சகாய தேவர் என்பவர் மக்களின் பழைய வினைகளையெல்லாம் நீக்கி நன்னெறியடைவதற்கு எவ்வாறு இறைவனை வழிபட வேண்டும் என்பதையும், மலர் வழிபாடு காரணமாகப் பிறவிப்பிணிக்குக் காரணமான கன்மங்களையும், வினைகளையும் தவிர்க்கும்”[46] என்பதையும் குறிப்பிட்டுள்ளன. தெய்வங்களுக்கு உகந்த மலராகத் தேர்ந்தெடுத்து வழிபடுவதில் நவகிரகங்கள் முக்கியமானதாக உள்ளன. சூரியனுக்குச் செந்தாமரையும், சந்தரனுக்கு வெள்ளரியும், செவ்வாய்க்குச் செண்பகமும், புதனுக்கு வெண்காந்தளும், வியாழனுக்கு முல்லையும், வெள்ளிக்கு வெண்தாமரையும், சனீசுவரனுக்குக் கருங்குவளையும், இராகுக்கு மந்தரையும், கேதுக்குச் செவ்வல்லியும் உகந்தவையாகும் என்பர். ‘இனமலர் கையில் கொண்டு அங்கு இச்சித்த தெய்வம் போற்றி’ என்பார் சித்தியார். இம்மலர்களை ஆண்மலர்கள், பெண்மலர்களென்றும், பகலில் பூப்பன, இரவில் பூப்பனவென்றும், நிலப்பூ, நீர்ப்பூ, கொடிப்பூ, கோட்டுப்பூ எனவும் பிரித்து வழிபடுவர். ‘தளிர், இலை, அரும்பு, மலர், போது என்று பல நிலைகளில் மலர்கள் வகைப்படுத்தப்பட்டு வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்படுகின்றன’[47] என்று குறிப்பிட்டுள்ளார்.

**“குல்லை குளவி கூதளங் குவளை**

**இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்”** **(நற்-376)**

என்ற அடிகள் மூலம் இறைவழிபாட்டில் மாலையாகக் கலந்து கட்டிச் சூட்டியுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

**“சிறுவீ முல்லைப் பெரிதுகமழ் அலரி**

**தானுஞ் சூடினன் இளைஞரும் மலைந்தனர்”** **(நற்-361)**

என்ற பாடலடிகளில் சிறிய முல்லையின் பெரிய மணம் வீசுகின்ற மலரையும், புகழையுமுடைய இறைவனுக்குச் சூட்டினர். உடன்வந்த இளைஞரும் சூட்டினர் என்பது சுட்டப்படுகிறது.

**“……………….சோறு**

**குருடைப் பலியொடு”** **(நற்-367)**

என்ற நற்றிணைப் பாடலில் சோற்றுத் திரளையைத் தெய்வத்துக்கிடும் பலியுடனே கவர்ந்து கொள்ளுமாறு பெரிய புகழ் பொருந்திய சிறுகுடி என்னும் ஊரிலிருக்கின்ற அரிவையே! நின் பலவாகி கரிய கூந்தலிற் சூடிய மாலை போல என வாழ்த்தியுள்ளனர். வினைமுடித்த மகிழ்ச்சியுடன் உடன் சென்றிருந்த வீரர்கள் குவளை மலரொடு இடையிட்டுத் தொடுத்த நறிய பூவையுடைய முல்லையின் முட்டவிழ்ந்த மணமுடைய பூமாலையைச் சூடி வந்தனர் என்பது சுட்டப்படுகிறது. வழிபாட்டில் இறைவனுக்குச் சூட்டிய பூக்களையும், மாலைகளையும் ஆண்கள் சூட்டியது புலப்படுகிறது.

**காலையில் அணிவிக்கும் பூக்கள்**

மல்லிகை, எருக்கு, தளவம், தாமரை, அலரி ஆகியவை காலையில் பூசனைக்குச் சிறந்தவையாகும். நந்தியாவர்த்தம் மிகச் சிறந்தது.

**உச்சியில் அணிவிக்கும் பூக்கள்**

பொன்னூமத்தை, புலிநகக் கொன்றை, வெள்ளைப் பாதிரி, மந்தாரை, கொன்றை, தும்பை ஆகியவை நன்பகல் பூசனைக்குகந்தவையாகும்.

**மாலையில் அணிவிக்கும் பூக்கள்**

மல்லிகை, முல்லை, செண்பகம், கொழுந்து, சிறுசெண்பகம் ஆகியவை மாலை பூசனைக்குகந்தவையாகும்.

**ஏனைய காலங்களில் அணிவிக்கும் பூக்கள்**

புன்னை, வெள்ளெருக்கு, செண்பகம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகியனைவப் பொதுவாக எல்லாக் காலத்திலும் பூசனைக்குரியவையாகும் என (பழனி திருக்கோயில் திருக்குடநீராட்டு விழா மலர், 88.(பக்-32) குறிப்பிடுகின்றனர்.

விநாயகருக்கு எருக்கம்பூ, செம்பருத்தி, தாமரை, ரோஜா ஆகியவையும், முருகனுக்கு மல்லிகை, முல்லை, சாமந்தி, காந்தள், ரோஜா போன்றவையும் பூசைக்குவந்தவையாகும். அம்பிகைக்கு வெண்தாமரை, மல்லிகை, முல்லை, செம்பருத்தி, செம்பவளவல்லி ஆகியவை உகந்தவை. சிவபொருமானுக்குத் தும்பை, தாமரை, சங்குப்பூ, செம்பருத்தி ஆகியவையாகும்.திருமாலுக்குத் தாமரை, பவளமல்லி, மரிக்கொழுந்து ஆகிய பூக்கள் உகந்தவையாகும்.

**இறைவழிபாட்டில் பூக்கள்**

இறைவழிபாட்டில் அலங்காரத்தில் உதிரி மலர்களும், பல்வகை வாசனைத் திரவியங்களும், மாலைகளும் இடம் பெற்றமை சங்க இலக்கியம் முதல் காலங்காலமாக இன்று வரை தொன்று தொட்டுக் காணப்படுகிறது. பூசை, வழிபாட்டில் ஆகம அடிப்படையில் சில முறைகள், விதிகள் பற்றிக் கூறும் வி.சூம்புரீச்வர சிவாச்சாரியார் ‘சந்தனமும் பூவும் இல்லாத பூசை பயனற்றது’ என்கிறார். இறைவழிபாட்டில் சமயங்களடிப்படையில் மலரினைப் பயன்படுத்தி வருவது முக்கியமானதாகும். கடவுளை வழிபடப் பூக்கள் அவசியம். சாமி சிலைக்கு மலர்மாலைகள் அணிவித்தும், பூக்களால் அலங்கரித்தும் வழிபடுவது இன்றும் வழக்கிலுள்ளன. பெரிய கோயில்களில் நந்தவனங்களில் மலர்ச்செடிகள் வளர்க்கப்பட்டன. அச்செடிகளிலிருந்து பூக்களைக் கொய்து மலர் மாலைகள் தொடுத்துள்ளனர். இதற்கென்று திருக்கோயில்களில் பண்டாரம் எனப்படும் பூக்கட்டும் பணியாள் இருக்கிறார். இவருக்கு ஊதியமும், மானியமும் வழங்கப்படுகிறது. பூக்களால் முழுமையாக அலங்கரிக்கப்பட்ட பூப்பல்லக்கில் உற்சவமூர்த்தி தெருக்களில் உலாவாக இன்றும் வருகின்றார். நாட்டார் தெய்வங்கள் அல்லது துடியான தெய்வங்களுக்கு ஆடு, சேவல் பலியிடும் போதும் அவற்றின் கழுத்தில் மலர் மாலை சூட்டித் தலையைத் துண்டிப்பதும் மரபாகக் காணப்படுகிறது.

**இந்துக்களும் மலர்களும்**

செந்தாமரை மலரில் திருமகளும், வெண்தாமரை மலரில் கலைமகளும் பொதுவாகத் தாமரை மலரில் நான்முகனும் வீற்றிருந்து அருள்கின்றனர் என்பது சமயங்களின் நம்பிக்கையாகும். புத்தபிரானைத் தாமரை மலரில் இருத்தியும் வழிபாடு புரிந்துள்ளனர். சிவனுக்கு அடையாள மலராகக் கொன்றை மலர் கூறப்படுகிறது. ‘சூடுவேன் பூங்கொன்றைச் சூடிச்சிவன் திரள்தோள்’ என்ற திருவாசம் (8) திருவம்மானை (7) பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. மாணிக்கவாசகர் கொன்றை மலரணிந்த இறைவனிடம் ஈடுபாடு கொண்டு சிவன்பால் காதல் மிக்க நாயகியின் நிலையில் இருந்து சிவன் சூடிக் கழித்த கொன்றை மலரைச் சூடித் தானும் களித்தாட விரும்புவதாக இப்பாடல் உணர்த்துகிறது. நீலமேனி நெடியோனான திருமாலைக் குறிப்பிடுகையில் காயாம் பூ நிறத்தை உடையவன் என்பதை ‘மேயான் வேங்கடம் காயா மலர்வண்ணன்’ என்று நம்மாழ்வார் திருவாய்மொழியில் குறிப்பிட்டுள்ளார். முருகன் குறிஞ்சி நிலத் தமிழ்த் தெய்வமாவார். முருகு என்றால் மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு என்ற பொருள்தரும் சொல்லாகும். ‘முருகு’ என்னும் சொல் நறுமணத்திற்கும், தெய்வத்திற்கும் ஒப்ப வழங்கியதைப் “படையெலாம் தெய்வம் கமழும்” என்று ஐந்திணை ஐம்பது உணர்த்துகிறது. நல்ல மணமுடைய கடம்பு, எறுழ், குரவம், வெட்சி, காந்தள், முல்லை, மல்லிகை எனப் பல மலர்களைச் சூடி மகிழ்பவன் என்பதும் சுட்டப்பட்டுள்ளது.

**வெறியாட்டில் பூக்கள்**

வேலன் வேட்டுவச்சி இவர்கள் வெறியாட்டு ஆடும் போது பலவிதமான பூக்களை அணிந்துள்ளனர். களம் அமைத்து வெறியாட்டு ஆடுவர். வெறியாட்டு ஆடும்போது வேலன் வேம்பின் பச்சிலை, நீலமலர் ஆகியவற்றைச் சூடி வருகிறான். முருகனுக்குரிய கடம்ப மாலையும், காந்தள், குவளை, நெய்தல், வெங்காந்தள், குரவம், நீலம், ஆசினி, வேங்கை, குறிஞ்சி, புன்னை போன்ற மலர்களையும் சூடி வெறியாட்டு ஆடியதாக நற்றிணையில் கூறப்படுகிறது. களவு வாழ்வில் ஈடுபட்டு உடல் வேறுபடடிருக்கும் தலைவிக்காக, அவளது நோய் தீரவேண்டும் என்று தலைவியின் பெற்றோர் இந்த வெறியாட்டு நிகழ்த்துவர். தலைவியின் பசப்பு நோய் தீர, அவளுக்காக அன்னை முருகனுக்கு ஆட்டைப்

பலிகொடுக்கிறாள் என அகத்திணை (232) குறுப்பிடுகிறது. பலியாகக் கொடுக்கும் ஆட்டின் மீது பூக்களைத் தூவித் துதித்து, ஆட்டினை ஏற்றுக் கொள்ளும்படி வேலன் முருகனை வேண்டுவதாக,

**"......................நாடன்**

**தண்கமழ் வியன் மார்பு உரிதினில் பெறாது**

**நன்னுதற் பசந்த படர்மலி அருநோய்**

**அணங்கென உணரக் கூறி வேலன்**

**இன்னியங் கறங்கப் பாடிப்**

**புன்மலர் சிதறியர் பரவுறு பலிக்கே" (நற்-322)**

என்னும் பாடல் குறிப்பிடுகின்றது. முருகன் குறிஞ்சி நிலக் கடவுள், குறிஞ்சி பூக்களை அந்நில மக்கள் பறித்து அணிவித்தனர். கார் மலராகிய கடம்புடன் பச்சிலையும் இடையிடையே சேர்த்துக் கட்டி, மாலையாக முருகனுக்கு அணிவித்தனர்.

**"கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியலை**

**சூர் நவை முருகன்"[48]**

என்ற அடிகளில் காணலாம். முருகனுக்குக் காந்தள் மலருடன் குறிஞ்சி மலரையும் சூடியதை,

**"நறைக்காந்தள்**

**குறிஞ்சி மலரொடு அணிந்த நறுங்**

**குறிஞ்சி பெருமான்"[49]**

என்பதன்வழிக் காணலாம். வெறியாட்டின் போது முருகனுக்குப் பனந்தோடு, கடம்ப மலரைக் கலந்து கட்டியும் வேலனும், வேட்டுவச்சியும் அணிந்து வருவர் என அகம் (98) குறிப்பிடுகிறது. கடம்ப மரத்தையே முருகனாக எண்ணி வழிபட்டதாகப் பெரும்பாணற்றுப்படை (75) கூறுகிறது. கடவுளுக்கென்றே மலர்ச்சுனைகள் இருந்தன,இப்பொதும் இருக்கின்றன. அச்சுனைகளில் உள்ள பூக்களை மக்கள் பறிப்பதில்லை.

**“கடவுட் கற்சுனை”** **(நற்-34)**

குவளை, காந்தள், கடம்ப மாலையும் முருகனுக்கே சூட்டுவர் எனநற்றிணை கூறுகிறது. குவளையின் இதழ்களைக் கிள்ளி முருகனுக்குத் தலையணியுடன் சூட்டப்பட்டதை,

**“பைந்தாட் குவளை தூவிதழ் கிள்ளி”**[50]

என்னும் அடி விளக்குகின்றது. காந்தட் பூ முருகன் திருமுடியில் சூட்டப்பட்டது என்பதை,

**“சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்**
**பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்”**[51]

என்பதன் வழிக் காணலாம். சுனையில் மலர்க் கொய்தும், அவற்றை மாலையாகத் தொடுத்தும், மலையிலுள்ள செங்காந்தளைக் கொய்தும் முருகவேள் போர்க்குச் சூடுங் கண்ணியாக அமைத்துச் சாத்தி வழிபாடு செய்ததை,

**“சுனைப்பூக் குற்றும் தொடலை தைஇயும்**
**முலைச்செங் காந்தள் கண்ணி தந்தும்”** **(நற்-173)**

எனக் கூறுகிறது. முருகனை வழிபடுவதற்குரிய மலர்களுள் வேங்கை, ஆசினி மலரும் இடம்பெற்றுள்ளன. குறமகள் தன் திருமணம் விரைவில் நடைபெற வேண்டி, வேங்கை மலர் கொண்டு வழிபட்டதை ஐங்குநுறூறு எடுத்துக் கூறுகிறது.

**“மன்ற வேங்கை மலர்சில கொண்டு**
**மலையுறை கடவுள் குலமுதல் வகுத்த”** **(ஐங்-259)**

**“பேதை ஆசினி ஓசித்த**
**வீதா வேங்கைய மலைகிழ வோற்கே”** **(நற்-51)**

எனவும் சுட்டப்படுகிறது. முருகன் திருவடியில் கடம்பு மலரைச் சூடினார். திருமார்பில் கடம்பின் கண்ணி சூடினார். அதனால் ‘கடம்பன்’ என்னும் திருப் பெயர் சூடப்பட்டது. இதனை,

**"கடம்பின் சீர்மிகு நெடுவேள்"**[52]

**"கடம்பமர் நெடுவேள்"**[53]

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

### கிறித்துவத்துவமும் மலர்களும்

தமிழ் நாட்டில் வாழ்கின்ற கிறித்துவர்கள் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை வழிபாட்டிலும், கிறித்துமசு முதலிய பண்டிகைகளிலும், விழாக்களிலும் மாதா கோயில்களிலும், தம் மனைகளிலும் மலர்களைப் பயன்படுத்தி வழிபாடு செய்கின்றனர். வேளாங்கண்ணி திருவிழாவிலும் ஞாயிற்றுக்கிழமைக் காலை வழிபாட்டிலும் மலர்கள் பெருமளவில் பயன்படுத்வதைக் காணமுடிகிறது. தழிழகக் கிறித்துவர்களில் கத்தோலிக்கப் பிரிவினர் இந்து சமயத்தவரைப் போலவே மலர்களுக்கு சிறப்பிடம் தரக் கூடியவர்கள்.

### இசுலாமியமும் மலர்களும்

வாழ்கையுடன் நெருங்கிய தொடர்புடைய மலர்களைப் பயன்படுத்துவதில் மனரீதியில் எந்த பேதமுமில்லை. இசுலாமியர்களுக்கும் மல்லிகைப் பூக்களுக்கும் நெருக்கமான தொடர்புண்டு. தர்காவில் அடங்கியுள்ள சூபிகளின் சமாதிகள் மேல் பச்சை வண்ணத் துணிக்கு (கவன்) மேல் மல்லிகைச் சரங்கள் போர்த்தப்படுகின்றன. திருமண நாளில் மணமக்களின் முகத்தை மலர்ச்சரத்தால் (சேரா) மறைப்பது வழக்கினிலுள்ளது. இறந்தவரின் சடலத்தைத் தூக்கிச் செல்லப் பயன்படுத்தப்படும் மரப்பெட்டியின் மீது மலர்ச்சரங்கள் தொங்கவிடுவது இன்றும் நடைமுறையில் காணப்படுகிறது. மல்லிகை மலரிலிருந்து தயாரிக்கப்படும் அத்தர், சவ்வாது எனப்படும் வாசனைத் திரவியம் பயன்படுத்துகின்றனர். இசுலாமியப் பெண்கள் மல்லிகைப் பூக்களைச் சூடுவதில் ஆர்வமுடையவர்கள். வளமனைகளிலும். மௌலூது ஓதுமிடங்களிலும் மல்லிகை, முல்லை மலர்களை மலரலங்காரம், மலர் தொங்களையும், உதிரிப் பூக்களையும் பயன்னடுத்துகின்றனர். சந்தனக் கூடு, கந்தூரி போன்ற திருவிழாக்களிலும் வண்ண நறுமலர்களைப் பயன்படுத்தி மகிழ்கின்றனர். இசுலாமியர்களுடைய வாழ்க்கை மலர்களுடன் நெருக்கமான தொடர்புடையது என்பது புலப்படுகிறது.

தற்காலத்தில் ஒவ்வொரு மதம், இனம், சாதிகள் தங்களுக்கான தொன்மை, அடையாளம், பெருமைகளை தேடிக் கண்டறிந்து வெளிப்படுத்தியிருக்கும் நிலையில் நற்றிணையில் காணலாகும் சிலப் பூக்கள் இனங்களை அடையாளப்படுத்துவதாக வெளிப்படுத்தியுள்ளது. அவற்றுள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், தாமரை ஆகிய பூக்கள் இனம், சமயம், சாதி நிலைகளை அடையாளப்படுத்துவது புலப்படுகிறது.

**திருமணத்தில் பூக்கள்**

தமிழரின் வாழ்க்கையில் பூக்கள் எல்லாக் காலத்திலும் நடைபெறும் சிறப்பு நிகழ்வுகளிலும் முதன்மை இடம் வகிக்கின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை எல்லா நிலையிலும் பூக்கள் இல்லாமல் எதுவுமில்லை. "பண்டைத் தமிழ்க்கன்னி மலா் சூடாள் என்பதும், மலா்சூடின் கன்னியாகாள். ஒருவனை வரித்தாள் என்பதும் நம் பழஞ் சமுதாய வழக்கு"[54] என்று வ.சுப. மாணிக்கம் கூறுகிறாா். திருமணப் பூவாக வேங்கை, முல்லை போன்ற பூக்கள் இடம் பெற்றிருப்பதை நற்றிணை எடுத்தியம்புகிறது. திருமணத்திற்கும் வேங்கை மலருக்கும் தொடா்பு காணப்படுகிறது என்பதை (க.பூரணச்சந்திரன், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், 2014 பக்-26,27)

**"கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்கு சினை" (நற்-222)**

என்னும் பாடல் அடி சுட்டுகிறது. இதில் வேங்கை மலரைத் திருமண நிகழ்வோடு கபிலா் சுட்டியுள்ளாா். அகம் 182, 118 ஆவது பாடல்கள் கூறுகின்றன. இல்லற வாழ்வின் பண்பைச் சிறப்பிக்கும் மலராக முல்லை காணப்படுகிறது. பெண்கள் தம் கற்பின் மேன்மையை உணா்த்த முல்லை மலா் சூடுவா் என்பதை,

**"முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்" (நற்-142)**

என்கிறது நற்றிணை. இல்லறத்திலிருந்து நல்லறம் செய்யும் பெண்ணின் மென்மையையும் சுட்டுகிறது. பண்டையத் திருமண நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் விற்றுற்று முதெயினனாா் பாடிய அகநானூற்றுப் பாடலில், ஆம்பற்பூவின் முறிக்கப்பட்ட இதழ்களால் ஆகிய பருத்த நிறம் பொருந்திய மாலையை நீக்கி, வண்டுகள் ஒலிக்கும் ஆராய்ந்த மலா்களைச் சூடிய வதுவை மண்ணிய மணமக்கள் குறிக்கப்பெறுவதை,

**“பருஉப் பகை ஆம்பல் குரூஉத்தொடை நீவிச்**

**சுரும்பிமிர் ஆய்மலர் வேய்ந்த**

**இரும்பல் கூந்தல்”** **(அகநா.136)**

என்பதில் அறியலாம். பெண் பார்க்கும் நிகழ்வில் ‘பூ வைத்தல்’ சடங்கு குறிப்பிடத்தக்கது. பெண் பிடித்துவிட்டது, அவளை விரைவில் மணமகளாக ஏற்றுக் கொள்கிறோம் என்று உறுதியளிக்கும் வகையில் மணமகனின் தாயார், சகோதரிகள் அப்பெண்ணின் தலையில் பூவைச் சூட்டுதல் மூலம் தங்களுடைய உரிமையை உறுதி செய்து கொள்ளும் வழக்கம் இன்றும் உள்ளது. மணமக்களை வாழ்த்தும் பெருமக்கள்,

**“நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி**

**பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க”** **(அகநா.86)**

என மலர் கொண்டு வாழ்த்தியுள்ளனர். “திருமண நாளில் ஆணுக்கும் பெண்ணுக்கும் மலர் மாலைகள் அணிவித்துக் கையில் பூச்செண்டுகள் தரப்படுகின்றன. மணமேடையில் உற்றார் உறவினர் முன்னிலையில், திருமணம் என்ற உறவு எங்களுக்குள் ஏற்பட்டுள்ளது என்பதை வெளிப்படுத்தும் வகையில் மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருவருக்கொருவர் மாலைகளை மூன்று முறை மாற்றிக் கொள்கின்றனர். திருமண நாளில் மணப்பெண்ணுக்குத் தலைமுடி தெரியாத அளவுக்குப் பூச்சரத்தைச் சூட்டுவதன் மூலம் பெண்ணின் மனதில் குதூகலத்தை ஏற்றுகின்றனர்”[55] எனக் குறிப்பிடுகின்றனர். மணமக்கள் தலையில் மலர்தூவி வாழ்த்தியதை இளங்கோவடிகள், கோவலன் கண்ணகியின் திருமணத்தைக் குறிக்கும் பொழுது,

**“காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்**

**தீதறுகென வேத்திச் சின்மலர் கொடு தூவி”**[56]

என்கிறார். “சிலப்பதிகாரம் கானல்வரியில் யாழினைக் குறிப்பிடவரும் இளங்கோவடிகள் அது மணமக்கள் போல் மலர் சூடிக் காணப்பட்டது என்கிறார்”[57] குமரியர் பூவணியும் உரிமையைத் திருமணநாள் முதல் பெறுகின்றனர் என்பதை அறியமுடிகிறது. செந்நிற வேங்கை பூவின் மேல் இருந்த மயில் நகையணிந்த பெண் போலக் காட்சியளிக்கும் நாட்டவனே, நல்லது செய்தாய் நின் குடும்பம்

வாழ்க, திருமணத்தைக் கொண்டாடும்படி பின்னிய கரிய இவன் கூந்தலில் மலர் சூட்டினாய் என்பதை,

> **"எரிமருள் வேங்கை யிருந்த தோகை**
> **இழையணி மடந்தையில் தோன்றும் நாட**
> **இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்**
> **நன்மனை வதுவை அயரவிவள்**
> **பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே"[58]**

என்ற பாடலின் வழி அறிய முடிகிறது. மணஞ்செய்து கொண்ட களவொழுக்கத் தலைவனைப் பார்த்துத் தோழி மனமார வாழ்த்துவதாக அமைந்துள்ளது. குமரியின் கூந்தலில் பூவைக் கண்டவுடன் ஊர்ப்பார்வை மாறிவிட்டதே என்று தலைமகள் எண்ணும் நிலையில் ஒருவனோடு ஒருத்திக்கு உறவு உண்டு என்பதற்கு மலர் போதுமான அடையாளம் என்று ஊரார் துணிவுற்ற அலர் மொழிந்தனர். இதனை,

> **"அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்**
> **இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்**
> **அறியேன் போல உயிரேன்**
> **நறிய நாறும்நின் கதுப்பெண் ணேனே"                (நற்-143)**

என்ற பாடலில் செவிலி தலைமகளுக்கு உரைப்பதாக அமைந்துள்ளது. இயற்கை வனப்புமிக்க இடத்தில் இன்புறும் தலைவன் காதலியின் கருங்குழலில் பூங்கொத்துக்களைச் சூடி, அணிசெய்து மகிழ்வான். வீடு செல்லும்போது தலைமகள் பூவைக் கூந்தலிலிருந்து அகற்றி விடுவாள். பூவை எடுத்தெறிந்தாலும் பூ இருந்த கூந்தல் மணம் வீசும். ஆதலின் தாய் மகளின் கூந்தலில் பூவைப் பார்க்கவிட்டாலும், அதன் மணத்தை அறிந்து நின் கூந்தல் நறுமணம் வீசுகின்றதே என்று கேட்டதால், தலைவி உடன்போகிய நிலைக்குச் செவிலி, தானே காரணம் எனக் கூறுகிறாள்.

திருமணமான பெண் எனக் குறிப்பதற்குப் பூவானது குறியீடாக இருக்கின்றது. திருமணமான பெண்கள் என்பதைக் காட்டச் சில பொருட்களோடு

பூவும் புனிதமானக் கட்டமைப்பது தொடர்ந்து நடைபெற்று வருகிறது. கணவன் இறந்தவுடன் பெண் பூச்சூடக்கூடாது என்பது வழக்கம். “பெண்கள் தலையில் பூச்சரத்தைச் சூடி அழகு பார்த்ததுடன், அக்காட்சியை நிழற்படமாக எடுத்து வீட்டுச் சுவரில் மாட்டியிருந்தனர்”[59] என்கின்றனர். கூந்தலைப் பாதுகாத்தலில் பெண்கள் தனிக்கவனம் செலுத்தினர். காட்டுமல்லிகை, அதிரல், குவளை, நெய்தல் முதலிய பலவித மணம் தரும் பூக்களைக் கூந்தலில் சூடிக்கொண்டனர். திருமணத்திற்குச் செல்லும் பெண்கள் பூச்சூடி இருத்தல் இயற்கையானது. நற்றிணையில் தலைவன் தன் தலைவியைப் பிரிந்து வருந்தும் நிலையை,

**“குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை” (நற்-105)**

**“குறுஞ்சுனைக் குவளை அடைச்சிநாம் புணரிய” (நற்-204)**

எனும் அடிகள் சுட்டுகின்றன. இப்பாடலடிகள் குடமலைச் சுனையிலுள்ள கரிய இதழையுடைய குவளையின் வண்டு மொய்க்கும் பெரிய மலரைச் சூடி மணங்கமழ்கின்ற அழகிய சிலவாய கூந்தலை உடையவள் என்பதை எடுத்துரைக்கிறது. பெண்கள் குவளை மலரைச் சுடியுள்ளனர். குவளை மலரை இறைவழிபாட்டில் பூக்களாகவும், மாலையாகவும் அணிவிக்கின்றனர். இறைவனுக்குச் சூடும் பூவாகக் கருதப்படுவதால் பெண்கள் பொதுவாகச் சூடுவதில்லை.

ஆண்கள் நீளமான கூந்தலை வளர்த்து அள்ளி கொண்டையாகச் செருகிப் பூக்களைச் சூடிக் கொண்டனர்.

**“குவளையொடு தொடுத்த நறுவீ முல்லைத்**
**தலையவிழ் அலரித் தண்நறும் கோதை**
**இளையருஞ் சூடி வந்தனர்” (நற்-367)**

வினை முடித்துத் திரும்பும் வீரர்கள் கரிய கூந்தலில் குவளை மலரை இடையிட்டுத் தொடுத்த நறுமணமுடைய முல்லையின் முட்டுவாயவிழ்ந்த பூமாலைச் சூடியதைப் புலப்படுத்துகின்றன.

போருக்குச் சென்ற வீரர்கள், தலையில் பூக்களைச் சூடியிருந்தனர் என்பதும் இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. “பெண்கள் பெரும்பாலும்

தாலியில் பூக்களைச் சூடியிருந்தனர்”[60] என்பது புலப்படுகின்றது. ஆண்கள் கொன்றைப் பூக்களைச் சூடியிருந்தனர் என்பதை,

**“சுடு பொன்னன்ன கொன்றைசூடிக்**

**கடி புகுவனர்போன் மள்ளரும் உடைத்தே”** **(ஐங்-432)**

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல்வழி அறியலாம். அன்று ஆண்களில் சிலர் காது மடல்களில் ஒற்றைப் பூவினைச் செருகியிருந்தனர். இன்று நாகரிகத்தின் காரணமாக இச்சமூகப் பழக்கம் மாறிவிட்டது. ‘சாறு’ என்பது திருவிழாவினைக் குறிப்பது. திருவிழாவின் போது குயவன் தன் பணிக்குரிய சின்னமான நொச்சிப் பூ மாலையைச் சூடியிருந்ததை,

**“மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்**

**பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்”** **(நற்-293)**

என்ற பாடல் சுட்டுகிறது. நொச்சிப்பூ போர்ப் பூவாக, போர்ச் சின்னமாக அமைவதோடு திருவிழா அறிவிப்புச் சின்னமாகவும் திகழ்ந்துள்ளது. இதனை,

**“ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி**

**யாறுகிடந் தன்ன அகல்நெடுந் தெருவில்**

**சாறெென நுவலும் முதுவாய்க் குயவ”** **(நற்-220)**

என்னும் பாடல் வழி அறிய முடிகின்றது.

**புறத்திணைப் பூக்கள்**

அன்பின் ஐந்திணையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையும் புறத்திணையில், வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகையும் விளங்குகின்றன. முடியுடைய மூவேந்தர்க்கு அடையாளப் பூமாலையாக விளங்கிய பூக்கள் பனம்பூ, ஆத்திப்பூ, வேப்பம் பூவாகும். இச்செய்தியை,

**“போந்தை வேம்பே ஆரென வரூஉம்**

**மாபெருந் தானையர் மலைந்த பூவம்”**[61]

என்ற இலக்கிய அடிகள் மெய்ப்பிக்கின்றது. அகத்திணைக்கு ஈடாகப் புறத்திணைகளும் பூக்கள் பெயர்களைக் கொண்டே அமைந்துள்ளன. பகைவர் பசுநிரைகளைக் கவர வெட்சிப் பூவினை வீரர் சூடிச் சென்றனர். பசுநிரையினை மீட்கக் கரந்தைப் பூச்சூடி நின்றனர். மாற்றார் மண்ணைக் கவர வஞ்சிப் பூ மாலையுடன் வீரர் அணிவகுத்துச் சென்றனர். தம் மண்ணைக் காக்க காஞ்சிப்பூ சூடி நின்றனர். மதிலை வளைக்க உழிஞைப் பூச் சூடியும், மதிலைக் காக்க நொச்சிப் பூச் சூடியும் வீரர்கள் நின்றனர். போர்க்களத்தே தும்பைப் பூவைச் சூடினர். போரில் வெற்றி பெற்றவர் வாகைப் பூ சூடினர். போர்க் காலங்களில் மகளிர் பூ அணிந்து கொள்ளாமல் வருந்தினர் எனப் 'பூவின் வறுத்தலை முடிப்ப' (புறம்-44:7) என்பதிலிருந்து கணவனைப் பிரிந்து வாழும் தனிப்படர் மிகுந்த நிலையிலும் பூச்சூடிக் கொள்ளாமல் வருந்தினர். எனவே, பூவெனப்படுவது மகிழ்ச்சிக் காலங்களில் இன்பத்தை மிகுவிக்கும் மங்கலப்பொருளாயிற்று. "போர்ப்பூ என்பது, போரின்போது மன்னரும் வீரர்களும் அணியும் பூவாகும். தார்ப்பூ என்பது, மன்னரின் குடிக்குரிய மரபுப்பூவாகும். இதனைக் 'குடிப்பூ' என்றும் கூறலாம்"[62] என வெற்றிச் செல்வன் குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் இதனை,

> **"படையுங் கொடியுங் குடியுங் முரசும்**
> **நடைநவில் புரவியுங் களிறும் தேரும்**
> **தாரும் முடியும் போல்வள பிறவும்**
> **தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய"**[63]

என்கிறார். இதில் படை, கொடி, குடி, முரசு, குதிரை, யானை, தேர், தார், முடி ஆகியவை செங்கோல் வேந்தர்க்குரிய மரபுச் சின்னங்களாகும். இவற்றுள் 'தார்' என்பது பூவைக் குறிக்கும். "எழினி என்னும் மன்னன் கூவிளங் கண்ணியை மாலையாக அணிந்திருந்தான். ஆண்டிரன் என்பவன் சுரபுன்னைப் பூவைக் கண்ணியாக உடையவன். வாழைப் பூங்கண்ணி வாய்வாள் அண்டிரன்"[64] எனகின்றனர்.

**பூக்களின் மருத்துவப் பயன்கள்**

மருத்துவப் பயனுடைய பூக்கள் ஆயுர் வேதத்திலும், சித்த மருத்துவத்திலும் பலவாகக் காணப்படுகிறன. பூக்கள் கண்ணுக்கும், கருத்துக்கும் விருந்தளிப்பதோடு உடலுக்கும் உறுதியளிப்பவையாகும். உடலுக்கு வலிமையூட்டுவதன் மூலம் உயிரைப் பாதுகாப்பவையாகும்.

ஆய்வுக்குரிய நற்றிணையில் பூங்கொத்துக்கள், மலையில் அடித்துவரும் நீரால் பூக்களின் மணம், அதன் மருத்துவத் தன்மையைக் குறிப்பிட்டுள்ளது.

**"……..முகிழிண ரொடுவரு**

**விருந்தின் தீநீர் மருந்து மாகும்" (நற்-53)**

"மனத்தை 'மனச்சான்று' என்னும் உண்மை உணர்வுடையதாகக் காத்துக் கொள்கின்ற போது, அது ஆதனுடன் தொடர்பு கொள்ள வழி செய்கிறது. ஆளுமை வடிவினால் மனச்சான்று அடக்கப்படும் போது, மனம் அதனுடன் முரண்பாடு உடையதாய், நோய்த் தாக்கத்திற்கு வழி வகுப்பதாய் ஆகிவிடுகிறது"[65] என மரு.கு. பூங்காவனம் குறிப்பிடுகிறார். பெரும்பாலான பூக்களுக்குரிய மருத்துவக் குணங்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆம்பல், ஆவிரை, கருவிளை, வாழை, பூளை, பாதிரி, மா, முல்லை, கைதை, தாமரை, நொச்சி ஆகிய பூக்கள் குறிப்பிடத்தக்கன.

**ஆம்பல்:** ஆம்பல் மருத்துவக் குணம் கொண்டதாகும். உடல்சூடு, நீரழிவு பாதிப்புகள், சிறுநீர் எரிச்சல் மற்றும் கண் நோய்களுக்கு இப்பூக்களைப் மருந்தாகப் பயன்படுத்துவதன் மூலம் எளிதில் குணமடைகிறது.

**ஆவிரை:** ஆவிரம்பூ மருத்துவத்தில் மிகவும் பயன்படுகிறது. இப்பூவினால் தயாரிக்கப்பட்ட குல்கந்து உடலுக்கு நல்ல குளிர்ச்சியையும், வலிமையையும் கொடுக்கும். 'ஆவாரைப் பூத்திருக்க சாவாரைக் கண்டதுண்டோ' என்ற பழமொழியினை அறியலாம். ஆவாரம்பூ உயிர் காக்கும் மருந்தாகும். ஆவராம் பூவின் வேதிப் பொருள்கள் இரத்தத்திலிலுள்ள சர்க்கரையின் அளவைக் குறைக்கிறது. உடலைப் பொன்னொளியாக்குகிறது. "மூல நோய் உள்ளவர்கள் இந்தப் பூவைச் சுத்தம் செய்து வெயிலில் உலர்த்தி இத்துடன் அருகம்புல் வேரையும் சேர்த்து இடித்துப் பொடி செய்து, சிறிது நெய்யுடன் கலந்து

நாள்தோறும் சாப்பிட உள்மூலம், வெளிமூலம் குணமடையும்"[66] என இரா. பூபதி குறிபிடுகிறார். சிறிதளவு ஆவாரம் பூக்களை வதக்கி ஒரு மெல்லிய துணியில் சுற்றிக் கண்களில் ஒற்றி எடுத்தால், சூட்டினால் ஏற்படும் கண்நோய் குணமாகும்.

**கருவிளை:** கருவிளையின் இலை, வேர் மற்றும் விதை முதலியவை மருத்துவக் குணம் கொண்டவை. இது சிறுநீர் பெருக்கும் குடல் பூச்சிகளைக் கொல்லும் தன்மையுடையது. வாந்தி, பேதி, தும்மல் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

**வாழை:** வாழையின் அனைத்துப் பாகங்களும் மருத்துவப் பலன் கொண்டவையாகும். வாழைப்பூவை வாரம் இரு முறை சமைத்து உண்டு வந்தால் இரத்தத்தில் கலந்துள்ள தேவையற்ற கொழுப்புகள் கரைந்து வெளியேறும். இதனால் இரத்தம் வேகமாகச் செல்லும். இரத்த நாளங்களிலும் ஒட்டியுள்ள கொழுப்புகள் கரைந்து இரத்தம் சுத்தமாகும். இரத்தில் கலந்துள்ள அதிக அளவு சர்க்கரைப் பொருளைக் கரைத்து வெளியேற்ற வாழைப்பூவின் துவர்ப்புத் தன்மை உதவுகிறது. "சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டவர்கள் வாழைப்பூவைச் சுத்தம் செய்து சிறிது சிறிதாக நறுக்கி, அதனுடன் சின்ன வெங்காயம், பூண்டு, மிளகு சேர்த்துச் சமைத்துச் சாப்பிட்டு வந்தால் கணையம் வலுப்பெறும். உடலுக்குத் தேவையான இன்சுலின் சுரக்கும். சர்க்கரை நோய் கட்டுப்படும்"[67] என ஸ்ரீராம் குறிப்பிடுகிறார். வாழைப் பூவை அடிக்கடி சாப்பிட்டு வந்தால் பெண்களுக்கு ஏற்படும் வெள்ளைபடுதல் குணமாகும். பெண்களுக்கு ஏற்படும் கருப்பைக் கோளாறுகள், மாதவிலக்குக் காலத்தில் ஏற்படும் அதிக இரத்தப்போக்கு அல்லது இரத்த போக்கின்மை நீங்கும், மலட்டுத் தன்மையைப் போக்கும். ஈறு வீக்கம், புண் ஆகியவற்றிற்குச் சிறந்த மருந்தாகும். வியர்வை நாற்றத்தைப் போக்கி, வியர்வையை நன்கு வெளியேற்றும். கால்களில் ஏற்படும் பித்த எரிச்சலைக் குணப்படுத்தும். மூளை நரம்புகளில் சூட்டைத் தனித்து மூளைக்குப் புத்துணர்வுக் கொடுக்கும். (நக்கீரன் தழிழ் இணையம் - மலரும் மருத்துவமும் வாழைப்பூ)

**பூளை:** பூளைப்பூ நிறைந்த மருத்துவப் பயன்களைக் கொண்டதாகும். இச்செடியின் வேர் உடலில் தேங்கியிருக்கும் நீர்க்கோவை, கல்லடைப்புக்கு அருமருந்தாகும். காய்ந்த வேர்களைத் தேங்காய் எண்ணெய்யில் காய்ச்சி தலையில் தடவிவர முடி வலுவடைந்து கொட்டுவது நின்றுவிடும்.

**பாதிரி:** பாதிரியின் வேர், காய், பூ ஆகியவை மருத்துவப் பயன் நிறைந்தவை. மலர்ந்த பாதிரிப் பூவை சிறிது நேரம் மண்பானையில் போட்டுப் பின்னர் அதில் குடிநீரை ஊற்றி வைத்தால் நீர் சுவையாக, மணத்துடன் இருக்கும்.

**மாம்பூ:** மாம்பூ மருத்துவக் குணம் கொண்டுடது. பற்களுக்கும், ஈறுகளுக்கும் வலிமை தருவதோடு, வாய்ப் புண்களைக் குணமாக்குவதில் மாம்பூ மிகச் சிறந்த மருந்துப் பொருளாகப் பயன்படுகிறது. சுத்தம் செய்த மாம்பூ, மாந்தளிர், மாதுளம்பூ ஆகியவற்றை மூன்று கிராம் எடுத்து அம்மியில் வைத்து மைபோல் அரைத்து, பசும்பாலில் கலந்து காலை மற்றும் மாலையில் மூன்று நாட்கள் தொடர்ந்து சாப்பிட சீதபேதி குணமாகும். நீரழிவு நோய்க்கு மாம்பூ கண்கண்ட மருந்தாக விளங்குகிறது. இரத்த சர்க்கரையைக் கட்டுக்குள் வைக்கும்.

**முல்லை:** முல்லைப் பூ மருத்துவக் குணங்களைக் கொண்டுள்ளது. முல்லைப் பூவைத் தலையில் சூடிக் கொண்டு, அதன் மணத்தை முகர்ந்தாலே மன வியாதிகள் நீங்கி மனத் தெளிவு உண்டாகும். முல்லைப் பூவின் சாறைப் பிழிந்து மூக்கில் விட தலைவலி நீங்கும். இந்தச் சாற்றை மூன்று துளிகள் கண்களில் விட்டுவர கண் பார்வைக் குறைபாடு நீங்கும். முல்லைப் பூவை நீர் விட்டுக் காய்ச்சி பதினைந்து மில்லி குடித்துவர மாதவிடாய்க் கோளாறுகள் குணமடையும். சொறிசிரங்குகளைக் குணப்படுத்தும். இதன் வேர், இலை போன்ற பகுதிகளும் மருத்துவப் பயன்யுடையவை என ஈகரை- தமிழ்க் களஞ்சியம், முல்லைப் பூவின் மருத்துவக் குணம் பற்றிக் குறிப்பிடுகிறது.

**கைதை:** கைதை என்பது தாழம்பூ எனப்படுகிறது. இது சித்த மருத்துவத்தில் பெரும் பங்குபெறுகிறது. தாழம்பூவைத் துண்டு துண்டாக வெட்டி நீரில் இட்டுக் காய்ச்ச வேண்டும். நீர் நன்கு கொதித்த பின்னர் வடிகட்டித் தேவையான அளவு சர்க்கரை கூட்டிப் பாகுப்பதமாய் எடுத்து இருவேளைகள் குடித்து வர உடல் வெப்பம் தணியும், பித்த நோய்கள் தீரும். தாழம்பூ மணப்பாங்கினை வெயில் காலங்களில் தினமும் உபயோகித்தால் அம்மை நோய் வராமல் தடுக்கலாம். தாழம்பூ நீரோடைகளில் ஆறுகளில் புதராக வளர்ந்து மணம் பரப்புவதுடன் மலடு நீக்கும் மருந்தாகவும் பயன் தருகிறது. இதன் வேரை வேர்க்கிழங்கை எடுத்து வந்து அதை அரைத்துப் பசும்பாலில் கலந்து வடிக்காமல் குடிக்கலாம். இதனால் தாய்மை ஏற்படும். ஏற்கனவே உருவான கரு கலையும் ஆபத்தையும்

தடுக்கலாம். மருத்துவத்தில் தாழம்பூவானது வாதம், கபம், மேகம் தொடர்பான பிணியகற்றியாகும். வெக்கை நோய், காக்கை வலிப்பு நோய் உள்ளவர்களுக்குத் தாழங்கிழங்கும், தாழம் பூவும் மருந்தாகப் பயன்படுகின்றன. தாழம்பூவில் வாசனைத் திரவியம் எடுக்கப்படுகிறது.

**தாமரை:** செந்தாமரை, வெண்தாமரை ஆகிய இருவகைத் தாமரைப் பூக்களில் வெண்தாமரையே அதிக அளவில் மருத்துவத்திற்குப் பயன்படுகிறது. தாமரைப் பூ அதிமதுரம், நெல்லிக்காய், மருதாணி இலை ஆகியவற்றைச் சம அளவு எடுத்துப் பால்விட்டு அரைத்து ஒரு லிட்டர் தேங்காய் எண்ணெயில் காய்ச்சி வடித்துத் தைலத்தைத் தினமும் தலையில் பூசி வர இளநரை மறையும். கூந்தல் உதிர்வது நின்றுவிடும். தாமரைப் பூவை நிழலில் உலர்த்திப் பொடியாக்கிப் பனை வெல்லத்துடன் கலந்து பாகு காய்ச்சி சாப்பிட்டு வந்தால் இருமல், அதிக உதிரப்போக்கு போன்றவற்றிற்குத் தீர்வாக அமையும். தாமரைப் பூவில் தேன் கலந்து சாப்பிட்டு வந்தால் கண் பார்வை தெளிவு பெறும், காது கேளாமை நீங்கும். ஆண்மைத் தன்மை அதிகரிக்கும். தேன் கலந்து நாக்கில் தடவினால் விக்கல், வாந்தி நிற்கும்.

தாமரைப் பூவைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் நரை, திரை, மூப்பு ஆகிய மூன்றும் ஏற்படாது. நீண்ட நாட்கள் ஆரோக்கியமாக வாழ தாமரைப் பூ மருந்தாகப் பயன்படுகிறது. வெள்ளைத் தாமரைப் பூவைச் சுத்தம் செய்து குடிநீர் தயாரித்துப் பருகினால் இரத்த மூலம் சீதபேதி, இருமல் குணமாகும். வயதாகும்போது மூளையின் திசுக்கள் சிதைவடைய ஆரம்பிக்கும். அதனால் வயதாகும் போது மூளையின் செயல்பாடுகள் மந்தமாகும். அதனால் தான் சிறுவயதில் இருந்தது போல் வயதாகும் போது சுறுசுறுப்பாக இருப்பதில்லை. தாமரைப்பூ மூளை திசுக்களைப் பாதுகாத்து மூளையை விழிப்புணர்வுடன் இருக்கச் செய்கிறது. வெண்தாமரை மற்றும் செந்தாமரை இரண்டும் மூளைக்கு நன்மையுண்டாக்கும்.

**நொச்சி:** நொச்சி மரத்திலிருந்து கிடைக்கும் பூ, இலை மருத்துவக் குணமுடையவை. நொச்சிப் பூவை நிழலில் உலர்த்தி இடித்துப் பொடி செய்து சலித்து எடுத்துப் பன்னீர், பனங்கற்கண்டு சேர்த்து சிறிதளவு அருந்துவதால் இரத்த பேதி குணமாகும். இந்தப் பூவிலிருந்து குடிநீர் தயார் செய்து தினமும் ஆறு முறை குடித்து வந்தால் இரத்த வாந்தி குணமாகும். அதற்குப் பத்தியம்

இருக்க வேண்டும். கஞ்சி ஆகாரம் மட்டும் சாப்பிட வேண்டும். இவ்வாறு பூக்கள் மருத்துவக் குணங்களைக் கொண்டுள்ளன.

**பூக்களும் உவமைகளும்**

அறிந்த ஒன்றைக் கொண்டு அறியாத ஒன்றை சுட்டுவது உவமை, இது போன்று அது என்று விளக்குவது உவமை. தொல்காப்பியர் உவமை தோன்றும் நிலைக் கலன்களாக நான்கு வகையைக் கூறுவர்.

**"வினை பயன் மெய் உரு என்ற நான்கே**

**வகை பெறவந்த உவமத் தோற்றம்"[68]**

என்பது நூற்பா. சங்க இலக்கியங்களில் பூக்கள் பல இடங்களில் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. தாமரை போன்ற முகம், குவளை போன்ற கண், முருக்கிதழ் போன்ற வாயிதழ், முல்லை போன்ற பல்வரிசை, எள்ளுப்பூப் போன்ற நாசி, கோங்கரும்பு போன்ற நகில், காந்தள் போன்ற விரல் என்று உடல் உறுப்புகளை வருணித்துள்ளனர். கோங்கு வரிசையாக மலர்ந்துள்ளது கார்த்திகை விளக்குப் போல உள்ளதென்பதை,

**"அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்**

**செஞ்சுடர் நெடுங்கொடி போலப்**

**பல்பூங் கோங்கம் அணிந்த காடே"** **(நற்-202)**

எனவரும் நற்றிணைப் பாடல் விளக்குகிறது. விடியற் காலத்தே ஒளிவீசும் விண்மீனைப் போன்று தோன்றும் என்பர். கோங்கம் பூவைத் தலைகீழாகப் பார்க்கையில் கோயில்குடை போலத் தோன்றியதை,

**"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ**

**வைகுறு மீனின் நினையத் தோன்றி"** **(நற்-48)**

என்ற நற்றிணை அடிகளால் அறிய முடிகிறது. மக்கள் அணியும் அணிகலன்களும் பூக்கள் கொண்டு உவமையால் விளக்கப்பட்டுள்ளன. காட்டில் கொன்றை மலர்கள் கொத்துக்களாக அலர்ந்துள்ளமையைபொன்னாற் செய்து அணிந்து கொள்ளுதற்குரிய, தழையணிகளைக் கோத்துக் கட்டிய மகளிருடைய கூந்தலைப் போலக் தோற்றமளிப்பதனை,

**“வண்டுபடத் ததைந்த கொடியினை ரிடையிடுபு**

**போன்செய் புனையிழை சுட்டிய மகளிர்**

**கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்**

**கானங் காரெனக் கூறினும்”** **(குறுந்-21)**

என்ற குறுந்தொகைப் பாடல் சுட்டுகிறது. கொன்றையின் இழையணிந்த மகளிர் போல உவமித்துக் கூறப்படுவதை,

**“இழையணி மகளிரின் விழைதகப் பூத்த**

**நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றைக்**

**காடுகவின் பூத்த ஆயினும்”** **(நற்-302)**

என்ற பாடல் உணர்த்துகிறது. சிறுவர்கள் சீறடியின்கண் அணியும் தவளை வாயைப் போன்ற பொன்னாற் செய்யப்பட்ட கிண்கிணிக் காசைப் போன்ற பேரரும்பை வெளிப்படுத்துகிறது கொன்றை என்பதை,

**“செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த**

**துவளை வாய பொலஞ்செய் கிண்கிணிக்**

**காசி னன்ன போதீன் கொன்றை”** **(குறுந்-148)**

என்ற பாடலடிகள் சித்திரிக்கிறது. கொன்றைப் பூவும், பொற்காசும் உவமைப்படுத்தப்படுவதைக் கம்பராமயணத்தில்,

**“நன்னெடுங் காந்தட் போதி னறைவிரி கடுக்கை மென்பூத்**

**துன்னிய கோபத் தோடும் தோன்றி தோற்றந் தும்பி**

**இன்னிசை முரல்வ நோக்கி இருநில மகள்கை ஏந்திப்**

**பொன்னொடுங் காசை வீட்டில் கொடுப்பதே போன்றதன்றே”**[69]

எனச் சுட்டியுள்ளார் கம்பர். நன்கு பூத்த கோங்கமலர், மகளிர் அணிந்து கொள்ளக்கூடிய சுரிதகம் எனும் அணிகலனைப் போல் தோற்றமளிப்பதை,

**"கைவல் வினைவன் தையுபு சொரிந்த**

**சுரிதக வுருவின வாகிப் பெரிய**

**கோங்கம் குவிமுகை யவழி"** **(நற்-86)**

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. "சங்க காலத்தில் கூறப்பட்ட அழகிய பூக்களில் கோங்கமும் ஒன்றாகும். ஆனால், இலையுதிர் காடுகளில்தாம் கோங்கத்தைக் காண முடியும்"[70] என்று பி.எல்.சாமி குறிப்பிடுகிறார். கார்த்திகைப் பெருவிழா விளக்கினைப் போலவே இலவம் பூக்களும் தோன்றுவதை,

**"பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**

**இலையில மலர்ந்த இலவமொடு**

**நிலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே"** **(அகநா.185)**

எனவரும் அடிகளால் உணரலாம். தோன்றி மலர்கள் மலர்ந்து காணப்படுவது. கார்த்திகைத் திருவிழா விளக்கினை நினைவூட்டுகிறது. இதனை,

**"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட**

**தலைநாள் விளக்கின் தகையுடைய வாகிப்**

**புலமெலாம் பூத்தன தோன்றி: சிலமொழி!**

**தூதொடு வந்த மழை"**[71]

என்றபாடலால் அறியலாம். முருக்கிதழ், மகளிரின் சிவப்புச் சாயம் பூசிய நகத்திற்கு உவமையாகக் கூறப்படுகிறது. இதனை,

**"குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று**

**நகைமுக மகளி ரூட்டுகிர் கடுக்கும்"** **(அகநா.317)**

என்ற பாடல்வழி அறியலாம். முற்காலத்தில் மகளிர் தம் நகங்களுக்குச் சிவப்புச் சாயந் தீட்டும் வழக்கமுடையவர் என்பதை இதன்வழி அறியலாம். மலைப் பக்கத்தில் மலர்ந்த கூதாளத்தின் உள்துளையுடைய அழகிய புதுமலர்கள் காம்பினின்று கழன்று உதிர்வது, மகளிரின் கைவளைகள் சோர்த்து வீழ்வது போலக் காட்சியளிப்பதை,

**"காரெதிர் தண்புனங் காணிற் கைவளை**

**நீர்நிகழ் சிலம்பி னோராங் கவிழ்ந்த**

**வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்**

**ஆர்கழல் புரவ போலச்**

**சோர்குவ வல்ல என்பர்கொல் நமரே"** **(குறுந்-282)**

என்பதன் வழி அறியலாம். வேனிற் காலத்தில் பாதிரிப் பூக்கள் மலர்ந்து காணப்படுவது ஓவியனின் துகிலிகை போன்றுள்ளது என்பதை,

**"சேவலொடு கெழீஇய செங்க ணிருங்குயில்**

**புகன்றெதி ராலும் பூமலி காலையும்**

**…………**

**ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய**

**துகிலிகை யன்ன துய்ந்தரைப் பாதிரி"** **(நற்-118)**

என்னும் பாடல் சுட்டுகிறது. ஓவியத்தில் மிக நுண்ணிய திறனைக் காட்டுதற்கேற்பத் துகிலிகையின் நுனிப்பகுதி மிக மென்மையாக இருத்தல் வேண்டும். அத்தகைய மென்மையுடன் பாதிரி மலர் விளங்குகிறது. இவ்வாறு இயற்கை மலரும், செயற்கைத் துகிலிகையும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. வீட்டில் வாழ்ந்த குருவியின் குவிந்த சிறகுகள், வாடிய ஆம்பல் பூப் போல் தோன்றின என்பதை,

**"ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன**

**கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ"**[72]

என்கிறது குறுந்தொகை. காந்தள் பூவிலுள்ள நறுமணப் பொடியை ஊதும் தும்பி, பாம்பு உமிழும் மணி போல் தோன்றியது.

**"காந்தள்**

**நறுந்தாது ஊதும் குறிஞ்சிறைத் தும்பி**

**பாம்பு உமிழ் மணியின் தோன்றும்"**[73]

இதில் காந்தள் பூ படம் எடுக்கும் பாம்பு போல் உள்ளது என்றும், அதில் தேனை நாடி வரும் தும்பி, மணி போல் உள்ளது என்றும் கூறப்பட்டுள்ளது. குவிந்த கொத்துக்களையுடைய தோன்றியின் ஒளி பொருந்திய மலர் போல், சேவலின் செந்நிறக் கொண்டை இருந்ததை,

**"குவிஇணர்த் தோன்றி ஒண்பூ அன்ன**

**தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்"**[74]

என்ற பாடலடிகள் விளக்கும். தலைமகளின் அழகு படைத்த கண்கள், மலர் போன்று விளங்கியது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது,

**"மாண் எழில் மலர்க்கண்"** **(நற்-398)**

என்பதில் நீண்ட மலையில் தழைத்தள்ள கரிய கொம்புகளையுடைய குறிஞ்சியின் அன்றலர்ந்த மலர் போன்றது தலைவியின் மேனி. பெரிய சுனையில் மலர்ந்த நீல மலரை இணைத்தாற் போன்றவை தலைவின் கரிய இதழ்கள் இமைக்கும் குளிர்ந்த கண்கள் என்பதை,

**"நீண்மலைக் கலித்த கருங்கோற் குறிஞ்சி**

**நாண்மலர் புரையும் மேனிப் பெருஞ்சுனை**

**மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்"** **(நற்-301)**

எனும் பாடல் விளக்குகின்றது. அவரையின் பூக்களுக்குக் கிளியின் வாயும், முல்லை அரும்புகளுக்குக் காட்டுப் பூனையின் பற்களும் உவமையாக அமைந்துள்ளதை,

**"அவரைக் கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்**

**வெருக்குப்பல் உருவின் முல்லையொடு"** **(குறுந்-240)**

எனும் பாடலில் காணலாம். அவரையின் மலர்கள் கிளியின் வாய் போன்றும், முல்லை அரும்புகள் காட்டுப் பூனையின் பற்கள் போன்றுமுள்ளன. பகன்றையின் முறுக்கு அவிழும் வெண்ணிறப்பூ, புலைத்தி கஞ்சி தோய்த்து எடுத்துத் தப்பிக் குளத்தில் இட்ட ஆடையின் பிரியாத பருத்த முறுககுப் போல் காணப்பட்டதை,

**"நலந்தகைன் புலைத்தி பசைதோய்த்து எடுத்துத்**

**தலைப்புடைப் போக்கித் தண்கயத்து இட்ட**

**நீரின் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும்**

**பேரிலைப் பகன்றைப் பொதிஅவிழ் வான்பூ" (குறுந்-330)**

என்னும் பாடல் விளக்குகிறது. தாமரைப் பூவை, விளக்கின் சுடருக்கும் உவமையாகக் கூறியுள்ளனர். இதனை,

**"எரியகைந் தன்ன தாமரைப் பழனம்" (அகநா.108)**

**"விளக்கின் அன்ன சுடர்விடு தாமரை" (நற்-310)**

என்பதிலிருந்து அறியலாம். வேங்கை மலர் எரிபோன்று விளங்குவதைக் கீழ்க்கண்ட பாடல் கூறுகின்றது.

**"கருங்கால் வேங்கை**

**எரி மருள் கவனம்" (அகநா.349)**

மகளிர் தங்கள் கூந்தலைப் பலவாறு அழகு செய்கின்றனர். ஓதி என்று கூறும் ஒருவிதத் தலைக்கட்டு, இது வாழைப் பூவின் வடிவில் அமைந்திருக்கும் என்பதை,

**"வாழைஈன்ற வையேந்து கொழுமுகை**

**மெல்லியல் மகளிர் ஓதியன்ன" (நற்-225)**

என்று நற்றிணை கூறுகிறது. உள்ளத்தின் தெளிவை, கருத்தைக் காட்டுவன கண்கள். கண்களை "மழைக்கண்"[75] என்று அழைக்கப்படுவதாகச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. மகளிரின் கண்களுக்கு உவமையாக நீலம், நெய்தல், குவளை, கருவிளை, தாமரை, பித்திகம் ஆகிய பூக்கள் கூறப்பட்டுள்ளமையைக் கீழ்க்கண்ட பாடல்களில் காணலாம்.

**"நீலத்து இணை மலர் புரையும் உண்கண்" (நற்-111)**

**"நல் நறு நெய்தலிற் பொலிந்த உண்கண்" (புறநா.144)**

**"குவளை மாயிதழ் மாமலர் புரைஇய கண்" (நற்-317)**

**“தண் புனக் கருவிளைக் கண் போல் மாமலர்”** **(நற்-362)**

**“கண்ணே,**

**புகழ் சால் தாமரை அலர் இணைப் பிணையல்”** **(பரி-53)**

**“போது வாய் அவிழ்ந்த**

**ஓண் செங்கழுநீர் அன்னநின்**

**கண்”** **(அகநா.269)**

தலைவி தலைவனுடன் கூடியிருக்கின்ற காலத்து இருக்கும் நிறம் பிரிவால் மாறும். இப்பசலை ஊழ்ந்த பீரமலர் போன்றும், கொன்றை மலர் போன்றும் இருக்கிறது என்பதை,

**“நுண் கொடிப் பீரத்தின் ஊழுறு பூவெனப்**

**பசலை ஊரும்”** **(நற்-316)**

**“கொன்றை**

**ஊழுறு மலரின் பாழ்பட முற்றிய பசலைமேனி”** **(அகநா.398)**

என்கிறது மேற்காணும் பாடல்கள். குறிஞ்சி மலரின் நிறம் போன்று தலைவியின் மேனி நிறம் அமைந்திருப்பதை,

**“நீண் மலைக் கலித்த செங்கோற் குறிஞ்சி**

**நாண் மரா் புரையும் மேனி”** **(நற்-301)**

என்கின்றது நற்றிணை. வேங்கை, ஞாழல் போன்ற மரங்களின் அன்றலா்ந்த புதிய பூக்கள் சுணங்கிற்கு உவமையாக அமைகின்றன. இச்செய்தி,

**“பொன் வீ வேங்கைப் புது மலா் புரைய**

**சுணங்கு”** **(அகநா.319)**

**“சிறுவீ ஞாழல் தேன்தோய் ஒள்ளிணா்**

**நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த**

**வண்டற் பாவை வனமுலை முற்றத்து**

**ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅம்”** **(நற்-191)**

என வரும் அடிகளில் கூறப்பட்டுள்ளன. புதரில் நிறைய முல்லைப் பூக்கள் மலா்ந்திருந்தன. அக்காட்சி யானையின் முகத்தில் தோன்றும் புள்ளிகளைப் போன்று தோன்றியதை,

**"நறு வீ முல்லைத் தேங்கமழ் பசுவீ**

**பொறிவரி நன்மான் புகா்முகங் கடுப்ப**

**தண் புதல் அணி பெற மலர"** **(நற்-248)**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. போர் செய்த யானையின் முகத்தில் உள்ள புள்ளிகள் சிவப்பாக இருப்பதைக் குறிப்பிடுகிறது. பாறைமீது செங்காந்தள் மலா்ந்து கிடந்த தோற்றத்தை,

**"பொருந யானைப் புகா்முகங் கடுப்ப**

**மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்**

**ஒண்செங் காந்தள் அவிழும் நாடன்"** **(குறுந்-284)**

எனும் குறுந்தொகைப் பாடல் எடுத்துரைக்கின்றது. தாழைப் பூத்திருக்கின்ற காட்சி யானையின் கொம்பைப் போன்று காணப்படுகிறது. யானையின் நிறம், வடிவம் தாழைப் பூவோடு பொருந்தி நிற்கிறது. காட்டில் மிருகங்களைக் கொன்று திரியும் யானையின் கொம்பாகக் காந்தளின் சிவந்த மொட்டு அரும்பியிருப்பது,

**"கோடு வாா்ந்தன்ன வெண் பூத் தாழை"** **(நற்-203)**

**"கொன்ற யானைக் கோடு கண்டன்ன**

**கொம்புடைக் கொழுமுகை அவிழ்ந்த காந்தள்"** **(நற்-294)**

என்ற பாடல்கள்வழிக் கூறப்படுகிறது. மருதநிலத்து நண்டின் கண்கள் வேம்பின் அரும்பாகவும், நெய்தல் நில நண்டின் கண்கள், நொ்ச்சியரும்பாகவும் காட்சியளிப்பது,

**"பூத்த தாமரைப் புள்ளிதழ் பழனத்து**

**வேப்பு நனையன்ன நெடுங்கண் நீா்கண்டு"** **(அகநா.176)**

**"நொச்சி மா அரும்பன்ன கண்ண**

**எக்கா் ஞண்டு"** **(நற்-267)**

எனக் கூறப்பட்டுள்ளது. கூம்பியிருக்கும் கொக்கின் புறத்தோற்றம், ஆம்பலின் புறத் தோற்றத்தை ஒத்திருப்பது,

**“கயக்கணக் கொக்கின் கூம்பு முகையன்ன**

**கணைக்கால் ஆம்பல் அம்ழ்தூறு போது”**[76]

எனக் கூறப்படுகிறது. குராவின் அரும்பு பாம்பின் கூரிய பல்லிற்கு உவமித்துக் கூறப்படுகிறது. கூரியவாள் போன்ற பாம்பின் பல்லிற்குக் குராவின் அடும்பு ஒத்திருக்கிறது. இதன் மொட்டுக்களும், பூக்களும் சிறியதாகவே இருக்கும். மலர் வெண்மை நிறத்துடன் குவிந்து இணராகப் பூக்கும். தன்மையினையும், மணம் மிகுந்து விளங்கும் பண்பினையும்,

**“குறுங் காற் குரவின் குவி இணர்வான்பூ” (நற்-266)**

**குறுநிலைக் குரவின் சிறு நனை நறுவீ” (நற்-56)**

என நற்றிணை நவில்கிறது. குன்றில் மேகம் போலக் காயா மலர்கள் மலர்ந்திருந்தன. இடையிடையே சரக்கொன்றைகள் மலர்ந்தது போல மலையின் பிளவில் மின்னல் மின்னியதை,

**“காயாங் குன்றத்துக் கொன்றை போல**

**மாமலை விடரகம் விளங்க மின்னி” (நற்-371)**

என்று நற்றிணை எடுத்துக்கூறுகிறது. சங்க இலக்கியங்களில் குறிப்பாக நற்றிணையில் பூக்கள் பற்றிய உவமைகள் இவ்வாறு அணி செய்வதை அறியமுடிகிறது.

**பூக்கள் நிறத்தின் அடிப்படையில் அட்டவணை**

| **வெண்மை** | **கருமை** | **செம்மை** | **பொன்னிறம்** |
|---|---|---|---|
| அதிரல் | கருவிளை | ஆம்பல் | ஆவிரை |
| ஆம்பல் | காயா | ஈங்கை | உழிஞை |
| இருப்பை | குவளை | கடம்பு | குழிழம் |
| ஈங்கை | குருந்து | காந்தள் | கோங்கம் |
| கரும்பு | குரா | தளவம் | கொன்றை |
| குரவம் | முண்டகம் | தாமரை | ஞாழல் |

| குருக்கத்தி | வாழை | தோன்றி | பீர்க்கு |
|---|---|---|---|
| கூதளம் | நீலம் | செம்முருக்கு | வேங்கை |
| கோடல் | எருக்கு | குறிஞ்சி | - |
| தாமரை | நொச்சி | - | - |
| தாழை | - | - | - |
| பகன்றை | - | - | - |
| பாலை | - | - | - |
| புன்னை | - | - | - |
| பூளை | - | - | - |
| மராஅம் | - | - | - |
| முல்லை | - | - | - |
| மௌவல் | - | - | - |

வாழை, நீலம், எருக்கு, நொச்சி ஆகிய பூக்கள் கருநீல நிறத்தில் அமைந்தவை. எனவே இப்பூக்கள் கருமை நிறப் பிரிவுக்குள் அமைக்கப்பட்டுள்ளன.

தொகுப்புரை

- இயல்பு என்பது வெளிப்படுத்தும் பண்பு, தன்மை எனப்படுகிறது.
- குளரி என்ற நீர்ச்சேம்பு மலர் தன்மையினால் இப்பெயர் பெற்றது. இதனை இலக்கியத்தில் தண், தளிர், நளி எனக் குறிப்பிடுவர்
- ஐந்திணைகளின் பெயர்களும், புறத்திணைகளின் துறைகளும் பூக்கள் பெயரிலேயே இடம் பெற்றுள்ளன. மன்னர்களின் சின்னமாக சோழர்-ஆத்திப்பூ, பாண்டியர்-வேப்பம்பூ, சேரர்-பனம்பூ என்று குறிப்பிட்டுள்ளனர்.
- பூக்கள் உற்பத்திக்கான அடிப்படையில் மகரந்தச் சேர்க்கைக்காக மலர்கின்றன. சில பூக்கள் பகலிலும், சில இரவிலும் பூக்கின்றன. பகலை விட இரவில் முல்லை, மல்லிகை நறுமணத்துடன் மலர்கின்றன. பகலில் சூரிய வெளிச்சத்தின் கவர்ச்சிக்கேற்பத் தாமரை, சூரியகாந்தி, செம்பருத்தி போன்ற பூக்கள் மலர்கின்றன.
- மனிதனின் பிறப்பிலிருந்து இறப்பு வரை பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு வகைகளில் பூக்கள் பயன்படுகின்றன.
- பூவின் தன்மைகள் மணம், மென்மை, தூய்மை, வண்ணம், சுவை, ஒளி, எழில், கவர்ச்சி, மங்கலம் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- மலர்கள் சிறப்பாக மணமலர், மென்மலர், சுவைமலர், ஒளிமலர், எழில்மலர், மங்கலமலர் எனவும் சுட்டப்படுகின்றன.
- மலராகும் பொழுது காம்பு, புறவிதழ், அகவிதழ், பொருட்டு, தாது, தேன் போன்றவற்றைப் பெறுகின்றன.
- இவற்றில் பொருட்டு என்பது இனப்பெருக்கத்திற்கான மலரின் நடுவே உள்ள உறுப்பாகும். இது ‘கன்னிகை’ என்று பொருள்படும்.
- தேன் என்பது நறை, நறா, கள், தேறல், மட்டு என்னும் வேறுபெயர்களில் அழைக்கப்படுகிறது.

- மணமில்லா மலரை'நாற்றம் இல்லாத மலரின் அழகு இன்னா' என இன்னாநாற்பது குறிப்பிடுகிறது.

- மலர், முகை, அடும்பு, இதழ், பொருட்டு அனைத்தும் மென்மையால் சுட்டப்பெற்றவை.

- வண்ணம் என்பது வெண்மை, செம்மை, கருமை, நீலம், மஞ்சள், இளமஞ்சள், கருநீலம் என இலக்கியத்தில் கூறப்படுகிறது. கருங்குரல் நொச்சி என்று புறம் (272) கூறுகிறது.

- தூய்மை என்பது வண்டு மொய்க்கும் முன்பு காணப்படும் நிலையினைக் குறிக்கும். ஒளித்தன்மை என்பது வண்ணங்ளுடன் பொலிவு பொற்று விளங்குவதாகும். புதல் விளக்குப் போன்று தோன்றி மலரைக் குறிப்பிட்டுள்ளனர்.

- ஈர்ப்புத் தன்மை என்பது பார்பவரின் உள்ளத்தை ஈர்ப்பதாகும்.

- மலர் கொய்தல் குற்றல், குறுதல் என்று வழங்கப்படும்.

- இளமகள் ஒருத்தி பூக்குடலையோடு குருக்கத்தி, பித்திகம் போன்ற பூக்களைத் தெருவில் விற்றதாக நற்றிணை கூறுகிறது.

- மலர் அணி என்பதைக் காதில் குழையாகவும், கையில் வளையாகவும் அணிந்தனர். குவளை மலரைக் காதில் குழையாக அணிந்த செய்தியைப் பரிபாடல் கூறுகிறது.

- பெண்கள் ஞாழல், பாதிரி, அதிரல், மரா, வேங்கை, நெய்தல், தாழை, குவளை, ஆம்பல், காஞ்சி போன்ற மலர்களைத் தலையில் அணிந்துள்ளனர்.

- ஆண்கள் ஆம்பல், குவளை, தாமரை, கொன்றை, காயா, வெட்சி, பிடவு, குல்லை, தளவு, குருந்து, கோடல், காந்தள், ஞாழல், முல்லை, கூதளம், குரவம், வேம்பூ, எருக்கு, வேங்கை, நெய்தல், மரா போன்ற பூக்களைக் கண்ணியாகவும், தாராகவும் அணிந்துள்ளனர்.

- மாலையின் வகைகள் கண்ணி, கோதை, தாமம், தார், தெரியல், தொடலை, தொடை, பிணையல், பிடையல், மாலை என்பனவாகும்.

- ஆண்கள் அணியும் தலை மாலைக்குத் தெரியல் எனறும் மார்பில் அணிவது ‘தார்’ என்றும் அமைக்கப்படும். பெண்கள் கண்ணி சூடியும், ஆண்கள் கோதை புணைந்தும் உள்ளனர்.

- வண்ண நறுமலரைக் காட்சிக்கினியவையாகக் கோத்து அமைப்பதால் தார், மாலை எனவும், தண்டில் கட்டுவதால் கண்ணி எனவும், பிணைத்துப் பின்னிக் கட்டுவதால் பிணையல் எனவும், தொகுத்துக் கட்டுவதால் தொடையல் எனவும் பெயரிட்டுள்ளனர். இவற்றிற்குச் சிறப்பாகப் பூமாலை எனவும் கூறப்படுகிறது. பல வண்ணப் பூக்கள் கலந்து கட்டுவதால் அவை கதம்பம் எனவும் பெயர் பெற்றது.

- வழிபாட்டில் பூக்களைக் கொண்டு வழிபாடு செய்வதால் பூசெய் என்றும், அது காலப் போக்கில் மருவி பூசை என்றும் வழங்கப்பட்டது. நவக்கிரங்களுக்குப் பூக்கள் மூலம் வழிபாடு செய்தனர். தளிர், இலை, அரும்பு, மலர், போது என்று பல நிலைகளில் மலர்கள் வகைப்படுத்தி வழிபட்டதைப் புட்ப விதி கூறுகிறது.

- காலை, உச்சி, மாலை, இரவு என ஒரு நாளில் பல காலங்களில் சாத்தும் மலர்களும் இடம் பெற்றுள்ளன.

- வேலவன் வெறியாட்டு நிகழ்வில் நீலமலர், வேப்பிலை சூடினர் என்றும், முருகனுக்குரியவையாகக் கடம்பம், காந்தள், குவளை, நெய்தல், வெண்காந்தள், வேங்கை, புன்னை, குறிஞ்சி, குரவம், நீலம், ஆசினி போன்ற பூக்களும் சுட்டப்பட்டுள்ளன.

- பெண்கள் திருமணத்திற்கு முன்னர் பூச் சூடுவதில்லை என்பது சங்க காலத்திலிருந்தது தெரிகிறது. ஆண்கள் கூந்தல் வளர்த்து அள்ளிமுடித்து பூச் சூடியதையும், பெண்கள் தாலியில் பூச் சூடியதையும் இலக்கியத்தின் வழி அறிய முடிகிறது.

- பூக்கள் மருத்துவப் பயன்கள் கொண்டவை. ஆயுர் வேதத்திலும், சித்த மருத்துவத்திலும் உடலுக்கு வலிமையூட்டி உயிரைப் பாதுகாக்கின்றன.

இவற்றுள் ஆம்பல், ஆவிரை, கருவிளை, வாழை, பூளை, பாதிரி, மா, முல்லை போன்ற பூக்கள் குறிப்பிடத்தக்கவை.

- ❖ தாமரை போன்ற முகம், குவளை போன்ற கண், முருக்கிதழ் போன்ற வாய், முல்லை போன்ற பல், எள்ளுப்பூ போன்ற நாசி, காந்தள் போன்ற விரல் என உடல் உறுப்பைப் பற்றிய உவமைகள் மலர்கள் வழிக் கூறப்பட்டுள்ளன.
- ❖ பூக்கள் வண்ண அடிப்படையில் அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப-142.
2. லிப்கோ தமிழ் அகராதி, ப-670.
3. செ.வைத்தியலிங்கன், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, ப-43.
4. திருக்குறள்,1115.
5. அகநானூறு, பா-257.
6. பரிபாடல், பா- 8.
7. புறநானூறு, பா-321.
8. கலித்தொகை, பா-33.
9. மேலது, பா-121.
10. அகநானூறு, பா-154.
11. திருக்குறள்,650.
12. நான்மணிக்கடிகை, பா-48.
13. இன்னா நாற்பது, பா-37.
14. மாணிக்கவாசகர், திருவாசகம், அதி,பா-9.
15. மாணிக்கவாசகர், மேலது, திருவண், பா-115.
16. திருமந்திரம், 2639.
17. சீவகசிந்தாமணி, 1848.
18. அகநானூறு, பா-283.
19. மதுரைக்காஞ்சி, பா-296.
20. நாலடியார், பா-180.
21. திருக்குறள்,1120.

22. புறநானூறு, பா-272.

23. சிறுபாணாற்றுப்படை,பா-165.

24. முல்லைப்பாட்டு, பா-92.

25. அகநானூறு, பா-261.

26. பெரியபுராணம், பா-948.

27. ஐங்குறுநூறு, பா-368.

28. மேலது, பா-320.

29. அகநானூறு, பா-185.

30. நன்னெறி, பா-30.

31. லிப்கோ தமிழ் அகராதி, ப-670.

32. மதுரைக்காஞ்சி, பா-296.

33. மலைப்படுகடாம், பா-305.

34. இல. தாணம்மாள், மேலது, ப-90.

35. நாகராசன், பூக்கள் சிந்தும் புதுமைகள், ப-95.

36. புறநானூறு, பா-63.

37. பரிபாடல், பா-11.

38. இல. தாணம்மாள், மேலது, ப-85.

39. பதிற்றுப்பத்து, பா-42.

40. மேலது, பா-76.

41. திருமுருகாற்றுப்படை, பா-29.

42. பரிபாடல், பா-23.

43. மேலது, பா-12.

44. நாகராசன்,மேலது, ப-27.

45. சி. பாலசுப்பிரமணியன், மலர் காட்டும் வாழ்க்கை, ப-5.

46. செ. வைத்தியலிங்கன்,மேலது, (முதல் பாகம்) ப-275.

47. ஸ்ரீலஸ்ரீ குரு ஞானசம்பந்தர் புட்ப விதி புட்ப பலன் முன்னுரை, ப-9.

48. புறநானூறு, பா-23.

49. முத்துப்பிள்ளைத்தமிழ், பா-6.

50. திருமுருகாற்றுப்படை, பா-22.

51. மேலது, பா-44.

52. மதுரைக்காஞ்சி, பா-613.

53. பெரும்பாணாற்றுப்படை, பா-75.

54. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப-130.

55. ந. முருகேசபாண்டியன், தமிழர் வாழ்க்கையில் பூக்கள், ப-3.

56. சிலப்பதிகாரம், மங்கல வாழ்த்து, பா-1:61-62.

57. சி. பாலசுப்பிரமணியன்,மேலது, ப-8.

58. ஐங்குறுநூறு, பா-296.

59. ந. முருகேசபாண்டியன்,மேலது, ப-4.

60. மேலது, ப-4.

61. இளம்பூரணர் (உ.ஆ), தொல், பொரு, புறத்,நூட்பா-3.

62. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப-93.

63. பேராசிரியர், தொல், பொரு, நூட்பா-626.

64. இல. தாணம்மாள், மேலது, ப-112.

65. மரு.கு. பூங்காவனம், வீட்டுக்கு வீடு மலர் மருத்துவம், ப-23.

66. இரா. பூபதி, மலர்களும் மருத்துவப் பயன்களும், ப-13.

67. ஸ்ரீராம், நோய் தீர்க்கும் மலர்கள், ப-33.

68. இளம்பூரணர் (உ.ஆ), தொல், பொரு, நூட்பா- 1218.

69. கம்பராமயணம், கிட்கிந்தா, கார்படலம், பா31.

70. பி.எல்.சாமி, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர், ப-189.

71. கார்நாற்பது, பா-26.

72. குறுந்தொகை, பா-46.

73. மேலது, பா-239.

74. மேலது, பா-107.

75. இல. தாணம்மாள், மேலது, ப-131.

76. குறுந்தொகை, பா-122.

# இயல் - 4

# அகவாழ்வில் பூக்கள்

## முன்னுரை

தமிழர்களின் வாழ்க்கை அகம், புறம் என்னும் இரு வகையுள் அடங்கும். இலக்கியங்களில் அகவொழுகலாற்றில் பூக்களின் தேவையும், சிறப்பும் போற்றுதற்குரியவையாகக் காணப்படுகிறன. அகவாழ்க்கையைப் பூக்கள் கொண்டும் சிறப்பாக அமைத்துள்ளனர். இளம்பெண் பருவமடைவதனைப் ‘பூப்படைதல்’ என்ற சொல்லால் குறிப்பிடுவது வழக்காகும். காதலரிருவர் கருத்தொருமித்து மனம் இணைந்துசேர்வதைத் திருமணம் என்று சுட்டுவர். திருமண நாளில் மணமக்களுக்கு மலர் மாலைகள் அணிவிப்பதும், கையில் பூச்செண்டுகள் தருவதும் இன்றும் மரபாகவே இருந்து வருகிறது. முதல் மகப்பேற்றிக்குக் கருவுற்ற பெண்ணுக்கு நடைபெறும் வளைகாப்பு நிகழ்ச்சியில் பூச்சூட்டலாகிய சடங்கைப்‘பூமுடித்தல்’ என்று கூறுவது மரபாகும். இயற்கையின் அடிப்படையில் தலைவன் தலைவியின் களவு, கற்பு வாழ்வினைப் பற்றிச் சங்கப் புலவர்கள் தாம் கூறக் கருதியதை மாந்தர்களின் கூற்றுக்களின் வாயிலாகவும் கூறியுள்ளார். பூக்களோடு தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையை ஒப்பிட்டுப் பார்த்து அவர் தம் அன்பு வாழ்வினைப் புலவர்கள் உணத்துவதை இவ்வியல் ஆராய்கின்றது.

## அகம்

ஒத்த தலைவனும் தலைவியும் கொண்டு ஒழுகும் ஒழுக்கம் களவு, கற்பு என்னும் இரு நிலைகளில் அமைந்து அகம் எனப்படுகிறது. அகமெனப்படுவது ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவர்களால் இத்தகையதெனக் கூறற்கியலாததாய், யாண்டும் உள்ளத்தளவே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாகலின் அதனை அகம் என்றார் தொல்காப்பியர். அகம் என்ற சொல்லின் பொருள் உள்ளிருப்பது. தலைவனும் தலைவியயும் தம் உள்ளத்துள் உணர்ந்து அனுபவிக்கும் இன்பம் இத்தன்மையுடையது எனப் பிறர்க்கு விளக்கவியலாததாக இருப்பதும், காதல் ஒழுக்கத்தை அகம் என்றது பொருத்தமானதாகும். அகம் என்பதற்கு அகராதி

“இருப்பிடம், பூமி, மனை, வீடு, உள்மணம், உள்ளம், அகப்பொருள்”[1] எனக் கூறுகிறது.

அகவாழ்வில், களவில் காதலரின் களவு வாழ்க்கைக்கும் கூட்டுறவின்பத்திற்கும் காரணமான மன்மதன் ‘மலர்க்கணையோன்’ என்றும் அவன் விடும் தாமரை, மா, அசோகம், முல்லை, கருங்குவளை ஆகிய ஐவகை மலரம்புகளால் தான் காமம் முகிழ்க்கும் என்று கூறுவர். அவ்வகையில் பூக்கள் இளவேனிற் காலத்தில் மன்மதனுக்குரிய மலர்களை இன்பப்பருவம் என்று சிறப்பிப்பதைக் காணமுடிகிறது. தமிழர்களின் அழகுணர்வும், பூக்களால் அவர்கள் கண்டு கொண்ட ஒருவித மென்மையும் போற்றுதற்குரியவை. அகவொழுகலாற்றில் காதல் களவு குறித்து வள்ளுவர்,

**“மலரினும் மெல்லியது காமம் சிலரதன்**

**செவ்வி தலைப்படு வார்”**[2]

எனக் குறிப்பிட்டுள்ளார். அகத்திணைக் கூறுகளைத் தொல்காப்பியர் களவு, கற்பு என்று பகுத்துள்ளார். உலகியல் வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் பயின்று வரும் பொருள்களை மூவகையாகப் பிரித்துப் பேசுவது அகத்திணை நெறியாகும். இதனைத் தொல்காப்பியத்தில்,

**“முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நுவலுங் காலை முறைசிறந் தனவே**

**பாடலுள் பயின்றவை நாடுங் காலை”**[3]

எனக் குறிப்பிடப்படுகின்றது. முதற்பொருட்கள் நிலம், காலம் என இரு வகைப்படும். இதனை,

**“முதல் எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**

**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே”**[4]

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. முதற் பொருளிலிருந்து தோன்றுவது கருப்பொருள். இவை இடத்திலும், காலத்திலும் தோன்றும். அவை உயர்ந்தோர், தாழ்ந்தோர், பறவை, விலங்கு, ஊர், மரம், தெய்வம், உணவு, விலங்குகள், பறவைகள், பறை, தொழில், பண், பூ, நீர் போன்றவையாகும். தொல்காப்பியத்தில்,

**"தெய்வம், உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப"[5]**

எனக் கூறப்படுகிறது. உரிப்பொருளாவது மக்கட்கு உரிய பொருள் அகவொழுக்கமாகும். உரிப்பொருள் மக்கள் வாழ்க்கையையொட்டி அமையும், அவர்கள் வாழும் வாழ்க்கை நெறியே ஒழுக்கமாகும். இவற்றைக் கொண்டு ஐந்திணைகளுக்கும் தனித்தனியாக ஐந்து வகை ஒழுக்கத்தை வரையறை செய்துள்ளார். அவை,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேறுங் காலைத் திணைக்குரிய பொருளே"[6]**

என்பனவாகும். அகம், புறம் என்னும் இருவகை ஒழுக்கத்தினுள் களவு, கற்பு என அகவொழுக்கத்தைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளது.

**அகவொழுக்கம்**

அகவொழுக்கமாவது ஒத்த அன்புடைய ஒருவனும், ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு, காதல் முதிர்ந்து மணஞ் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தலாகும். அகவாழ்வில் திருமணத்திற்கு முந்தைய நிலை களவு எனவும், திருமணத்திற்குப் பிந்தைய வாழ்வு கற்பு எனவும் சான்றோர்களால் கூறப்படுகிறது.

சங்க அக இலக்கியத்தில் இடம்பெறும் தலைமக்கள் 'பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உறவு, அன்பு, அருள், நிறை, உணர்வு, திரு என்ற பத்து நிலைகளிலும் ஒத்த பண்பினராய் இருத்தல் வேண்டும்' தொல், பொருள் (1215) எனச் சுட்டுகிறது. "தலைவன் பெருமை மிக்க வீரனாகவும் தலைவி அச்சம், மடம், நாணம் என்னும் பெண்மைக்கே உரிய சிறந்த பண்புடையவளாகவும் திகழ வேண்டும்"[7] என்கிறார் செ.ஜெயலெட்சுமி. தலைமக்களின் உறவை உயிரோடு கலந்த அன்புறவாகக் கலித்தொகை (102) சுட்டுகிறது. பிரித்தற்கு

இயலாத காதல் உறவினைக் குறுந்தொகையும் (297,313)யும் மனம் ஒன்றிய அன்பு வாழ்க்கையை நற்றிணையும் (308) விளக்கும். தலைமக்கள் பிரிவில் ஒருவரையொருவா் மறக்காத நிலை நற்றிணையில் (131) ஆவது பாடல் அவா் தம் அன்புறவிற்குச் சான்றாகிறது. பொருளைப் பெரிதாகக் கருதாது வறுமையால் ஓா் ஆடையை இருவரும் உடுத்தும் நிலை ஏற்படுவதும் அன்பு வாழ்க்கையை அவா்கள் விரும்பியதை, "ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும், ஒன்றினா் வாழ்க்கையே வாழ்க்கை" எனக் கலித்தொகை (18) பாடல் புலப்படுத்துகின்றது. தலைமக்களின் உறவு பிறவி தோறும் தொடா்வதாகவும் ஐங்குறுநூறு (167) சுட்டுகிறது. "நல்லோள் கணவன் இவன் என்னப், பல்லோா் கூற"குறுந்தொகை (14) என்ற பாடல் வழி தலைவியால் பெருமை பெறுதலை விரும்பும் தலைவனின் மன உணா்வை அறியமுடிகிறது. "மனையுறை மகளிா்க்கு ஆடவா் உயிா்" குறுந்தொகை (135) எனத் தலைவனை உயிராகக் கருதும் தலைவியின் அன்பு குறிப்பிடப்பெறுகிறது.

மனித இனம் வாழ்வதற்கு நிலம் அடிப்படையானதாகும். நிலத்தின் தட்பவெப்ப நிலைக்கு ஏற்பவே அவா்களின் வாழ்வு அமைகிறது. அந்நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகையாகப் பிரிப்பது தமிழ் இலக்கிய மரபு. குறிஞ்சியும் முல்லையும் திரிந்து வளம் குன்றிய நிலப்பகுதி பாலை என்ற பகுதியாகக் கொள்ளப்படுகிறது. நடுநிலைத் தன்மையுடைய நிலமாகுமென்பது,

> **"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையுற் றிரிந்து**
> **நல்லியல் பிழிந்து நடுங்குதுய குறுத்துப்**
> **பாலை யென்பதோா் படிவங் கொண்ட**
> **காலை"**[8]

எனச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. நிலைபேறில்லாத பாலை நிலமும் பின்னா் நானிலத்தின் ஐந்திணைப் பிரிவாகக் கொள்ளப்பெற்று குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்றானது. அவா்கள் வாழும் நிலத்திற்கு ஏற்பவே அவா்களின் பண்புகளும் வாழ்க்கை முறைகளும் அமைந்திருந்தன. பூக் கொடுத்தல் என்பது தலைவனுக்குரிய செயலாகவும், வாங்குவது தலைவிக்குரிய செயலாகவும் இன்றும் நடைமுறையில் இருக்கக் கூடியவையாகும். தலைவனும்

தலைவியும் சேர்வதற்கான பல்வேறு நிலையில் புணர்ச்சியும் உள்ளது. அதன் முதன்மைப் பொருளாகப் பூ உள்ளது. ஒவ்வொரு செயலுக்குத் தகுந்தவாறு பூக்கள் வேறுபடுகின்றன. அவ்வாறாக பூத்தரு புணர்ச்சி அமைந்துள்ளதை,

> **"சுள்ளி சுனை நீலஞ் சோபா லிகைசெயலை**
> **அள்ளி யளகத்தின் மேலாய்ந்து - தெள்ளி**
> **இதணாற் கடியொடுங்கா வீங்கடா யானை**
> **ஊதணாற் கடிந்தா னுளன்"** **(திணை நூற்-2)**

எனப் பதினெண்கீழ்க்கணக்குப் புலப்படுத்துகிறது.

**களவு**

களவாவது பிணி மூப்புகளின்றி, எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய், உருவும் திருவும் பருவமும் குலனுங் குலமும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமையுடையவராய தலைமகனும், தலைமகளும், பிறர் கொடுப்பவும், அடுப்பவுமின்றி, ஊழ்வகையால் தாமே எதிர்பட்டுக் கூடுவது. தமது மகள் பிறர்க்கு உரியவள் என்று இருமுதுகுரவரால் கொடை எதிர்தற்குரிய தலைவியை, அவர் கொடுப்பக் கொள்ளாது, இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்பட்டுப் புணர்தலின் களவு எனப்படும். இக்களவு அன்போடு புணர்தலின் "காமக் கூட்டம்" என்று வழங்கப்படும். இதனை'மறை ஒழுக்கம்' மறை அரும்மறை என்ற சொற்களால் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதனை,

> **"காமம் புணர்ச்சியும் இடந்தலைப்படும்**
> **பாங்கொடு தழாலுந் தோழியிற் புணர்வுமென்**
> **றாங்க நால் வகையினும் அடைந்த சார்பொடு**
> **மறையென மொழிதல் மறையொ ராறே"[9]**

என்பர் தொல்காப்பியர். களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல் என்று பொருள் கூறுவர் இளம்பூரணர். வேதத்தை 'மறைநூல்' என்று சொல்வது போலவே, அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் ஒழுக்கம். இதனைக் 'களவு' என்று பண்டையோர் குறித்துள்ளனர். 'களவு என்னும் சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉம் அன்று, மற்ற அவை நல்ல ஆமாறும் உண்டு' என்று இறையனார் களவியல் (1) குறிப்பிடுகிறது.

**களவில் பூக்கள்**

களவு வாழ்வில் காதலர்கள் குலவி மகிழும் போது வண்ண நறுமலர்கள் பல்வேறு நிலைகளில் பயன் படுத்தப்பட்டுள்ளன. களவு வாழ்வில் தோழி, தலைவி, தலைவன், செவிலி, பாங்கன் போன்றோர் இடம் பெற்றுள்ளனர். கூற்று, திணை அடிப்படையில் வேங்கை, காயா, கொன்றை, தளவம், ஞாழல், குவளை, முல்லை, நெய்தல், மாம்பூ, காந்தள், காட்டுமல்லி, தாமரை, பிடவம், ஈங்கை, பூளை, உழிங்கை, எருக்கம், ஆவிரை போன்ற பூக்களைப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றுள் மிகுதியாக வேங்கை, குவளை, தாமரை, முல்லை, மாம்பூ, காந்தள் போன்ற குறிஞ்சித் திணைப் பூக்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளன.

**தலைவனின் அஞ்சா நெஞ்சும் அன்பும்**

களவொழுக்கத்தின் போது தலைவியைக் காணத் தலைவன் ஒருபுறமாக வந்து நிற்கிறான். அவன் நிற்பதை அறிந்திருந்தும் அறியாதவள் போல் தலைவியிடம் தோழி கூறும் பாடலில்; தலைவனுக்குத் தலைவி மிகவும் முக்கியமானவள். எனவே, உடனே திருமண ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்திக் கூறுகிறாள். இதனை,

> **"கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்கு சனை**
> **வடுக் கொளப் பிணித்த விடுபுரி முரற்சிக்**
> **கை புனை சிறுநெறி வாங்கி**
> **…….. ….. ………….**
> **துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபட காணாது**
> **பெருங்களிறு பிளிறும் சோலை"[5] (நற்-222)**

என்னும் பாடல் அடிகள் சுட்டுகின்றன. கபிலர் திருமண நிகழ்வோடு சுட்டியுள்ளார். உயரமான சுரபுன்னை வளர்ந்துள்ள மலையில் பெண் யானை படுத்திருக்கிறது.அதனை மேகம் மறைத்ததால் களிறு தன் பெண் யானையைக் காணாமல் பிளிறுகிறது. இத்தகையக் காட்சியைக் கபிலர் வேங்கை மரம் உயரத்தில் உள்ளது. திருமணம் செய்வதால் மேகம் மறைத்தலாகியத் துன்பம் மாறும் என்பதை மனங்கொள்ளத் தக்க வகையில் புனைந்துள்ளதைக் காண முடிகிறது. அவ்வாறெனில் வேங்கை மலர்ந்துள்ள காலத்தில் தலைவியை முறைப்படி திருமணம் செய்து கொள்வதால் மேகம் போன்ற உறவினர்கள்

அவளை மறைத்து வைப்பது போன்ற செயலைத் தவிர்கலாம் என்கிறார். களவொழுக்கத்தில் நாட்டம் கொண்டிருக்கும் தலைவன் கற்பு வாழ்க்கைக்குத் தன்னைத் தயார் செய்ய வேண்டும் என்பதைத் தோழிவாயிலாகச் சுட்டுகிறார்.

**தோழி தலைவனின் பெருமை கூறல்**

தோழி தலைவனிடம் கூறுவதாக அமைந்த கூற்றில் ஆண் மகன் சான்றோனாய் நடந்து கொள்ள வேண்டும் என்ற கருத்து குறிப்பிடப்படுகிறது. அன்னையிடம் பாலுண்ணும் குழந்தையின் கை போல், காந்தட் பூ வாழைப் பூவைத் தொட்டுக் கொண்டு நிற்கும். அப்பூவின் மடலில் அருவி போல் இனிய நீரைப் பெண் குரங்குகள் பருகும். அத்தகைய நாட்டுத் தலைவனே, உன்னிடம் நட்புக் கொண்ட தோழி தரும் இன்பத்தை நீ இன்பமாகக் கொள்வதில்லை. எனினும் உன்னைத் தவிர யாதொரு பற்றுக் கோடும் இல்லாதவள் என் தோழி. என் மீது கருணை காட்டியாவது அவளைக் காலம் தாழ்த்தாமல் மணந்து கொள்வாயாக எனக் கூறுவதை,

> **"புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை**
> **முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தட்**
> **குலைவாய் தோயும் கொழுமடல் வாழை**
> **அம்மடல் பட்ட அருவித் தீந்நீர்"** **(நற்-355)**

எனத் தோழி தன் குறிப்பால் உணர்த்துவதாக அமைந்துள்ளது. தோழியானவள் பல்வேறு நிலையிலும் தலைவிக்கு இன்னல்களைத் தீர்ப்பவளாக இருக்கிறாள் என்பதை அறிய முடிகிறது. தலைவியின் நலத்தில் விருப்பம் கொண்டவளாகத் தலைவிக்கு ஒரு தாயைப் போல அறிவுரை வழங்குபவளாகவும் தோழி அமைகிறாள் என்பது புலப்படுகிறது.

**தலைவியைக் காணும் விருப்பம்**

தலைவன் வினை முடிந்து திரும்பிவிட்டான். அவன் வந்தது கண்ட தோழி மகிழ்ந்து கூறுவதாக,

> **"உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்**
> **பிறபுலத் துணையோடு உறைபுலத் தல்கி**
> **வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை**

**நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன**

**சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலில்**

**தவலையின் நனைந்த புறத்த தயலது**

**கூர லிருக்கை அருளி''** **(நற்-181)**

எனும் இப்பாடல் அமைந்துள்ளது. ஆண் குருவி தன்னை விடுத்துப் பிறிதொரு குருவியிடம் சென்றதை எண்ணிய பெண்குருவி அதை விரட்டி அடித்தது. ஈங்கையின் பூவைப் போன்ற நெறித்து முதிர்ந்த குஞ்சுகள் பலவற்றுடன், ஆண் குருவியைக் கூட்டுக்குள் விடாமல் விரட்டியது. சிறிது நேரத்தில் மழை வந்ததால் ஆண் குருவி மழையில் நனைவதைப் பார்த்து அருள் நோக்கோடு மீண்டும் கூட்டிற்குள் தங்க அனுமதித்தது. அது போலத் தலைவன் வெற்றி வாகைச் சூடித் தலைவியைக் காண வரும் இந்த நிலையில் தலைவனது பழைய போற்றா ஒழுக்கத்தை நினைக்காமல் தலைவி அவனை ஏற்றுக் கொண்டால், அவள் உள்ளத்துக்கும், உடலுக்கும் நன்மை ஏற்படும் என்பதை உணர்த்துகிறது.

**இறைவனை வேண்டுதல்**

களவுக் காலத்தில் தலைவன் பிரிந்தான். தலைவி உள்ளத்தாலும் உடலாலும் துன்புறுகிறாள். முருகனால் அணங்கப்பட்டாள் என்று எண்ணியத் தலைவியின் தாய் வேலனை அழைத்து வெறியாடல் நிகழ்த்தியதை,

**''கடவுள் கல்சுனை அடைஇறந்து அவிழ்ந்த**

**வளை மலரொடு காந்தள்**

**குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப்**

**பெருவரை அடுக்கம் பொறப்பச் சூர்மகள்''** **(நற்-34)**

எனும் பாடல் எடுத்துரைக்கிறது. கடவுள் தன்மை பொருந்திய மலையில் உள்ள சுனையில் மலர்ந்த குவளை மலரைப் பறித்து குருதி போன்ற காந்தள் மலருடன் சேர்த்துக் கட்டி அதனைப் புனைந்து ஆடும் ஊரைச் சார்ந்த தலைவனின் மார்பைத் தழுவியதால் தலைவிக்கு இக்காம நோய் ஏற்பட்டது. முருகக் கடவுளே! இந்நோய் உன்னால் ஏற்பட்டது அன்று என நன்றாக அறிந்தும் கார் காலத்தில் மலர்கின்ற கடம்ப மாலையைச் சூடி பலி பெறவந்தாய். நீ கடவுளா?

முடவையா? என்று கூறுவதாக அமைந்துள்ளது. இக்கூற்று தலைவி இறைவனை வேண்டுதல் பொருட்டு அமைந்ததாகும்.

**பிரிவை விலக்குதல்**

இடைச்சுரத்து மீளலுற்ற நெஞ்சிற்குத் தலைவன் கூறியது,இரவில் வந்து களவின்பம் அனுபவித்துச் செல்லும் தலைவனிடம் ஆபத்து மிகுந்த காட்டுவழியே இரவில் வர வேண்டாம் பகலில் வரவும் என்பதை,

> **"பூங்கண் வேங்கைப் பொன் இணர் மிலைந்து**
> **வாங்கு அமை தோன் சிலை எருத்தத்து இரீஇ**
> **தீம்பழப் பலவின் களை விளை தேறல்**
> **வீளை அம்பின் இளையரொடு மாந்தி"[10]**

என்கிறது அகநானூற்றுப் பாடலடிகள். வேங்கைமலர் பற்றிய புனைவைக் குறிப்பிடப்பட்டுள்ளது. வேங்கை மலர் திருமணத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. வேடனொருவன் வேட்டைக்குச் செல்லும் போது வேங்கையின் பொன்னிறப் பூங்கொத்துக்களைச் சூடிக்கொண்டு சென்றதாக அமைகின்றது. இதன் மூலம் திருமணம் செய்து கொள்வதன் இன்றியமையாமையை உணர்த்துவதுடன் இனியும் திருமணம் செய்யாமல் காலநீட்டிப்புச் செய்தல் இயலாது என்பதையும் உணர்த்த வேண்டி வேங்கை மலர் பற்றிய புனைவைப் பாடியுள்ளமை புலனாகிறது.

"வேங்கை மலரானது மிகுதியாகப் பூத்திருப்பதால் அதில் ஒரு கொத்தை வேட்டைக்குச் செல்லும் வேடன் அணிந்திருக்கிறான்"[11] என்று வேங்கை மலரும் திருமணமும் என்பதில் கூறுகிறது. வேங்கை மலர் மலர்கிற காலமென்பதால் தலைவனே நீ இனி இரவில் வந்து களவொழுக்கம் மேற்கொள்வதை விட்டு விடுவாயாக. தலைவியை முறைப்படி பெண்கேட்டுவந்து திருமணம் செய்து இனிது வாழ்வாயாக என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

பகலில் தினைப்புனக் காவலுக்குத் தலைவி வரும்போது தலைவன் சந்தித்து வந்தான். தற்போது தினைப்புனக் காவல் முடிந்துவிட்டது. இரவில் வந்து சந்திப்பதிலும் தலைவிக்கு விருப்பமில்லை. இந்நிலையில் திருமணம் செய்து கொள்வதே தீர்வாக இருக்கும் என்று தோழி கூறுவதை,

**"கறங்கு வெள் அருவி பிறங்கு மலைக் கவர் அன்**

**தேம் கமழ் இணர வேங்கை சூடி**

**தொண்டகப் பறைச்சீர் பெண்டிறொடு விரைஇ"[12]**

என்னும் அடிகள் சுட்டுகின்றன. ஒலிக்கின்ற வெள்ளருவி விளங்குகின்ற மலைச் சாரலில் தேன் மணக்கும் வேங்கை மலர்க் கொத்துக்களைச் சூடிக் கொண்டு தொண்டகம் என்னும் பறை முழக்கத்துக்கு ஏற்ப, ஆடவர் பெண்டிரொடு சேர்ந்து தெருக்களில் ஆடுகின்ற சிறுகுடி எங்கள் குடி. இங்கே பகலில் வந்தால் ஊரார் அலர் பரப்புவர். எனவே திருமணத்திற்கான செய்தியைக் குறிப்பிடும் பொருட்டு வேங்கை மலரைச் சூடி விரைவில் வந்து தலைவிக்குப் பூவைத்து மணமுடிப்பாயாக என்ற பொருளில் சுட்டியுள்ளார். தொண்டகப் பறை அடித்து ஆடுதல் திருமண நிகழ்ச்சியின் மங்கள ஒலியைக் குறிப்பதாகும்.

"நிமித்தம் காட்டும் மரங்காளாக வேங்கையையும், உன்ன மரத்தையும் கருதினர். உன்ன மரம் தழைத்துக் காணப்பட்டால் போர் புரியச் செல்லும் வீரர்கட்கு வெற்றி கிடைக்கும் என்றும், வாடி நின்றால் தோல்வி ஏற்படும் என்றும் நம்பினர். வேங்கை மரம் பூக்கத் தொடங்கிவிட்டால் அது நன்னிமித்தமாகக் கருதப்பட்டது."[13] மணநாள் அல்லது நன்னாள் வந்துவிட்டது என்பதை அறிவிக்கவே வேங்கை பூக்கிறது என்று நம்பினர். 'நன்னாள் வேங்கை' அகநானூறு (133),"நாட்பூ வேங்கை"[14] 'கணிவாய் வேங்கை' நற்றிணை (373) என்று வேங்கையைக் மங்கலப்பூவாகக் குறிப்பிட்டுள்ளனர். குறிஞ்சி நிலமக்களின் வீட்டின் முன்பு வேங்கை மரத்தின் நிழலில் பெண்கள் குரவைக் கூத்து ஆடுவர். புறநானூறு (129) வேங்கை மரத்தின் கிளைகளில் ஊஞ்சல் கட்டி மகளிர் விளையாடினர். நற்றிணை (222) திருமணம் பேசுவது போன்ற முக்கிய நிகழ்ச்சிகளும் வேங்கை மரத்தின்அடியிலே நடத்தினர்.

கலித்தொகை (41) ஆவது பாடலில் வேங்கை மரம் பற்றிய புனைவுகள் தலைவன் தலைவியைத் திருமணம் செய்து வாழ்வதற்கு ஏற்றகாலம் என்பதைத் தெளிவுபடுத்துகின்றனர். வெறும் களவின்பம் மட்டுமே வாழ்க்கையல்ல, ஊரறிய பகற்பொழுதில் வந்து தலைவியைப் பெண்கேட்டு முறைப்படி திருமணம் செய்து வாழ்வதே தலைவியைப் பெற்றவர்களுக்கும் மரியாதையாகும். நெருப்பைப் போன்ற வேங்கை மலர்களை ஆடவரும், பெண்டிரும் தம் கூந்தலில் சூடி

மகிழ்ந்ததையும், வேங்கை மலரும் காலமே திருமணத்திற்கு ஏற்றது என்பதையும் எடுத்துரைக்கிறது. இவ்வாறு களவுக் காலத்தில் திருமண நிகழ்வைச் சுட்டிக்காட்ட வேங்கை மலர் பயன்பட்டது. இன்று வேங்கை மலர் எந்த நிகழ்ச்சிகளிலும் காணப்பாடாத நிலை உள்ளதை அறிய முடிகிறது.

**தலைவன் மீதான அன்பு**

தலைவன் வரும் வழியில் உள்ள இன்னல்களை எண்ணித் தலைவி வேறுபடுவது கூற்றாய் அமைந்துள்ளது. இத்துன்பங்களை நினைத்த நான் உள்ளத்தாலும் உடலாலும் பாதிக்கப்பட்டேன் என்றும், என் நிலையைக் கண்ட அன்னை வெறியாடும் வேலனை அழைத்தாள். என் தலையில் சூடியுள்ள காந்தள் பூவைக் காப்பதும் அரிதாக உள்ளது. தலைவன் வரும் வழியில் உள்ள பச்சிலை மரத்தை முறித்து நிற்கிற யானை, ஆசினிப் பூவைச் சிதைத்து மலர்கள் உதிர்ந்தும் காணப்படும் வேங்கை மரத்தின் அடியில் நிற்கிறது. அம் மலைக்கு உரியவன் என் தலைவன் என்பதைத் தலைவி தலைவன் கேட்குமாறு தோழியிடம் கூறுகிறாள்.

> **“பெருந்தண் குளவி குழைத்த பாவடி**
> **இருஞ்சேறு ஆடிய நுதலகொல் களிறு**
> **பேதை ஆசினி ஒசித்த**
> **வீதா வேங்கையை மலைகிழ வோற்கே”** **(நற்-51)**

என்பதில் மல்லிகையைச் சிதைத்தக் களிறு என்றதனால் தலைவியின் நலனை நுகர்ந்தவன் தலைவன் என்ற பொருள்படும். அக்களிறு சேற்றை நெற்றியில் அணிந்தது, ஊரார் தூற்றும் பழிச்சொல்லாகத் தலைவனைக் குறிக்கிறது. தன் அறியாமையால் ஆசினியை யானை முறித்தது, தலைமகனின் திருமணம் செய்யாத நெறிபிறழ்ந்த வாழ்வினைச் சுட்டுகிறது. வேங்கை மரத்தின் கீழே களிறு தங்கியிருப்பது தலைவன் களவில் தலைவியைச் சந்திப்பதைக் குறிப்பிடுகிறது.

**தலைவியின் குணச்சிறப்பு**

பாணர்கள், தாம் பரிசாகப் பெற்ற குதிரைகளில் சென்றமையால் மலை மீது அவற்றின் குளம்பு பட்டுத் தேய்ந்து போனது. அந்நெறியில் இரவலர் வருந்தாது மேலே நடந்து சென்றனர். அத்தகைய கொல்லி மலையின் மேற்கே அகன்ற இலைகளையுடைய காந்தள் மலர்களில் தேனீக்கள் சேகரித்தத் தேன் இராட்டுகள் உள்ளன. அங்குத் தெய்வம் செதுக்கி வைத்தத் திறன் மிக்க சிற்பமாகிய கொல்லிப்பாவை உள்ளது. அதனைப் போன்று தலைவி தன் அழகால் என்னைக் கொல்ல நினைக்கிறாள். அதனால் பாங்கனே நீ உதவாவிட்டால் வேறு வழியில்லை எனத் தலைவன் கூறுவதை,

> **"உரைசால் உயர்வரைக் கொல்லிக் குடவயின்**
> **அகல்இலைக் காந்தள் அலங்குபுலைப் பாய்ந்து"** **(நற்-185)**

என்கிறது நற்றிணைப் பாடல். இதனைத் தலைவனுக்கு உணர்த்திடும் வகையில்,

> **"விரிந்த வேங்கைப் பெருஞ் சினைத் தோகை**
> **பூக் கொய் மகளிரின் தோன்றும் நாட!**
> **பிரியினும், பிரிவது அன்றே**
> **நின்னொடு மேய மடந்தை நட்பே"**[15]

என்கிறார் புலவர். பரந்து விரிந்த பெரிய கிளைகளையுடைய பூத்த வேங்கையில் மயில்கள் அழகுற அமர்ந்திருந்தன. இக்காட்சியானது, மலர் கொய்யும் மகளிரைப் போலத் தோன்றியது. வேங்கை மலர் மலரும் காலம் திருமணம் நிகழ்வுக்குரிய காலம் என்றும் உணத்துவதை அறிய முடிகிறது. வேங்கை மலரைப் பெண்கள் கொய்து தலையில் சூடுவது அக்கால வழக்கம். வேங்கை மரங்களின் மீது அமர்ந்திருக்கும் மயில்கள் மலர் கொய்யும் பெண்கள் போல காட்சியளிப்பதில் திருமணக் காலம் வந்துவிட்டது என்பதையும் கபிலர் புலப்படுத்துகிறார்.

**இயற்கைப் புணர்ச்சியின் நிலை**

ஆண், பெண் பாலினக் கவர்ச்சியின் ஊற்றாக நாற்றம் மிகுந்த மலர்களைத் தொடுத்துச் சூட்டிக் கொள்வர். புணர்ச்சிக் காலங்களில் மலருக்குக்

கொடுக்கப்படும் முக்கியத்துவம் மூலம் அம்மலரினை அழகுற எவ்வகையில் சூட்டிக் கொண்டனா் என்பதை,

**“பகல்உரு உற்ற இரவுவர தயந்தோர்**

**காதல் இண்துனை புணர்மார் ஆய்இதழ்த்**

**தன்நறுங் கழுநீா் துணைப்ப இழைபுனையூஉ”**[16]

என்னும் அடிகளில் அறியலாம். மகளிர் தங்கள் காதலரைப் புணர்ச்சி கொள்வதற்கு அழகிய இதழையுடைய தண்ணறுங் கழுநீரால் மாலைக் கட்டியதாகக் குறிப்பதைக் காணலாம். தலைவி தன் காமம் வெளிப்படும் வகையில் காயா, கொன்றை, நெய்தல், முல்லை, தளவம், பிடவம் ஆகிய மலா்களை அல் பருவத்திற்கு முன்பு அழகு பெறப் புனைந்து கொண்டாள். இப்பெண்ணின் அழகைக் கண்ட ஆண்மகன் அம்மலரின் நாற்றமும் மாறுபடுவதற்கும் முன்னா் அவளைக் கூடும் பொருட்டு விரைந்தான் என்பதும் ஐங்குறுநூறு (412) குறிப்பிடுப்பட்டுள்ளது. தோழி தலைவியிடம் நம்மைப் புணர்ந்த சோலை இதுவென்றும், கடலில் நீராடிக் கூந்தலைத் துவட்டிய இடம் இதுவென்றும் நற்றிணைப் பாடலில் சுட்டியுள்ளதை,

**“நறுவீ ஞாழல் மாமலா் தாஅய்ப்**

**புன்னை ததைந்த வெண்மணல் ஒருசிறைப்**

**புதுவது புணர்ந்த பொழிலே உதுவே”** **(நற்-96)**

எனக் குறிப்பிட்டுள்ளனா். நறுமணம் கமழ்கின்ற ஞாழல், புன்னை உதிர்ந்து பரப்பிய சோலையில் புணர்ந்த தலைவன் பிரிவால் தலைவிக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்தி விரைவில் திருமணம் செய்து கொள்ள அறிவுறுத்தி இப்பாடல் அமைந்துள்ளது. மற்றொரு பாடலில்,

**“முல்லை நாறும் கூந்தல் கமழ்கொன”**[17]

என்னும் அடியில் காதலன் முல்லைப் பூவால் நறுமணம் கமழும் காதலியின் கூந்தலை நுகா்ந்தான் என்றும் குறிப்பிட்டுள்ளாா்.

களவினிற் புணரப்பட்ட பெண் மந்தி, அப்புணா்வை சுற்றம் அறிந்து விடுமோ? என்று அஞ்சித் தலையைத் திருத்தம் செய்ததைச் சுட்டி, தலைமகள்

தன்புணர்ச்சி வேறுபாட்டைத் தன் சுற்றத்தினர் அறிவரென்றஞ்சித் தலைவன் பிரிவினால் பொலிவிழந்து காணப்பட்டதைக் குறிஞ்சித் திணை,

**"செம்முக மந்தி செல்குறி கருங்கால்**

**போண்இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்" (நற்-151)**

என்கிறது. சுனையிலுள்ள குவளையின் தேன்பாயும் ஒள்ளிய நறிய பல பூக்களைச் சூடியக் கூந்தல் மெல்லணையில் துயின்று பகற்பொழுதை இனிது கழித்தும் பொழுதுபடச் செல்க எனக் காதல் கொண்டவனிடம் தோழி கூறுவதாக அமைந்ததை,

**"மல்ல வறைய மலிர்களைக் குவளைத்**

**தேம்பா யொண்பூ நறும்பல அடைச்சின**

**கூந்தல் மெல்லணைத் துஞ்சி பொழுதுபட" (அகநா.308)**

என்ற அகப்பாடல் தெளிவுறுத்துகிறது. ஆண்மகன் புணர்ச்சியின் காரணமாக மணம் மிகுந்த மலரினைச் சூட்டிக் கொண்டு வந்தான் என்பதும் இடம்பெற்றுள்ளது.

**தோழி குறி மறுத்தல்**

தலைவியைச் சந்தித்து, அவளது ஒப்பற்ற நலத்தைப் பாராட்ட வேண்டும் என்பது தலைவனின் குறிக்கோளாகும். அதனை நிறைவேற்ற முடியாமல் தோழி தடுக்கிறாள். இதனையறிந்த தலைவன் தோழியிடம், தலைவியை அடைவதற்காகத் தான் மடல் ஏறிய நிலையை வெளிப்படுத்துகிறான். தோழி குறி மறுப்பதாலேயே தலைவி தனக்குக் கிடைக்காமல் போய்விடுவாள் என்ற அச்சம் அவன் உள்ளத்தில் உள்ளதை,

**"மடல்மா ஊர்ந்து மாலை சூடிக்**

**கண்ணகன் வைப்பின் நாடும் ஊரும்" (நற்-377)**

என்ற அடிகளால் அறியலாம். 'வரையாது தலைவியைப் புறக்கணித்து விடுவானோ'? என்று அஞ்சித் தோழி குறி மறுக்கிறாள். அதனைத் தெரிந்து

கொள்ளாது தலைவன், தலைவி தனக்குக் கிடைக்க மாட்டாள் என்று அஞ்சிப் பேசுகிறான்.

மடலேறியவழி தோழியாலும் பிறராலும் அறிவுறுத்தப்பட்ட தமர் மகட்கொடை நேரவேண்டுதல் மரபாதலின் தான் மடலேறி வந்ததனைத் தோழிக்குத் தலைவன் அறிவுறுத்தினான் என்பதை,

**"வில்லாப் பூவின் கண்ணி சூடி**

**நல்லே முறுவலெனப் பல்லூர் திரிதரும்**

**நெடுமாப் பெண்ணை மடல்மா னோயே"** **(நற்-146)**

இவ்வடிகளில் குறிப்பிட்டுள்ளனர். 'வில்லாப்பூ' என்பதைப் பின்னத்தூர் அ. நாராயணசாமி விலைக்கு விற்றற்கியலாத பூளை, உழிஞை, எருக்கம் மற்றும் ஆவிரம் பூவோடு சேர்த்திருக்கிறார். மற்றொரு பாடல் தலைவன் தன்னுடைய காதலைக் கூறி,தலைவியிடமிருந்தோ, தோழியிடமிருந்தோ இசைவு பெறாதக் காரணத்தால் பனங்கருக்காலே கட்டிய பரியைத் தந்ததாகவும், ஆவிரை, பூளை என இன்ன பிற மலர்களைக் கதம்பமாகக் கட்டிய எருக்கம் பூ மாலையைச் சூட்டியதையும் நற்றிணை(152) புலப்படுத்துகிறது.

தலைவன்கொடுத்த கையுரையைத் தலைவி ஏற்றுக்கொள்ளவில்லை. இதனால் அவன் மடலேறும் நிலையை அடைந்ததாக,

**"பூளை பொலமலர் ஆவிரை வேய்வென்**

**தோனாள் எமக்கு ஈத்தபூ"**[18]

என்ற கலிப்பாடலில் அறியலாம். மூங்கிலை ஒத்தத் தோளினையுடைய பெண்ணொருத்தி தனக்குப் பூளைப் பூவும் ஆவிரையின் வெண்ணிறப் பூவும் தந்ததாக ஆண்மகன் குறிப்பிடுகிறான். மேலும்,

**"அணி அலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்**

**பிணையல் அம் கண்ணி மிலைந்து மணி ஆர்ப்ப"**[19]

என்ற அடிகள் தலைவியொருத்தி தன் மனத்தைக் கவர்ந்தாள். அவளைக் கண்ட நாள் முதல் நான் உறங்கவில்லை. அத்தகையவளைப் பெறக் கருதி ஆவிரை மலரோடு இணைத்துக் குதிரையின் இடையே மணிகள் ஆர்ப்பரிப்ப

மடலோருவதாகத் தலைவன் கூறுவதை அறியலாம். "பெண்கள் சூடிக்கொண்ட அனைத்து மலர்களும் வாசனையுடையதாக இருப்பதையும், ஆனால் ஆண்கள் சூடிக் கொண்ட மலர்களும் சில வாசனையற்றது"[20] என்பதையும் குறிப்பிட்டுள்ளனர். இதிலிருந்து களவில் மனமுள்ள மலர்கள் பயன்படுத்தப்பட்டன என்பதும், ஆண்கள் மணமற்ற மலர்களை சூடினர் என்பதும் புலப்படுகிறது.

**காதலின் பெருமை கூறல்**

காதல் வயப்பட்ட தலைவியின் உடலில் பசலை ஏற்பட்டது. அந்நோய் ஏற்பட்டதற்கான காரணத்தைத் தன் தோழியிடம் கூறுகிறாள். நறுமணம் கமழ்கின்ற பூவையுடைய ஞாழலின் பெரிய மலரும், புன்னையின் மலர்களும் வெண்மணலில் உதிர்ந்து பரவிக்கிடக்கும். அத்தகையச் சோலையில் என்னைப் புணர்ந்தவன், இன்று என்னுடன் இல்லை என்பதை,

> **"நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்**
> **புன்னை ததைந்து வெண் மணல் ஒருசிறை"** **(நற்-96)**

என்கிறது. அவருடன் நான் இன்புற்ற கடற்கரைச் சோலையின் நினைவுகளை நினைக்கும் தோறும் என் உள்ளம் உருகி மெல்லமெல்ல பசலை மேற்கொண்டு விட்டதாகக் கூறுகிறாள். காதலன் தன் தலைவியை நினைக்கின்ற போது மலர் ஒப்புமைப்படுத்தப்படுகிறது. என் தலைவி பொதியை மலையிலுள்ள வேங்கை மலரினது மணத்தையும், காந்தள் மலரினது மணத்தையும் பெற்றவள். அவள் ஆம்பல் மலரினது தண்ணியள் (குறுந்-84) எனக் கூறுகிறான். தலைவியை அடையாளப்படுத்தும் பொழுது,

> **"இரவினாலும் இன்துயில் அறியாது**
> **அரவு உறு துயரம் எய்துப-தொண்டித்**
> **தண்ணறு நெய்தல் நாறும்**
> **பின் இருங் கூந்தல் அணங்குற்றோரே"** **(ஐங்-173)**

என்கிறான். தலைவன் தன் தலைவியின் கூந்தலை நெய்தல் மலரின் நாற்றமுடையதாக அடையாளப்படுத்துகிறான். அத்தகையவளின் நாற்றம்

மிகுந்தகூந்தலில் இன்பத்தை இனி எப்பொழுதுதான் பெறப்போகிறேன்? என ஏங்குவதாகவும் அவளது இன்பத்தைப் பெற முடியாமல் நோயுற்றவனாகியதாகவும் கூறுகிறான். களவொழுக்கத்தில் இருக்கும் தலைவனைக் கற்பொழுக்கத்தில் ஈடுபடச் செய்யத் தோழி விரும்புகிறாள். தலைவனிடம் செய்தியைக் குறிப்பாகக் கழியில் மலர்ந்துள்ள தாழையில் அலைகள் மோதும் போது அலைக்கப்பட்டுத் தாது சிதறும், அத்தாதின் மணம் ஊரெங்கும் பரந்து புலவு நாற்றத்தை நீக்கும். அதைப் போன்று ஊர் முழுவதும் பேசும் அலரைப் போக்குமாறு தலைவன் பொருள் தேடி வந்து தலைவியை மணந்துகொள்ள வேண்டும் என்று கருத்துத் தெரிவிப்பதாக அமைந்துள்ளதை,

**“தடந்தாள் தாழை முள்ளுடை நெடுந்தொட்டு**

**ஆகமடற் பொதுளிய முகைமுதிர் வான்பூ**

**கோடு வார்ந்தன்ன வெண் பூத் தாழை”** **(நற்-203)**

என்னும் பாடல் வழி அறியலாம். தோழி கூறும் கூற்றாக மருதத் திணையில், புலால் நாற்றம் அலராகவும், தாழை மலரின் மணம் திருமணமாகவும் அமைந்துள்ளது. களவுக் காலத்தில் காதலர்கள் குலவி மகிழும் போது வண்ண நறுமலர்கள் பலநிலையில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தலைவன் தலைவியைப் புகழ்தல் நிமித்தம் தாமரை மலரைப் பார்த்துப் பேசுகிறான். அக இதழையுடைய தாமரையே! நீ அரும்பாகும் காலத்தில் கரும்பையொத்த மொழியாளின் மார்பின் கொங்கைக்கு ஒப்பாக மாட்டாய்! மலராகும் காலத்திலும் அவள் முகத்திற்கு ஒப்பாக மாட்டாய் என்று மொழிகிறான். இதனைப் பொய்யா மொழிப்புலவர்,

**“அரும்பாம் அளவில் தனத்தொடு ஒவ்வாய் அலராம் அளவில்**

**கரும்பா மொழிலத னத்தொடுஒவ் வாய்”**

**(தஞ்சைவாணன் கோவை-37)**

எனப் பாடிச் செல்வதில் உணர்த்தப்படுகிறது. மற்றொரு பாடலில், ஊரெல்லாம் துயில்கின்ற நடு இரவில் நொச்சி மரம் உதிர்ந்த மலர்களில் ஓசையுண்டாகும்.

களவில் தலைவி உற்றுக் கேட்டுக் கொண்டு, துயில் பெறாது தன் காதலன் வரவிற்காகக் காத்திருப்பதை,

**“மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி**

**அணிமிகு மென்கொம் பூழ்த்த**

**மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே”**[21]

எனக் காதலர்களுடைய இன்ப வாழ்வைக் களவொழுக்கத்தின் வழியே புலப்படுத்துகிறது. திருமணம் செய்தற் பொருட்டுப் பொருள் தேடத் தலைவன் பிரிந்து செல்கிறான். இதனை,

**“மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்**

**வீழ்தாள் தாழைப் பூக்கமழ் கானல்”** **(நற்-78)**

எனும் பாடல் எடுத்துரைக்கின்றது. தோழி தலைவியிடம் நெய்தலின் நீல மலர் நிறைய நுண்ணிய தாதுவைப் புன்னை பரப்பும், நம் சேரியிடத்துத் தலைவன் கையேற்பப் பொற்குவியலுடன் நின்னைத் திருமணம் செய்து கொள்ள வருவான். தாழம் பூவின் மணம் காடு எங்கும் கமழும் என்பது உன்னைத் திருமணம் செய்து தலைவன் புகழ் பரப்புவான் என்று குறிப்பால் உணர்த்துகின்றார் கீரங்கீரனார்.

**கற்பு**

கற்பு அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலைமையானது. கற்பு வழக்காவது தலைவியைக் கொடுத்தற்குரியோர் கொடுப்பக் கரணமுறையால் தலைவன் ஏற்றுக் கொள்வதாகும். களவு ஒரு குறிக்கோள் அன்று, முடிவான பயன் அன்று, ஒரு குறிக்கோளை முடிந்த பயனை அடைவதற்கு உரிய நெறியாகும். திருமணம் முடிவு பெறுவது கற்பு நெறி என்று போற்றப்படுகிறது. தமிழ்ச் சமுதாயத்தில் திருமணம் கற்பு முறையில் வந்த வரலாற்றை நற்றிணை மூலம் அறியலாம். குறிக்கோளும் அதன் செயல் வழியும் வழி இதுவெனக் காட்ட,

**“கற்பொப் படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்**

**கொடைகுரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே”[22]**

எனத் தொல்காப்பியர் தழிழ்ச் சமுதாயத்தின் மணமுறையைச் குறிப்பிட்டுள்ளார்.

**“கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**

**புணர்ந்துடன் போகிற காலை யான”[23]**

என்பதில் உடன்போக்கையும் திருமணமாகக் குறிப்பிடுகிறார். “காதல் என்பது உணர்ச்சி, கற்பென்பது ஒழுக்கம். ஒழுக்கம் களவு, கற்பென இருவகைப்படும். களவில் நட்புக் கொண்ட ஒருவனும் ஒருத்தியும் மணந்து வாழும் வாழ்வு கற்பாகும்”[19] என்பர் கற்பின் இலக்கணத்தை,

**“பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது**

**மகிழ்வும் ஊடலும் ஊட உணர்த்தலும்**

**பிரிவும் பிறவும் மருவிய தாகும்”[24]**

என்று நாற்கவிராசர் குறிப்பிட்டுள்ளார். “தான் விரும்பிய ஒருவனை அன்றிப் பிற ஆடவனை மனத்தாலும் நினையாத உறுதியே கற்பாகும்”[20] எனக் காதலும் கற்பும் (பக்-19) பற்றி உணர்த்துகின்றார். இதனை வள்ளுவர்,

**“பெண்ணிற் பெருந்தக்க யாவுளகற்பெனும்**

**திண்மைஉண் டாகப் பெறின்”[25]**

என்று கூறியுள்ளார். கற்பு என்பது ஆண், பெண் இருபாலர்க்கும் உரிய பண்பாகும்.

**கற்பு வாழ்வில் பூக்கள்**

கற்புக் காலத்தில் முல்லை, வேங்கை, புன்னை, குவளை, ஞாழல், காட்டு மல்லிகை, நொச்சி போன்ற பூக்களைத் தலைவி கூறுவதாக நற்றிணை கூறுகிறது. கற்பு வாழ்வில் முல்லை, வேங்கை, புன்னை, குவளை, ஞாழல், காட்டுமல்லிகை, நொச்சி, ஆம்பல், செங்கருங்காலி, வாடாப்பூ, கோங்கம் போன்ற

பூக்கள்கள் இடம்பெற்றுள்ளன. முல்லைத் திணைப் பூக்களான முல்லைப்பூ கற்பின் சின்னமாகச் சுட்டப்பெற்றுள்ளது.

**கற்பின் இல்லற மாண்பு**

தலைவனும் தலைவியும் ஈடுடற் புள்ளின் ஒருயிராக அமைந்த இனிய இல்லற வாழ்வில் தலைப்படும் பொழுது ஒருவரை ஒருவா் புரிந்து கொண்டு ஒருவருக்காக ஒருவா் உளம் நெகிழும் பண்பு இல்வாழ்க்கையின் இனிமைக்கும் சிறப்பிற்கும் அடிப்படையாகிறது. மக்கள் எப்பருவத்தினராயினும் எக்குலத்தவராயினும் முல்லை மலா்களைச் சூட்டுவது வழக்கமாகும். முல்லை மலா் மணத்தால் மகளிா் தம் கணவரை இன்புறுத்துவா் என்பது வாழ்வியலுண்மையாகும். குலமகளிா் தம் கற்பொழுக்கத்திற்கு அறிகுறியாக முல்லை மலா் சூடுதல் தழிழ் மரபாகும். இதனை நற்றிணை,

**“முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்” (நற்-142)**

என்கிறது. தலைவன் கூறிய சொற்பிழையாதபடி தலைவி இல்லறத்திலிருந்து நல்லறம் செய்யும் கற்பினையும் உடையவள் மென்மையாகிய சாயலையுடைய இளமை மாறாதவள் என வினை முடித்த தலைவன் பாங்கனிடம் விரைந்து செல்லுமாறு கூறுகிறான். இதனை,

**“முல்லை சான்ற கற்பின்”**[26]

**“வாணுத லரிவை முல்லை மலைய”**[27]

**“முல்லைச்சூடு மிலைச்சி”**[28]

என்பதில் அறியலாம். முல்லையைப் பல்வேறு நிலையில் கற்பிற்கு எடுத்துக் கூறியுள்ளமை புலனாகிறது. முல்லை மலர் தழிழ்நாட்டு மகளிரின் வாழ்வியலில் பெரும் பங்கு பெற்றுள்ளது. கன்னியரினும் திருமணமான மகளிா் முல்லை மலரைத் தெய்வநலச் சின்னமாகக் கருதியுள்ள்ளனா். ஒவ்வொருவரும் தம் இல்லத்தில் முல்லைக் கொடியை வளா்த்தமை ‘இல்வளா் முல்லை’ என்பதில் புலனாகிறது.

**தலைவியைக் காணும் விருப்பம்**

வினை முடிந்து திரும்பும் தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறும்

**"மீமிசைக் கலித்த வீநறு முல்லை"** **(நற்-169)**

என்ற நற்றிணைப் பாடலில் தழைத்த முல்லையின் நறிய மலரை இடையன் இரவிலே கொய்து வெளிய பனங்குருத்தின் போழுடனே சேர்த்துத் தொடுத்த அசைகின்ற மாலையின் நறுமணம் தெருவில் கமழா நிற்கும் என்பதை அறிகுறியாகக் கொண்டு கூறப்படுகிறது. வினையில் பிரிந்த தலைவன் குறித்த பருவத்தில் வருவதைத் தோழி குறிப்பால் உணர்த்துவதை,

**"குவளையொடு தொடுத்த நறுவீ முல்லை"** **(நற்-367)**

என நற்றிணையில் சுட்டியுள்ளனர். கரிய கூந்தலில் சூடிய மாலை போலக் குவளை மலரொடு இடையிட்டுத் தொடுத்த நறிய பூவையுடைய முல்லையின் அரும்பாலான பூமாலையை உடன் சென்றவர்கள் சூடிவந்துள்ளனர். ஆதலால் தலைவன் வரும் பனிக்காலத்தில் துன்பமின்றி இல்லறம் நடத்துவாயாக என்று தோழி தலைவியிம் கூறுகிறாள்.

**பரத்தையின் குணச்சிறப்பு**

பரத்தைக் கூற்றாக மருதத் திணையில்,

**"மாரிக் கொக்கின் கூரலகு அன்ன**
**குண்டுநீ ராம்பல் தண்துறை யூரன்"** **(நற்-100)**

என அமைந்துள்ளது. தலைவன் பரத்தையை விட்டுத் தலைவியின் வீட்டுக்குச் சென்றான். அதனை விரும்பாத பரத்தை தலைவிக்கு வேண்டிய தோழி முதலானோர்க்கு கேட்குமாறு கொக்கினது கூரிய மூக்குப் போன்றதும் ஆழ்ந்த நீரில் முளைத்த ஆம்பல் பூவையுடைய தண்துறை ஊரன் என்னுடைய மணம் கமழ்கின்ற கூந்தலைப் பற்றினான், என் கை வளையலைப் பற்றினான். அதனால் நான் கோபமடைந்தேன் எனக் கூறினாள். அதனைத் தலைவி அறிந்து மீண்டும் ஊடல் கொள்ளமாட்டாள். தலைவன் வேறு வழியில்லாமல் பரத்தையிடம் வருவான் என அமைந்துள்ளது.

களவொழுக்க இன்பத்தோடு தலைவியை ஏமாற்றிவிடாமல் முறையாகத் திருமணம் செய்கிறான் தலைவன். இதனை,

> **“எரிமருள் வேங்கை இருந்த தோகை**
> **இழை அணி மடந்தையின் தோன்றும் நாட!**
> **இனிது செய்தனையால் நுந்தை வாழியர்!**
> **நல் மனை வதவை அயர, இவள்**
> **பின் இருங் கூந்தல் மலர் அணிந்தோயே!” (ஐங்-294)**

என்னும் பாடல் சுட்டுகிறது. இதில் நெருப்பைப் போன்ற நிறத்தில் அமைந்த வேங்கை மலர்கள் பூத்துக் குலுங்கும் மரத்தில் மயில் ஒன்று நின்றது. இக்காட்சியானது, அலங்காரம் செய்யப்பட்ட பெண்ணொருத்தி நின்றது போல காணப்பட்டது. திருமண நிகழ்வில் தலைவியின் தலையில் தலைவன் பூச்சூட்டுவதைக் கண்ட தோழி, தலைவன் திருமணம் செய்து கொண்ட நேர்மையை எண்ணி அவளது தந்தையையும் வாழ்த்துகிறாள். திருமணம் செய்து இல்வாழ்க்கை நடத்தும் படியாக அவள் கூந்தலில் பூச்சூடினாள் என்பதைத் தோழி வாயிலாகக் கபிலர் புனைந்துரைப்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது. அக்காலத்தில் ஆடவர்கள் பொருள் தேடப் பிரிவது, நீண்ட பயணங்களை மேற்கொள்வது வழக்கமாக இருந்தது. இதனால் தலைவியைப் பிரிந்தே ஆக வேண்டும். பிரிந்தால் இளமைக்காலம் கழியும். அதற்காகப் பொருளின்றி வாழ்க்கை இல்லை. இதனால் ஆடவர் நெஞ்சம் பெரும் மனப் போராட்டத்திற்கு ஆளானதை,

> **“………………………..பொருளே**
> **வாடாப் பூவின் பொய்கை நாப்பண்**
> **ஓடுமீன் வழியிற் கெடுவ” (நற்-16)**

என்கிறது நற்றிணை. வாடாத பூ மலர்ந்திருக்கும் குளத்தில், ஓடுகிற மீன் போன தடம் உடனே மறைவது போலச் செல்வமும் நிலையின்றிப் போய் விடும். இவ்வாறு சிந்திக்கும் அவன் சில நாள் தங்கித் தலைவியைத் தேற்றிப் பிறகு பிரிவான். இவ்வாறு தலைவன் தலைவி மீது கொண்ட என்றும் வாடாத பூ போன்ற கற்பொழுக்கம் புலப்படுகிறது.

**தலைவன் பிரிவு**

கற்பொழுக்கத்தில் தலைவன் பொருள் தேடிச் செல்லுதற்காகக் தலைவியைப் பிரிய உள்ளதை அறிந்த தோழி அறநெறியைக் கூறித் தடுத்து நிறுத்துகிறாள். இதனை,

> **"முதிரா வேனில் எதிரிய அதிரல்**
> **பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்**
> **நறுமோ ரோடமொடு, உடன்எறிந்த அடைச்சிய"** **(நற்--337)**

என்பதில் அறியலாம். இளவேனிற் பருவத்தில் காட்டு மல்லிகை மலரையும் பருத்த அடியை உடைய பாதிரியின் சிறந்த மலரையும், நறுமணம் கமழும் செங்கருங்காலியின் மலரையும் ஒன்றாகச் சேர்த்து வைத்துள்ள பூ இருக்கும் தொட்டியைத் திறந்து முகர்ந்தால் வரும் மணம் போலத் தலைவியின் கூந்தலில் மணம் வீசுகின்றது. வண்டுகள் அவள் கூந்தலை மொய்க்கின்றன. இப்படிபட்ட பயனை அடையாமல் பிரிந்து செல்கின்றாயே என பாலைத் திணையினையில் புலப்படுத்துகிறாள். மற்றொரு பாடலில் தலைவன் தலைவிக்குப் பிரிவு உணர்த்தினான். களவில் தன்னை உடன்கொண்டு சென்ற போது பாலை நிலத்தில் எதிர்த்தோரைத் தொலைத்ததையும், தன்னை மணம் செய்து கொண்டதையும்,

> **"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ**
> **வைகுறு மீனின் நினையத் தோன்றிப்"** **(நற்-48)**

என்ற பாடலில் உணரலாம். கோங்கம்பூ மலர்ந்து மணம் வீசும் காடு அழகு கொண்டது, என்று கூறுவதன் மூலம் தலைவன் தலைவி முகம் மலர்ந்து மணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துவதைக், இல்லறம் சீருடன் நடைபெறுவதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ புலப்படுத்துகிறார். இவ்வாறு கற்புக் காலத்தில் வினைக்குச் செல்லும் போதும், வினை முடிந்து வரும் நிலையிலும், தலைவியின் இல்லற வாழ்வின் மேன்மையைப் பூக்கள் கொண்டு சிறப்பித்தலை அறிய முடிகிறது. இவ்வில்லறமே மனித வாழ்வின் அடிப்படையாகும். கணவன் மனைவி இருந்தோம்பி இல்வாழ்வதும், விருந்தோம்பி வேளாண்மை செய்வதும், வினையே ஆடவருக்கு உயிராய் விளங்குவதும், ஆண்மையைப் பேணுவதும்,

